பேராசிரியர் முனைவர்

## ந சுப்பு ரெட்டியார்

எளிமை, இனிமை,
தெளிவு இவர்தம்
நூல்களின்
தனிச்சிறப்புகளாகும்.




# கவிதை பயிற்றும் முறை

>




1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publication*



# கவிதை பயிற்றும் முறை

பேராசிரியர் முனைவர் ந சுப்பு ரெட்டியார்



எளிய வேளாண் குடியில் பிறந்து, தன் முயற்சியால் பயின்று,
ஆசிரியராக தொடங்கிப் பேராசிரியர் வரை உயர்ந்தவர்.
திருப்பதி திருவேங்கடவன் பல்கலைக்கழகத்தில் தமிழ்த்துறையை
உருவாக்கி அதன் தலைவராகப் பணியாற்றியவர்.
பல பல்கலைக்கழகங்களில்
சிறப்புநிலைப் பேராசிரியராகத் திகழ்ந்தவர்.

பண்டையத் தமிழ்க்கல்வி மரபில் வேரூன்றி,
நவீனக் கல்விப் பயிற்றல் முறைகளில் தேர்ந்தவர்.
பல ஆய்வாளர்களை உருவாக்கியவர்.
வாழ்நாள் முழுவதும் எழுத்தும், பேச்சுமாக வாழ்ந்தவர்.
136 [135 +1] நூல்களைப் படைத்துப் பன்முக ஆளுமையாக மிளிர்ந்தவர்.

அன்னாரின் நூற்றாண்டு (2015-2016)
108 நிகழ்வுகளாக தமிழகமெங்கும்
மிகச் சிறப்பாக கொண்டாடப் பெற்றது.

கவிதையை உணர்வூட்டிப் பயிற்றிக்
கற்போரிடம் கவிதையை துய்த்திட
உதவும் நூல்

ந சுப்பு ரெட்டியார் 100
*Centenary Committee Publications*

ISBN: 978-81-936450-6-2

eBOOK ~ மின் நூல்



# கவிதை பயிற்றும் முறை

அருங்கலைக்கோன், சடகோபன் பொன்னடி, சேவா ரத்னா,
தமிழ்ப்பேரவைச் செம்மல், கலைமாமணி, ஆய்வுத்தமிழரசு,
பொதுமறைச் செம்மல், வைணவ இலக்கிய மாமணி

**பேராசிரியர் முனைவர்**

**ந சுப்பு ரெட்டியார்**

**முன்னாள் வாழ்நாள் மதிப்பியல் பேராசிரியர்**

தமிழ் இலக்கியத்துறை
சென்னைப் பல்கலைக்கழகம்






1916 2016

**ந சுப்பு ரெட்டியார் 100**

*Centenary Committee Publications*

கவிதையை உணர்வூட்டிப் பயிற்றிக் கற்போரிடம்
கவிதைவெறியை மூளச்செய்யும் தமிழாசிரியர்கள்
அனைவர்க்கும்

# அன்புப் படையல்

காப்பியம் யாவும் கசடற உணர்ந்தோர்;
கற்பகம் எனநிழல் தருவோர்;
பூப்பயில் காடாய் மணப்பவர்; கலைகள்
புகுதரு கடல்எனப் பொலிவோர்;
நாப்பயில் தமிழால் மாணவப் பயிரை
நாடொறும் மாண்புற வளர்ப்போர்;
மாப்புகழ் தமிழா சிரியர்கட் கிந்நூல்
வழங்கினன் படையலாய்; வாழ்க !

# நூல் முகம்

புத்தகம் படிக மாலை
    குண்டிகை பொருள்சேர் ஞான
வித்தகம் தரித்த செங்கை
    விமலையை அமலை தன்னை
மொய்த்தகொந் தளக பார
    முகிழ்முலை தவள மேனி
மைத்தகு கருங்கட் செவ்வாய்
    அணங்கினை வணங்கல் செய்வாம்.[1]

—கம்பநாடன்

பல ஆண்டுகட்கு முன்னர் டி. கே. சி. பம்பாய் சென்றிருந்த போது அவரை ஃபிரான்சு நாட்டைச் சார்ந்த மாடம் சோஃபியா வாடியா (Madame Sophia Watia) என்ற அம்மையார் (அப்போது அவர் இந்தியன் P. E. N. சங்கத்தின் தலைவர்) தம் இல்லத்திற்கு அழைத்து விருந்தளித்து உபசரித்தாராம். இலக்கிய மேதையாகிய இப் பெருமாட்டி பன்மொழிப் புலமை வாய்ந்தவர் என்றாலும், தமிழ்மொழியை அறியாதவர். அம்மையாருடன் அளவளாவிக் கொண்டிருந்தபோது டி. கே. சி. திருவாசகத்திலிருந்து ஒரு திருப்பாடலை ஒரு தரம் பாடிக் காட்டி விளக்கம் கூறினார்.

அப்பார் சடையப்பன்
    ஆனந்த வார்கழலே
ஒப்பாக ஒப்புவித்த
    உள்ளத்தார் உள்ளிருக்கும்
அப்பாலுக் கப்பாலை
    பாடுதுங்காண் அம்மானாய்.[2]

என்பது அப்பாடல். அவர் கூறிய விளக்கம் இது:

"ஒரு குடத்துத் தண்ணீரை வீட்டுக்குக் கொண்டு வந்து வீட்டிலும் மச்சுப்படியேறி மாடிக்குக் கொண்டு சேர்ப்பதற்குள் திணறிப் போகிறோம் நாம். ஆனால், இறைவனோ கடலி

1 கம்பரா, காப்பு-3
2 திருவா, திருவெம்-11

லுள்ள நீரையெல்லாம் ஆவியாக மாற்றுகிறான். அதை வானத்திலே கொண்டுபோய்ச் சேமித்து வைத்துப் பக்குவக் காலம் வந்தால் மழையாகக் கொட்டுகின்றான். இந்த அரிய சக்தியையும் கருணையையும் உணர்ந்து வியந்த நம் முன்னோர்கள் சிவபெருமான் தன் தலைமேலே கங்கையையே குடமாக வைத்து இருக்கிறான் என்று கற்பனை செய்திருக்கிறார்கள். 'அப்பு ஆர் சடையப்பா!' (அப்பு—நீர்) என்று அவனைப் பாராட்டியிருக்கிறார்கள். தம்மைமே அவனிடம் ஒப்படைத்து விடுகிறார்கள். அப்படிப்பட்ட ஞானிகளுடைய உள்ளத்திலேயே அவன் சப்பணம் போட்டு உட்கார்ந்து கொண்டு இருக்கின்றான். அதே சமயத்தில் இத்தகைய ஞானம் இல்லாதவர்களால் அறியப் படாதவனாயும் அண்டமும் கடந்து அகண்டமும் கடந்து எங்கேயோ தூரத்தொலைவில் உள்ள பேர்வழியாகவும் இருக்கிறான் என்கிறார் டி.கே.சி.''[3]

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த சோஃபிய வாடியா மணிவாசகரது மேற்காட்டிய பாடலைப் பல தடவை டி.கே.சி-யைப் பாடும்படிக் கேட்டு அநுபவித்து விட்டு இறுதியில் "'தமிழ் மொழியில் ஓர் அபூர்வ மந்திர ஆற்றல் இருக்கிறது. பாட்டின் ஒலியைக் கேட்கும் போதே ஓர் ஆனந்த மயக்கம் ஏற்படுகிறது'' என்கிறார். இப்படி மொழி அறியாதவர்களையும் 'கவிதை அநுபவம்' பெறச் செய்து விடுகின்றார் டி.கே.சி. டி.கே.சி. கையாண்டமுறை தமிழ்க் கவிதை பயிற்றும் ஆசிரியர்கட்கு ஒரு வழிகாட்டி முறையாக அமைதல் வேண்டும்.

சில ஆண்டுகட்டு முன்னர் யான் ஆந்திர மாநிலத்திலுள்ள நெல்லூருக்கு ஓர் அலுவல் நிமித்தம் சென்றிருந்தேன். அது ஜூன் மாதம். ஆந்திர நண்பர் ஒரு பழ விருந்து அளித்தார். விருந்து சாமானியமானதே. இரண்டு வெள்ளித் தட்டுகளில் தட்டுக்கொன்றாக இரண்டு மாங்கனிகளை வேலைக்காரன் ஒருவன் எங்கள் முன்னிருந்த மேசையின்மீது கொண்டு வந்து வைத்தான். நண்பர் பழத்தைக் கையில் எடுத்துக் கொண்டு அதைத் தடவிக் கொண்டே நெருடினார். என்னை நோக்கி 'தினண்டி' (தின்னுங்கள்) என்றார். நான் கத்தி ஒன்று வரும் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். அதற்குள் நண்பர் பழத்தின் அடிப்புறத்திலிருந்து காம்பை நீக்கித் தொளையிட்டுப் பழத்தை

3 தகவல்: (அமரர் திரு. தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான் 'ரசிகமணி டி. கே. சி' என்ற நூலிலிருந்து.

அப்படியே உறிஞ்சிக் குடித்தார். பழரசத்தைப் பருகின விதம் என்னை வியக்க வைத்தது. பின்னர் எங்கள் முன் இருக்கும் பழம் 'ரசவருக்கத்தைச்' சேர்ந்தது என்றும், இந்த வகைப் பழத்தை இப்படித்தான் உண்ண வேண்டும் என்றும் விளக்கினார். பின்னர் நானும் அவ்விதமே பழத்தை நெருடி அதன் சாற்றை அவர் பருகின முறையிலேயே உறிஞ்சிப் பருகினேன். அற்புதமான 'பழ அநுபவம்' பெற்றேன். அப்போது டி.கே.சி.யின் நினைவுதான் வந்தது. டி.கே.சி. ஒரு பாடலைப் பலமுறை படித்து—இல்லை, பாடி—இறுதியில் மிகக் கம்பிரமாகப் பாடி கேட்போரைக் கவிதை அநுபவத்தின் கொடுமுடிக்கு இட்டுச் செல்வதை நினைத்துக் கொண்டேன். மாம்பழச்சாறும் டி.கே.சி. தரும் கவிதை ரசமும் ஒன்றுபோல் இருந்து இன்றும் என்னை மனத்தால் சுவைக்க வைக்கின்றது.

கவிதை பயிற்றலில் பல ஆசிரியர்கள் என் மனக்கண் முன் நிற்கின்றனர். முதலாவது நான் முசிறி உயர்நிலைப் பள்ளியில் (1933) ஐந்தாம் படிவத்தில் (பழைய பத்தாவது) படித்துக் கொண்டிருக்கும்போது தமிழ்க் கற்பித்தவர் திரு. ஐம்புலிங்கக் குருக்கள். அவர் கவிதை கற்பித்த முறை இன்றும் என் நினைவில் பசுமையாகவே உள்ளது. அவர் எழுப்பிய உணர்ச்சிதான் அடிப்படையில் என்னைத் தமிழ் வெறியனாகச் செய்தது. பின்னர் எவரும் கவிதையை அங்ஙனம் பயிற்றவில்லை. பின்னர் நான் சைதையில் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியில் (1940-41) பயின்றபோது கல்வி உளவியலை இதே பாணியில் உளம் கவரும் முறையில் பயிற்றியவர் பேராசிரியர் குருசாமிரெட்டியார் அவர்கள். அவர் கற்பிப்பது ஓமியோபதி மாத்திரையை உண்பதுபோல் இருக்கும். அவர் பொழிவுகளை உன்னிப்பாகக் கவனிப்பவர்களில் யான் ஒருவன்; பெரும் பயன் பெற்றேன். உளவியல் என் ஆன்மாவுடன் ஒன்றி விட்டது.

அடுத்து, நான் ஆசிரியத் தொழிலில் இறங்கிய பிறகு (1941) (தலைமையாசிரியர், துறையூர் உயர்நிலைப் பள்ளி) அப்போது சேலம் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றிய திரு வீ. உலக ஊழியனாரின் கவிதைப்பற்றிய சொற்பொழிவுகள் என் உள்ளத்தைக் கவர்ந்தன. பலமுறை சொற்பொழிவுகட்கென வரவழைத்துத் துறையூரில்(1943) 'பொருநராற்றுப்படை' பாடங்கேட்டேன். பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம் முழுதும் அவருக்கு மனப்பாடம். பொருநராற்றுப் படையில் பல அடிகளை இசையுடன் பல முறைப் படித்து, நிறுத்த வேண்டிய இடத்தில் நிறுத்தும்போது துணிக் கடையில் நல்ல விற்பனையாளர் பல்வேறு

வண்ணத் துணிகளை வேகமாக விரித்துக் காட்டும்போது அவை நம் கண்ணைக் கவர்வது போல் உலக ஊழியனாரின் பாட்டிசை என் கருத்தைக் கவர்ந்தது. சொற்பொருளை ஏற்ற இடங்களில் கூறிக் கொண்டே பாட்டைப் பலமுறை பாடியே பொருநராற்றுப் படையை அற்புதமாகக் கற்பித்து விட்டார். இவர் ஒரு மேடையில் "எண்டருங்கடை" (அயோ. கைகேயி சூழ்வினை-31) என்ற கம்பன் பாட்டையும் "தையல் துயர்க்கு" (நளவெண்பா-2:107) என்ற பாடலையும் இசையுடன் பாடி ஒப்பிட்டு விளக்கம் தந்தது இன்றும் அவ்விளக்கத்தைக் கேட்பது போன்ற உணர்வு ஏற்படுகின்றது. அடுத்து சென்னையில் (1944இல்) அகநானூறு-களிற்றியானை நிரையில் 50 பாடல்களைக் கற்பித்தவர் காஞ்சிபுரம் தொண்டை மண்டல முதலியார் மடத் தலைவர் தவத்திரு. ஞானப்பிரகாச சுவாமிகள். இவர்பூர்வ ஆசிரமம் திரு. முத்து சு. மாணிக்கவாசக முதலியராக இருந்தபோது சென்னைப் பல்கலைக்கழகம் சீறாப்புராணம் பதிப்பிக்கும் பணியில் ஈடுபட்டு இருந்தார். அப்போது பன்மொழிப் புலவர் திரு. வே. வெங்கடராஜுலு ரெட்டியார் இல்லத்தில் இவரிடம் பாடம் கேட்கும் வாய்ப்பு ஏற்பட்டது. கடின சொற்களின் பொருளை விளக்கிக் கொண்டே பாடல்களை இசையுடன் பாடுவார். பாடலின் இறுதியடியைப் பிடித்துக்கொண்டுகீழிருந்து மேலே போவார். சரியாக முடிச்சினை அவிழ்த்துவிட்டுச் சிவகாசி வெடிச்சரங்களை ஆட்டும் போது வெடிகள் தனித்தனியாக ஓடுவதுபோல், இவர் பாடலைக் கீழிருந்து மேலே பாடிக் கொண்டு போகும்போது சொற்களின் பொருளும் பாட்டின் முழுப் பொருளும் பாடலிலிருந்து கட்டவிழ்த்துக் கொண்டு என் மனதில் பாய்ந்து விடும். பின்னர் (1949இல்) காரைக்குடியில் நடைபெற்ற கம்பன் திருநாளுக்குச் சென்றிருந்தபோது டி. கே. சி. 'கானாள நிலமகளைக்' (யுத்த மீட்சி-223) என்ற கம்பராமாயணப் பாடலையும 'கிளைகளாய்க்' (குற்றாலக் குறவஞ்சி பாயிரம்-3) என்ற திரிகூடராசப்ப கவிராயரின் பாடலையும் இரண்டு பொழிவுகளில் விளக்கினமை இன்று கேட்பதுபோல் உள்ளது. பேச்சைக் கேட்ட பலர் வீட்டிற்குத் திரும்பும்போது பாடல்களைச் சொல்லிக் கொண்டே போவதையும் கண்டேன். பாடல்கள் கேட்போருக்கு மனப்பாடம் ஆகிவிட்டன! இவற்றையெல்லாம் அறியும் நாம் ஆந்திர அன்பர் (ஏன்? நானும் கூடத்தான்) மாம்பழத்தை உண்ணும் முறையை நினைத்துக் கொள்ளவேண்டும்.

நான் காரைக்குடியில் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியில் தமிழ் பயிற்றும் முறைப் பேராசிரியனாக இருந்த பொழுது (1950—60)

கவிதை பயிற்றும் முறையைப்பற்றிப் பலவாறு சிந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. கல்வி உளவியல், பயிற்றும் முறை இவை பற்றிய பல மேனாட்டு நூல்களைப் பயின்று பல கருத்துகளை அறியவும், அவற்றைச் சிந்திக்கவும் ஒரு கட்டாயம் ஏற்பட்டது. சுற்றுப்பக்க ஊர்களிலுள்ள பல உயர்நிலைப்பள்ளிகட்கு பி. டி. பயிற்சிபெறும் மாணாக்கர்களை இட்டுச்செல்லும் பொழுதெல்லாம் பல தமிழாசிரியர்கள்கவிதை பயிற்றுவதை நேரில்காணவும் வாய்ப்புகள் கிடைத்தன. இந்த வாய்ப்புகளில் காரைக்குடி நகரான்மைக் கழக உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் திரு. பூ. அமிர்தலிங்கம் அவர்களும், பள்ளத்தூர் உயர்நிலைப் பள்ளித் தமிழாசிரியர் திரு. முத்து வேங்கடாசலம் அய்யர் அவர்களும் கவிதை பயிற்றின முறை என உள்ளத்தைக் கவர்ந்தது. மனத்தில் இவற்றையெல்லாம் நிறுத்தி எழுதப்பெற்றதே இந் நூல். இது கவிதை அநுபவம் (மே 1961) என்ற என் நூலின் மூன்றாவது பகுதியாக அமைந்திருந்தது. இப்போது இது தனி நூலாக உலவத் தொடங்கியுள்ளது இதிலுள்ள கருத்துகள் கவிதை பயிற்றுவிப்பார்குப் பெருந்துணை புரியும் என்பது என் அதிராத நம்பிக்கை.

இதனை அழகுற அச்சிட்டு உதவியவர் என் அருமை நண்பர் திரு. முஸ்தபா அவர்கள் (மீரா பௌண்டேஷன், AE—103 அண்ணாநகர் சென்னை-40,அச்சக உரிமையாளர்).நல்ல தமிழறிஞர். இதனை அழகுறக் கட்டமைத்துக் கற்போர் கரங்களில் தவழச் செய்தவர் கந்தனடிமை எஸ்.பி. சண்முகம் பிள்ளை அவர்கள் (Ganesh Printing and Binding 6, ஃபிலிப்ஸ் தெரு, சென்னை -600 040என்ற நிறுவனத்தின் உரிமையாளர்). இவர்கள் இருவருக்கும் என் உளங்கனிந்த நன்றியைப் புலப்படுத்திக் கொள்ளுகின்றேன்.

நான் காரைகுடியிலிருந்துகொண்டு இந்நூலை எழுதிய போது ஓரிரண்டு ஆண்டுகளில் என்னை ஆட்கொள்ள இருந்த ஏழுமலையப்பன் கலைவாணியின் அருளாக இருந்து எனக்குத் துணை செய்தான் என்பது என் திடமான நம்பிக்கை. மணிவாசகப் பெருமான்,

அன்றே என்றன் ஆவியும்
உடலும் உடைமை யெல்லாமும்
குன்றே யனையாய்! என்னையாட்
கொண்ட போதே கொண்டிலையோ?

என்று (திருவா. குழை. பத்து-7) கூறியதுபோல், 'புகல் ஒன்று இல்லா அடியேன் உன், அடிக்கீழ் அமர்ந்து புகுந்தேனே' (திருவாய் 6 10:10) என்று கூறி அந்த நாளை (ஆகஸ்டு 1, 1960) இன்று நினைந்து பார்க்கின்றேன். அன்றிருந்து இன்றுவரை எனக்கு உடல்நலத்தையும் மனவளத்தையும் நல்கி வரும் ஏழுமலையப்பனை மனம் மொழி மெய்களால் வணங்கி வாழ்த்துகின்றேன்.

தெளிவுறவே அறிந்திடுதல்; தெளிவுதர
மொழிந்திடுதல்; சிந்திப் பார்க்கே
களிவளர உள்ளத்தில் ஆனந்தக்
கனவுபல காட்டல்; கண்ணீர்த்
துளிவரஉள் உருக்குதல்இங் கிவையெல்லாம்
நீஅருளும் தொழில்க ளன்றோ?
ஒளிவளரும் தமிழ்வாணீ! அடியனேற்கு
இவையனைத்தும் உதவு வாயே.[4]

—பாரதியார்

'வேங்கடம்'
AD-13, அண்ணாநகர்
சென்னை-600 040
7—9—1983.

ந. சுப்புரெட்டியார்

4. பா.ச. 2.28: 154

# உள்ளுறை


| | | |
|---|---|---|
| | அன்புப் படையல் | iii |
| | நூல் முகம் | v |
| இயல் | | பக்கம் |
| 1. | மொழிப்பாடத்தில் கவிதை | 1 |
| 2. | கற்பிப்பவர் தகுதி | 7 |
| 3. | கவிதையைத் தேர்ந்தெடுத்தல் | 19 |
| 4. | கவிதை அறிமுகம் | 29 |
| 5. | கவிதையைப் படித்தல் | 41 |
| 6. | கவிதை விளக்கம் | 48 |
| 7. | கவிதையை வாய்விட்டுப் படித்தல் | 63 |
| 8. | அழகும் உண்மையும் | 79 |
| 9. | கவிதையை மனப்பாடம் செய்தல் | 92 |
| 10. | நான்கு யோசனைகள் | 104 |
| | பின்னிணைப்பு-1: பயன்பட்ட நூல்கள் | 120 |
| | பின்னிணைப்பு-2: கலைச்சொல் அகராதி | 123 |
| | பின்னிணைப்பு-3: பொருட்குறிப்பு அகராதி | 127 |
| | பேராசிரியர் ரெட்டியாரின் நூல்கள் | 133 |

# மொழிப்பாடத்தில் கவிதை

கல்வியைப்பற்றியும் நடைமுறைக் கல்வியைப்பற்றிப் பலர் கூறும் கருத்துகளைப்பற்றியும் நாம் சிந்தித்தால், இரண்டிலும் உள்ள குறைகள் ஒரே காரணத்தால் எழுகின்றன என்பதை அறிவோம். கற்பித்தலில் நேரிடும் கேடுகள் 'கல்வி' முழுவதிலும் பரவுகின்றன; பல அறிஞர்கள் கல்வியைப்பற்றிக் கூறும் குறைகள் யாவும் கற்பித்தலிலிருந்தே எழுகின்றன. பெரும்பாலான ஆசிரியர்கட்குக் கற்பித்தலில் தம்முடைய நோக்கம் என்ன என்பதைப்பற்றித் தெளிவான கருத்தே இருப்பதில்லை: தாம் மேற்கொள்ளும் முறைகளும் சரியானவைதாமா என்பதுபற்றியும் அவர்களிடம் தெளிவான எண்ணம் இல்லை.

**பல்வேறு தவறுகள்:** ஆனால், கல்வியைப்[1] பற்றித் திறனாய்ந்து குறைகளை எடுத்துக் காட்டுவோரிடம் திட்டமான கருத்துகள் உள்ளன; கல்வியால் என்ன விளைய வேண்டுமென்று அவர்கள் எடுத்துக்காட்டிக், கற்பிக்கும் ஆசிரியர்களையும் தேர்வுகளில் வெற்றியடைந்து வெளிவரும் மாணாக்கர்களையும் குறை கூறுகின்றனர். ஆனால், பெரும்பான்மையான திறனாய்வாளர்கள்[2] - கல்வியைப்பற்றிக் குறைகூறுவோர் — ஆசிரியர்களைப்போலவே குறைகளையுடையவர்கள்! அவர்கள் ஓர் உண்மையைச் சரியாகப் புரிந்து கொள்வதில்லை. கல்விக்குப் பொறுப்புள்ளவர்கள் ஆசிரியர்களைச் செய்யும்படி ஏவுவது ஒன்று; இத் திறனாய்வாளர்கள் ஆசிரியரிடம் எதிர்பார்ப்பது பிறிதொன்று. கல்வியை இயக்குவோர் ஒன்றுகூற, இத்திறனாய்வாளர் வேறொன்றை எதிர்பார்த்தால் ஆசிரியர்கள் என்ன செய்ய முடியும்? தம்முடைய நோக்கம் யாது என்பதுபற்றித் தெளிவாக அறிந்து கொள்ளாத ஆசிரியர்களும் தவறுகின்றனர்; ஆசிரியர்களின் நோக்கம் யாதாக இருக்க வேண்டும் என்பதைப் புரிந்து கொள்ளாத திறனாய்வாளர்களும் தவறு இழைக்கின்றனர். தாம் செல்ல வேண்டிய திசையை அறியாது ஆசிரியர்கள் சென்று கொண்டேயிருந்தால், அவர்கள் சரியான இடத்தை அடைவது எங்ஙனம்? ஆசிரியர்கள் எத்திசையில் செல்ல வேண்டும் என்பதுபற்றிப் புரிந்து கொள்

1. கல்வி - Education. 2 திறனாய்வாளர் - Critic

ளாமலேயே, அவர்கள் ஒரு குறிப்பிட்ட இடத்தை அடைய வில்லையென்று குறைகூறும் திறனாய்வாளர்களைப்பற்றி நாம் என்ன சொல்வது என்பதுதான் தெரியவில்லை. எல்லாம் காலத்தின் கோலம்; 'குடியரசு முறை'யால் விளையும் 'அற்புதங்கள்'! யார் எதை வேண்டுமானாலும் சொல்லலாம் என்பதால் ஏற்படும் விளைவுகள்!! ஒவ்வொரு துறையைப்பற்றியும் அத்துறை வல்லுநர்களே எதையும் கூறுவதற்கு உரியவர்கள் என்ற நியதி இருந்தால் இத்தகைய 'வேண்டாத கருத்து வேறுபாடுகள்' எழுவதற்கு வாய்ப்புகளே ஏற்படா. மருத்துவத்துறை, பொறியியல் துறை, வேறு பல நுணுக்கமான துறைகளில் நடைபெறும் வேலை நுணுக்கத்தைப்பற்றி அத்துறைகளைச் சாராதவர்கள் எதையும் சொல்வதில்லை. அவற்றில் குறை கூறவும் அவர்கட்குத் தெரியாது. ஆனால் கல்வியைப்பற்றி எவரும் எதை வேண்டுமானாலும் கூறுகின்றனர். இதற்குக் காரணம் என்ன? பெரும்பாலான ஆசிரியர்கட்குத் தம் துறையில் அதிக நம்பிக்கை இல்லை. கல்வித் துறையில் தொழில் நுட்பம் எத்துணையளவு ஆராய்ச்சிகளால் வளர்ந்துள்ளது என்பதை அறிந்து கொண்டு அதற்கேற்றவாறு தாம் எங்ஙனம் பணியாற்ற வேண்டும் என்பதை அவர்கள் புரிந்து கொள்வதே இல்லை. இந்நிலையால்தான் கல்வித்துறையில் 'சொல்லொணா அவலநிலை' ஏற்பட்டுள்ளது; ஏற்பட்டும் வருகின்றது.

**பாடத்திலும் குறிக்கோள் நிலை:** ஒரு பாடம்[3] கல்வி ஏற்பாட்டில்[4] ஏன் சேர்க்கப்பெறல் வேண்டும் என்பதை ஆசிரியர்கள் அறிந்து கொள்ள வேண்டியது மிகவும் இன்றியமையாதது. எய்த வேண்டிய முடிவினைத் தெளிவாக அறிந்து கொண்டால்தான் அதற்கேற்றவாறு கற்பித்தலைத் தாம் உருவாக்க முடியும். குழந்தையின் கல்வியில் ஒரு பாடம் எவ்வாறு வளர்ச்சிபெறுதல் வேண்டும் என்பதை ஆசிரியர்கள் அறிந்து கொள்ளாதவரையில் தாம் என்ன செய்ய வேண்டும் என்பதை ஆசிரியர்கள் புரிந்து கொள்ளாத வரையில், அவர்கள் நடைமுறையிலுள்ள கல்வி ஏற்பாட்டைக் கொண்டுசெலுத்த முடியாது. ஆனால், "முடிவு குறிக்கோள் நிலையில்[5] இருந்து அதை என்றுமே அடைய முடியாதிருந்தால், என்ன செய்வது?" என்று சிலர் வினவலாம். நாம் அடைய வேண்டிய முடிவுகள் யாவும் குறிக்கோள் நிலையில்தான் இருத்தல் வேண்டும். மானிட இனத்தின் சிறந்த பகுதியினர் யாவரும் அடைய முடியாத குறிக்கோள்களை

3. பாடம்-Subject 4. கல்வி ஏற்பாடு- Curriculum.

5. குறிக்கோள் நிலை-Ideal level.

எண்ணியே, அவற்றை எப்படியும் அடைந்தே தீரவேண்டும் என்று கருதியே, தம்முடைய வாணாட்களைக் கழிக்கின்றனர். இதை நன்கு தெரிந்து கொண்டே அவர்கள் அங்ஙனம் தம் முடைய காலத்தைக் கழிக்கின்றனர். தொடுவானத்தை நோக்கிச் செல்வோர் அதனை ஒரு நாளும் எட்டி அடைய முடியாத நிலையைப் போன்றே இவர்கள் வகுத்துக்கொண்டே குறிக்கோளும் உள்ளது என்பது அவர்கட்கு நன்கு தெரியும். அங்ஙனமே, ஆசிரியரும் தம்முடைய குறிக்கோளை அடைதல் வேண்டும் என்ற நோக்கத்தால் உந்தப்பெற்றுத் தம்முடைய முழு ஆற்றல்களையும் அதில் செலுத்த வேண்டும்; தம்முடைய முழு முயற்சியையும் கொண்டு செலுத்த வேண்டும். அவர்களுடைய வெற்றியை எவ்வாறு அளப்பது? எந்த அளவுகோலைக் கொண்டு அளப்பது? ஆசிரியரின் குறிக்கோளை அடைவதற்கு இன்னும் எவ்வளவு தொலைவு உள்ளது என்று அளவிடுதலைவிடத் தம்முடைய மாணாக்கர்களை ஆசிரியர் எவ்வளவு உயரம் உயர்த்தியுள்ளார் என்று அளவிட்டு அறிவதே சிறந்தது. மாணாக்கர் முன்னிருந்த நிலையிலிருந்து எவ்வளவு உயர்ந்துள்ளனர் என்று காண்டலே வேண்டப்பெறுவது; விரும்பப்பெறுவது. ஆசிரியர் தம்முடைய கற்பித்தலில் மேற்கொள்ளும் எல்லா முறைகளையும் இந்த அளவுகோலினைக் கொண்டே அளத்தல் நலம் பயக்கும். இதனையே அவர்கள் நடைமுறையில் மேற்கொள்ளுதல் வேண்டும்.

**கவிதை பயிற்றலின் நோக்கம்:** கவிதை கற்பித்தலிலும் இத்தகைய சிறந்ததொரு குறிக்கோளை வகுத்துக்கொள்ள வேண்டியது தாய்மொழியாசிரியர்களின் தலையாய கடமையாகும். கவிதையைப் பயிற்றலே தாய்மொழிப் பாடத்தில் உயிர்நிலை போன்ற பகுதி. இதில் ஆசிரியர்கள் தாம் வகுத்துக்கொண்ட குறிக்கோள் நிலையை அடையவேண்டும் என்று முயல்வதே தமிழ்க் கவிதைகளைத் தக்க முறையில் பயிற்றுவதாகும். தாய்மொழியாசிரியரின் வேலையைச் சோதிக்க வேண்டுமாயின், கவிதை கற்பித்தலில் அவருடைய வேலையைச் சோதிப்பதே சிறந்தது. தாய்மொழி பயிற்றலில் இப்பகுதியே மிக உயர்ந்தது; அவருடைய பெரும்பான்மையான காலத்தையும் ஆற்றலையும் இப்பகுதியே விழுங்குகின்றது. கவிதை கற்பிப்பதில் வெற்றி காணும் தாய்மொழியாசிரியர் தம்முடைய துறையின் ஏனைய பகுதிகளிலும் வெற்றியடைவார் என்பது ஒருதலை. ஆனால், ஒன்று; ஏனைய பகுதிகளில் வெற்றியுடன் பணியாற்றிக், கவிதையைப்

பயிற்றுவதில் வெற்றியடையாது போகவும் கூடும். கவிதை பயிற்றல் கடினமான துறை; தம்முடைய உணர்ச்சிகளையும் ஆற்றல்களையும் ஒருங்கு திரட்டிக் கொட்ட வேண்டிய துறை.

பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கவிதை பயிற்றப்பெற வேண்டியதற்குக் காரணம் என்ன? கவிதை ஒருகலை. கல்வி நிலையங்களில் மாணாக்கர்களிடம்முருகுணர்ச்சியை வளர்ப்பதற்காகவும், தாம் காண்பனவற்றில் அழகைக் கண்டு இன்புறும் பயிற்சி பெறுவதற்காகவும் கவிதைப்பகுதி பாடத்திட்டத்தில் சேர்க்கப்பெறுகின்றது. இந்த இரண்டு நோக்கங்கட்கு மேலும் கவிதை பல விளைவுகளை உண்டாக்குகின்றது என்பது உண்மையே: ஆனால், அவை மாணாக்கர்கள் அழகினை உணரும் அளவிற்கேற்பவே உண்டாகும். கவிதை அழகு தருவதுடன் நின்று விடுவதில்லை: அது வாழ்க்கை உண்மைகளையும் தருகின்றது. வாழ்க்கையைப்பற்றிய திறனாய்வுதானே கவிதை? கவிதையில் 'அழகே உண்மை'; ஏனைய கலைகளிலுள்ளதைப் போலவே, கவிதையிலும் அழகின்மூலமே உண்மையை அடைகின்றோம். அழகைப்பற்றி எண்ணாத இடம் இல்லை. அழகின் மாட்டு உலகம் கொண்டுள்ள பற்றைப்போல் வேறு எதன் மாட்டும் அது கொள்ளவில்லை. 'அழகு, அழகு' என்று உலகம் அழகில் உறைந்து கிடக்கின்றது. ''குருமணி உறைந்து உருண்டு திரண்டாலென்ன இருள் சூழ்ந்த கொண்டல்முடியும், செஞ்ஞாயிற்றின் எழுகதிர் உமிழும் இளவெயிலில் ஒன்றி அழகு காட்டும் பச்சைப் பசுங்காட்டுப் போர்வையும், மணி கொழித்து முழவார்த்துச் சங்கொலிக்கும் அருவியணியும், வண்டு யாழ்முரலலும் குயில் பாட்டும், மஞ்ஞையாட்டுங் கொண்ட ஒரு மால் வரைக்கு''[6] அழகு தந்தவர் யார்? ஞாயிறும் திங்களும் விண்மீன்களும் எவரால் இயற்றப்பெற்றன? நெருப்புக்கு வெம்மையும், புனலுக்குத் தண்மையும் ஊட்டியவர் யார்? இவை யாவும் இயல்பாக அரும்பியவை; 'கைபுனைந் தியற்றாக் கவின்பெறு வனப்பைக்' கொண்டவை.

முருகுணர்திறன்: இத்தகைய அழகைக் காணும் முருகுணர்ச்சியை நாம் மாணாக்கர்களிடம் வளர்க்கக் கூடுமாயின், இவர்கள் கல்வி நிலையங்களைவிட்டு வெளிவந்த பிறகும் யாண்டும் எதிலும் அழகினையே காண்பர்; ஒலியிலும் ஒளியிலும், சிந்தையிலும் செயலிலும் அவர்கட்கு அழகு தட்டுப்படும். இந்நிலை எய்தப்பெற்றால், கல்வியின் விழுமிய பயனையே இவர்கள்

6. திரு. வி. க.: முருகன் அல்லது அழகு-பக் (47-48)

அடைந்தவர்களாவர். இவர்கள் வாழ்க்கையில் புகுந்து நாட்டிற்கும் சமூகத்திற்கும் சிறந்த பணியாற்றி உயர்ந்த குடிமக்களாகத் திகழ்வர். நாம் வாழும் இவ்வுலகினைத் திரும்பப் படைத்து விடுவர். முருகுணர்ச்சி பெற்ற குடிமக்கள் நம்முடைய நகர்ப் புறங்களில் காணும் அருவருக்கத்தக்க காட்சிகளைக் காண்பதற்குச் சகியார். தீயநாற்றம் வீசும் சாய்க்கடைகள், தூசுகளும் புழுதிகளும் எழுப்பும் தெருக்கள், குப்பைக் கூளங்கள் நிறைந்த அங்காடி வீதிகள், காணவும் சகிக்க முடியாத வறியர் வாழும் குடிசைகள் இவர்கள் கவனத்தைப் பெற்றுச் சிறப்படையும்; இவர்கள் நகர்த் தந்தையர்களாகத் தேர்ந்தெடுக்கப்பெறுங்கால், நகரங்களைப் பல்லாற்றானும் ஒல்லும் வகையில் வனப்புடையதாகச் செய்வர்; கண்டோர் மகிழும் வண்ணம் கவின்பெறச் செய்து விடுவர்.

மக்கள் தக்க கல்வியைப் பெற்றால்தான் சமூகம் சிறந்த முறையில் முன்னேற்றம் அடையும் என்பதைச் சமூகச் சீர்திருத்த வாதிகள் முழு மனத்துடன் ஒப்புக்கொள்வர். தாம் என்னதான் பாடுபட்டாலும் மக்கள் தக்க கல்வி பெறாவிடின், தம் தொண்டால் நற்பயன் விளையாது என்பதை இவர்கள் நன்கு அறிவர். புறநிலையில் காணும் கூறுகளைச் சீர்திருத்தம்செய்யவேண்டியது மிகவும் இன்றியமையாதது என்றிருந்த போதிலும், அகக்கூறுகளைத் திருத்தவேண்டியது அதனைவிட முக்கியமானது. நகர்ப் புறங்களை வனப்பாகச் செய்வதைவிடக் குடிமக்களின் மனத்தை—உள்ளத்தை—விழுமியதாகச் செய்வது முதலில் வேண்டப் பெறுவது. கவினைக் காணும் மனப்பான்மையையும் வனப்பை விழையும் உள்ளத்தையும் மக்களிடம் வளர்த்துவிட்டால் அனைத்தும் சீர்படும். ஒரு சமூகத்தினரிடையே உடல் தூய்மையையும், எண்ணத் தூய்மையையும், செயல் தூய்மையையும் ஏற்படுத்துவதென்பது குதிரைக் கொம்பு; நம்மால் செய்ய முடியாதது. ஆனால், அச்சமூகத்தினரிடையே இத்தகைய கூறுகளில் நல்ல மனப்பான்மையை உருவாக்கக்கூடுமாயின், அவர்கள் அழகிற்குப் புறம்பானவற்றையெல்லாம் வெறுத்தொதுக்குவர்; அருவருக்கத் தக்கனவற்றைக் கண்டு பொறுக்கவும் மாட்டார்கள். மானிட வாழ்க்கை மேம்பாடு எய்த வேண்டுமாயின், குழந்தைகளிடம் முருகுணர்திறனை — அழகு நலம் பாராட்டும் பண்பை—வளர்த்தல் வேண்டும். இத்தகைய முருகுணர் திறனை வளர்க்கும் பாடக்குழுவில் கவிதையும் ஒன்று. கவிதையின் முக்கிய நோக்கம் இத்தகைய முருகுணர்திறனை வளர்ப்பதேயாகும். இக்காரணம்பற்றியே கவிதை கல்வி ஏற்பாட்டில் இடம் பெறு

கின்றது. கல்வி வல்லுநர்களும் கவிதை கற்பித்தலைப் பெரிதும் வற்புறுத்துகின்றனர். கவிதையைச் சரியான முறையில் பயிற்றுவதற்கும் வழிவகைகள் ஆராயப்பெறுகின்றன. அடுத்து வரும் இயல்களில் கவிதை கற்பிப்பதைப்பற்றிய ஒரு சில கருத்துகள் வற்புறுத்தப்பெறுகின்றன. கற்பித்தல் துறையில் புதிதாகப் புகும் இளம் ஆசிரியர்கட்கு இவை பெருந்துணையாக இருக்கும். தமிழ்ச் சுவைஞர்களும் பொது மக்களும் இவற்றைப் படித்தால் பயன் பெறலாம். முதலாவதாகக் கவிதை கற்பிப்பவரின் தகுதியைப் பற்றிச் சிறிது ஆராய்வோம்.

# கற்பிப்பவர் தகுதி

ஆசிரியர்களைப்பற்றிப் பொதுவாக ஆன்றோர்கள் குறிப்பிட்டவை அனைத்தும் கவிதை கற்பிக்கும் ஆசிரியருக்கும் பொருந்தும். நல்லாசிரியரின் இயல்பை நன்னூல்,

குலனருள் தெய்வம் கொள்கை மேன்மை
கலைபயில் தெளிவு கட்டுரை வன்மை
நிலம்மலை நிறைகோல் மலர்நிகர் மாட்சியும்
உலகியல் அறிவோடு உயர்குணம் இனையவும்
அமைபவன் நூலுரை யாசிரி யன்னே[1]

என்று குறிப்பிடும். நல்லாசிரியரை நிலம், மலை, துலாக் கோல் மலர் ஆகியவற்றுடன் ஒப்பிட்ட காரணத்தையும் விளக்குவர் ஆசிரியர்[2]. பயிற்றும் முறைகளைக் கூறும் மேனாட்டு நூல்களும் நல்லாசிரியரின் தன்மைகளை நன்கு விரித்துரைக்கின்றன.[3] இக் கருத்துகள் யாவற்றையும் கவிதை கற்பிக்கும் ஆசிரியர்கள் நன்கு சிந்தித்து உணர்தல் வேண்டும். இவை ஒரு புறமிக்க, அடியிற்கூறுபவை மிக மிக இன்றியமையாதவை.

**கவிதைகளை உணரும் நிலை:** தேர்வுகள் எழுதிப்பல பட்டங்களைப் பெற்றுவிட்டால், கவிதை கற்பிக்கும் தகுதி தமக்கு வந்துவிட்டது என்று ஆசிரியர்கள் கருதுவது தவறு. தேர்வு எழுதித் தகுதி பெறும் நிலை வேறு; கவிதைகளை உணரும் நிலை வேறு. கவிதைகள்யாவும் அவற்றை யாத்த கவிஞனின்உணர்ச்சிப் பெருக்கைக் காட்டுபவை. எனவே, கற்பிக்கும் ஆசிரியர்கள் தாம் கற்பிக்கும் கவிதைகளை உணர்ந்து பயின்றிருத்தல் வேண்டும்; பயின்று கொண்டே இருக்கவும்வேண்டும். இவ்வாறு பயின்றால்தான் மின்னாற்றல் குறைந்த மின்கலம் (Battery) மீண்டும் மின்னாற்றலைப்பெறுவதுபோல், ஆசிரியர்களும் புதியஉணர்ச்சி பெருக்கைப் பெற்றுக்கொண்டேயிருப்பர். கவிதைகள் வெறும் செய்திகளைக் கூறுபவை மட்டும் அன்று. இவற்றை இவை உணர்ச்சி கலந்து தருகின்றன என்பதை நாம் உணர்தல் வேண்டும். எனவே, கவிதை

1. நூற்-26 2. நூற்பாக்கள்-27,28,29,30.
3. **Bossing:** *Progressive Methods of Teaching in Secondary Schools* Chap.2

களை நாளிதழ்களில் செய்திகளைப் படிப்பது போன்று படிப்ப தால் பயன் இல்லை. செய்திகளைக் கூறும் நாளிதழ் நிருபர் நிலை வேறு; உணர்ச்சிகளைச் சித்திரித்துக்காட்டும் பெருங்கவி ஞனின் நிலை வேறு.

கவிஞன் சித்திரிக்கும் நிகழ்ச்சி ஒன்றினைப் பார்ப்போம். போர்க்களத்தில் மேகநாதன் மலரவன் படையை ஏவி மாயமாய் மறைந்து விடுகின்றான். இராமன் பக்கலில் உள்ள அனைவரும் இறந்து படுகின்றனர்; இக்காட்சியைக் கண்ட இராமனும் சோகத் தால் மூர்ச்சை அடைகிறான். இந்நிலையை இராவணன் அரக்கி மார்களைக் கொண்டு சீதைக்கு நேரில் காட்டச் செய்கின்றான். அதைக் கண்ணுறும் மிதிலைச்செல்வி 'தண்டாமரைப் பூ நெருப் புற்ற தன்மையுறுகின்றாள்'. அவள் அடைந்த நிலையை இவ் வாறு கம்பன் நமக்குக் காட்டுவான்:

மங்கை அழலும், வானாட்டு
　　மயில்கள் அழுதார்; மழவிடையான்
பங்கில் உறையும் குயில்அழுதாள்;
　　பதும மலர்மேல் மாதழுதாள்;
கங்கை அழுதாள்; நாமடந்தை
　　அழுதாள்; கமலத் தடங்கண்ணன்
தங்கை அழுதாள்; இரங்காத
　　அரக்கிமாருந் தளர்ந்தழுதார்.

அடித்தாள் முலைமேல்; வயிறலைத்தாள்;
　　அழுதாள்; தொழுதாள்; அனல்வீழ்ந்த
கொடித்தான் என்ன மெய்சுருண்டாள்;
　　கொதித்தாள்; பதைத்தாள்; குலைவுற்றாள்;
துடித்தாள்; மின்போல் உயிர்கரப்பச்
　　சோர்ந்தாள்; சுழன்றாள்; துள்ளினாள்;
குடித்தாள் துயரை உயிரோடும்;
　　குழைத்தாள்; உழைத்தாள்; குயிலன்னாள்.

விழுந்தாள்; புரண்டாள்; உடல்முழுதும்
　　வியர்த்தாள்; அயர்த்தாள்; வெதும்பினாள்;
எழுந்தாள்; இருந்தாள்; மலர்க்கரத்தை
　　நெரித்தாள்; சிரித்தாள்; ஏங்கினாள்;
கொழுந்தா! என்றாள்; அயோத்தியர்தம்
　　கோவே! என்றாள்; எவ்வுலகும்
தொழுந்தாள்; அரசே! ஓ என்றாள்;
　　சோர்ந்தாள்; அரற்றத் தொடங்கினாள்.'[4]

4. யுத்த-சீதை களங்காண்- 5,8,9.

இப்பாடல்களில் கம்பனுடைய உணர்ச்சித்துடிப்பைக் காண்கின்றோம். சீதையின் சோக உணர்ச்சியைச் சித்திரிக்கும் தானும் சீதையின் சோகத்தைப் பகிர்ந்து கொள்கின்றான்; சோக வடிவமாகின்றான். பாட்டுகளுக்கு உயிரூட்டிப் படிக்கும் நம்மையும் சோகக்கடலில் மூழ்கவைத்து விடுகின்றான். சோகத்தாலாகிய நங்கையின் உணர்ச்சியை நாமும் பெற்று விடுகின்றோம். கவிஞன் செய்யும் இதே வேலையைத்தான் கவிதைகளைக் கற்பிக்கும் ஆசிரியர்களும் தம் மாணாக்கர்களிடம் உண்டு பண்ண வேண்டும். இவ்வாறு கவிஞன் பாத்திரங்களின்மீது ஏற்றிக் கூறும் உணர்ச்சிகளையும் கவிக்கூற்றாகக் கூறும் உணர்ச்சிகளையும் மாணாக்கர்களிடம் எழச் செய்து விட்டால் அதுவே ஆசிரியர் தம் கடமையில் கண்ட வெற்றியாகும். முதலில் ஆசிரியர் உணர்ச்சிவயத்தரானால் தான் அவ்வுணர்ச்சி தம் முன்னுள்ள மாணாக்கர்களிடமும் பரவும்; அவர்களும் உணர்ச்சி வயத்தராவர். உணர்ச்சி கிளர்ந்தெழும் தன்மையும் அவர்களிடம் தானாக வளரும்.

பலவேறுநிலை மாணாக்கர்கள்: சில மாணாக்கர்கள் கவிதையைத் தாமாகப் படித்துச் சுவைக்கும் திறனைப் பெற்றிருப்பர். ஆசிரியர் கவிதையை உணர்ச்சியுடன் கற்பித்தாலும் சரி, கற்பிக்காவிடினும் சரி, அவர்கள் தாமாகவே கவிதைகளின் உணர்ச்சியைப் பெற்று விடுவர். ஆனால், சராசரி மாணாக்கர்களிடம் இத்திறன் அமைந்திருக்கும் என்பது ஐயமே. ஆசிரியர் தாம் தம்முடைய கற்பிக்கும் திறனால், கவிஞனின் உணர்ச்சியை மாணாக்கர்களிடம் கிளர்ந்தெழச் செய்தல் வேண்டும்.

கவிதையைக் கேட்டு அநுபவிக்கும் கேள்விப்புலன் சிலரிடம் மட்டிலுமே அமைவது என்று சிலர் கூறலாம். இதில் உண்மை இல்லாமல் இல்லை. சிலரிடம் இசைக்கலையின் கேள்வி உணர்வு இல்லை; ஆனால் அவர்கட்கு இசைக்கலையைக் கற்பிக்கும் பொறுப்பு தருவதில்லை. ஆயின், இசையைக் கேட்டநுபவிக்கும் உணர்வு இருந்தால், சரியான பயிற்சியினால் அவ்வுணர்வை வளர்க்கலாம். கவிதை கற்பித்தலிலும் அப்படித்தான். கவிதையைப் படித்து அநுபவிக்கத் தெரியாதவர்களிடம் கவிதையைக் கற்பிக்கும் பொறுப்பைத் தருவதால் என்ன பலனை எதிர்பார்க்க முடியும்? ஆனால், அத்தகையோர் ஒரு சிலர்தாம் இருப்பர். பெரும்பாலான மக்கள் கவிதையை உணர்ந்து படிப்பதைக்கேட்டு அநுபவிக்கும் திறனைப் பெற்றிருப்பர். ஆசிரியரின் பொறுப்பெல்லாம் அத்தகைய திறனை மாணாக்கர்களிடம் வளர்த்து விடுவதேயாகும். ரசிகமணி டி. கே. சி. அவர்கள் தாய்மொழியை வெறுத்து ஆங்கில மோகத்தில் இருந்தவர்களையெல்லாம் தாய்

மொழிக் கவிதைகளைச் சுவைக்கும்படி செய்ததை நாம் அறிகின்றோம். மதமாற்றம் செய்யும் பாதிரியாரிடமுள்ள திறன் டி. கே. சி. அவர்களிடம் அமைந்திருந்ததை அவருடைய நண்பர்கள் நன்கு அறிந்திருந்தனர். சுவைஞர்களின் கூட்டத்தில் டி.கே.சி. அவர்கள் ஒரு சுவைக்குன்றுபோல் காட்சியளிப்பார்; அவரிடமிருந்து சுவை அலைகள் மின்விசைபோல் மெதுவாகப் பரவிச் சென்றுசுவைஞர்களை அடைந்துவிடும். சிறிதுநேரத்தில் சுவைஞர்கள் அனைவருமே சுவைக்குன்றுகளாகிவிடுவர். சுவைஞர்களின் கூட்டம் சுவைக்கடலாக மாறிவிடும். இத்தகைய நிலையினை ஆசிரியர் கவிதை வகுப்புகளில் நிலவும்படி செய்தல் வேண்டும். தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள் காரைக்குடி இந்துமதாபிமான சங்கத்தில் வாரந்தோறும் சனிக்கிழமையன்று இத்தகையதொரு சூழ்நிலையை நிலவச்செய்ததைக் காரைக்குடி இலக்கிய அன்பர்கள் நன்கு அறிவர்.

**சில ஆசிரியர்கள் கற்பிக்கும் முறை:** சில ஆசிரியர்கள் கவிதைப் பாடத்தை உணர்ச்சிக்குரிய பாடம்போல் கற்பிக்காமல் அறிவுக்குரிய பாடமாகக் கற்பிப்பதைக் காண்கின்றோம். அவர்கள் வரலாற்று விவரங்கள், புவியியல் குறிப்புகள், தன்-வரலாற்று நிகழ்ச்சிகள் பல்வேறு கதைக்குறிப்புகள், சொல்லிலக்கணக் குறிப்புகள், அணிவகைகள் முதலியவற்றில் அதிகக்கவனத்தைச் செலுத்திக் கற்பிக்கின்றனர். இம்முறையில் கற்பிக்கப் பெறும் மாணாக்கர்கள் கவிதையைத் தவிர ஏனைய அனைத்தையும் அடைவர்! இவ்வாறு கற்பித்தற்குக் காரணம் என்ன? கவிதை அவர்களிடம் இல்லை. கவிதை உள்ளமும் அவர்களிடம் இல்லை. அதனால்தான் அவர்கள் கவிதையை உயிரியல் ஆய்வாளர் ஆய்வுப்பொருளை ஆய்வகத்தில் சிதைத்துக் கூறுபடுத்தி ஆராய்வதுபோல் கவிதை ஆராய்ச்சி நடத்துகின்றனர்! இத்தகைய குறிப்புகள் யாவும் மாணாக்கர்களுக்குத் தேவையில்லை என்பது இந்நூலாசிரியரின் கருத்தன்று. அவற்றைக் கற்பிக்கும் இடம் வேறு; சந்தர்ப்பமும் வேறு. கவிதைச் சுவையில் மாணாக்கர்களை ஈடுபடுத்தும்போது அவை கூடா என்பதே கருத்தாகும்.

கவிதைகளைப் பயிற்றும் ஆசிரியர்கள் என்றும் கவிதைகளைப் பயின்று கொண்டேயிருக்க வேண்டும் என்று மேலே கூறினோம் அல்லவா? அவ்வாறு பயின்றவண்ண மிருந்ததால்தான் ஆசிரியரிடம் 'கவிதை' உயிருடன் நிலவும். ஆசிரியர் தாம் கற்ற கவிதைகள் தம் தொழிலுக்குப் போதும் என்று எண்ணிக் கவிதைகளைப் படிப்பதையே நிறுத்தி விடுவாராயின், அவர் முன்னேற்றத்தை விரும்பவில்லை என்றும், அதற்குப் பதிலாகப் பின்னோக்கிச்

செல்லுகின்றார் என்றும் கருத வேண்டும். படித்தலில் நிறுத்தமே கூடாது. வாழ்க்கை என்றால் அதில் துலக்கமும் இருக்கும்; மாற்றமும் காணப்பெறும். படித்தலில் ஓய்வு பெறுதல் என்றால் சாதலின் தொடக்கம்; அழிவின் அறிகுறி. கற்பிப்பதற்கு வேண்டிய கவிதைகள் ஆசிரியருக்குத் தெரியும் என்பது உண்மையாக இருக்கலாம். ஆனால், நாம் விரும்புவது கவிதையைப்பற்றிய அறிவு அன்று. வாழ்கையின் பொலிவு, மலர்ச்சி, வேலையின்மீது உற்சாகம் ஆகியவற்றையே நாம் விழைகின்றோம். இவை யாவும் கவிதை உயிருடன் நிலவும் ஆசிரியரிடம் மட்டிலுந்தான் காணப் பெறும்; அவரிடம்தான் உணர்ச்சிப் பெருக்கும் வற்றாது தோன்றும். மழையின்றேல் ஏரி நீர் வற்றிப் போகும். மணற் கேணி தொட்டினைத்துத்தானே ஊறும்? அது போலத்தான் கவிதையும். படிக்கும் அளவை யொட்டித்தானே கவிதைகள் உயிரோட்டத்துடன் இலங்கும்?' 'கற்றனைத்து ஊறும் அறிவு.'' ஒரு சிலர் தவறாக ஆசிரியத் தொழிலை மேற்கொண்டு ஆசிரியர் சமூகத்திற்கே இழுக்கினைத் தேடுகின்றனர். இவர்கள் தமக்குச் சிறிதும் பொருத்தமற்ற தொழிலிலிருந்து கொண்டு மாணாக்கர் களின் காலத்தை வீணாக்குவதைவிடத் தமக்கேற்ற தொழிலுக்குப் போய்விடுவது நல்லது. கல்வி என்ற தோட்டத்தில் இத்தகையவர்கள் இருப்பதால், அவர்களிடம் அறிவு பெறும் மாணாக்கர் களாகிய இளஞ்செடிகளின் வளர்ச்சி குன்றிவிடுகின்றது.

**ஆசிரியத் துறையின் சிறப்பு:** எல்லாத் துறைககளையும் விட ஆசிரியத் துறை மிகவும் சிறந்தது என்பதற்கு ஐயமில்லை. தம்மிடம் பயிலவரும் தெய்வ உருவங்கள் போன்ற சிறுவர்களின் அஞ்ஞான இருளை அகற்றும் நிலையிலுள்ளனர் ஆசிரியர்கள். எல்லாக் காலங்களிலும் அத்துறை அஞ்ஞான இருளையகற்றும்வழியாகவே அமைந்துள்ளது. ஆசிரியர்களும் அத்துறையைத்தாமாகத் தேர்ந்தெடுத்துக் கொண்டனர் என்பதை நன்கு அறிவர். வாழ்க்கை நடத்துவதற்கு ஏதோ அத்துறையால் சிறிது வருவாய் கிடைப்பினும், ஆசிரியர்கள் செய்யும் தொண்டிற்கு அது சிறிதும் இணை யாகாது. ஆனால், சிறந்த முறையில் கவிதை பயிற்றிய பிறகு தம்முன் அமர்ந்திருக்கும் நாற்பது அல்லது நாற்பத்தைந்து சிறுவர் களின் முகமலர்ச்சியைக் காண்பதற்கு இவ்வுலகில் வேறு எதையும் ஈடாகச் சொல்ல முடியாது. ஆசிரியர் பெறும் மகிழ்ச்சிக்கு ஏதாவது ஈடு சொல்ல வேண்டுமாயின், பாரதப்போரில் கண்ணன் தன் கடமைகளை நிறைவேற்றி விட்டதாகக் கொண்ட மகிழ்ச்சியைத்தான் ஈடு சொல்லலாம்.

கன்னனுடைய புண்ணியமனைத்தையும் கண்ணன் பெற்று அவன் கேட்ட வரங்களையும் தருகின்றான்; அன்றியும், 'கூற்றுறழ், கராவின் வாயினின்றழைத்த குஞ்சர ராசன் முன் அன்று தோற்றிய திருமாலின் தரிசனமும் கன்னனுக்குக் கிடைக்கின்றது. தன் கடமையை முடித்துக் கொண்டமைக்காகவும். இம்மையிலேயே அமலநாரணனைத் தான் காணப்பெற்றதற்காகவும் பெருமகிழ்ச்சியுற்றுத் தன் மகிழ்ச்சியைக் கண்ணனுக்கு இவ்வாறு தெரிவிக்கின்றான் கன்னன்.

தருமன் மகன் முதலான அரிய காதல்
தம்பியரோ டெதிர் மலைந்து தறுகண் ஆண்மைச்
செருவிலென துயிரனைய தோழற் காகச்
செஞ்சோற்றுக் கடன்கழித்தேன்; தேவர் கோவுக்கு
உரைபெறுநற் கவசமுங்குண் டலமும் ஈந்தேன்!
உற்றபெரு நல்வினைப்பேறு உனக்கே தந்தேன்
மருதிடைமுன் தவழ்ந்தருளும் செங்கண் மாலே!
மாதவத்தால் ஒருதமியன் வாழ்ந்த வாறே.

வான்பெற்ற நதிகமழ்தாள் வணங்கப் பெற்றேன்;
மதிபெற்ற திருவுளத்தபான் மதிக்கப் பெற்றேன்;
தேன்பெற்ற துழாயலங்கற் களப மார்பும்
திருப்புயமும் தைவந்து தீண்டப் பெற்றேன்;
ஊன்பெற்ற பகழியினால் அழிந்து வீழ்ந்தும்
உணர்வுடன்நின் திருநாமம் உரைக்கப் பெற்றேன்;
யான்பெற்ற பெருந்தவப்பே றென்னை யன்றி
இருநிலத்தில் பிறந்தோரில் யார்பெற் றாரே![5]

ஆசிரியரும் தம் வாழ்நாள் முழுவதும் எத்தனையோ சிறுவர்கட்கு அறிவினை நல்கி அவர்களின் முகமலர்ச்சியைக் கண்ணாரக் கண்டு அநுபவத்திருப்பார். இந்த அநுபவந்தான் அவர் பெற்ற பேறு. அதிகம் சொல்வானேன்? மேற்கண்ட இரண்டு பாடல்களையும் மாணாக்கர்கட்குக் கற்பிப்பதாகக் கொள்வோம். போர்க்களத்தில் கன்னனும் கண்ணனும் இருந்த சூழ்நிலையையே "வகுப்பில் திரும்பப் படைத்து' மாணாக்கர்களைக் கவிதைச் சுவையின் கொடுமுடிக்குக் கொண்டு செலுத்தினால் அவர்கள் முகத்தில் இன்பம் ததும்பியோடும்; அவர்கள் முகமலர்ச்சியே இதனைக் காட்டும். இதனை ஆசிரியர் கண்ணுறும்பொழுது அவரும் பேரின்பக் கடலில் மூழ்குகின்றார். இப்படி ஆசிரியர் எத்தனையோ வாய்ப்புகளைக் கண்டிருப்பர். இந்த அநுபவமே அவர் தம் துறையில் பெறும் உண்மையான ஊதியமாகும்.

5. வில்லி பாரதம்-பதினேழாம் போர்-248, 249

ஆசிரியத் துறையின் சிறப்பை இன்னோர் எடுத்துக் காட்டாலும் விளக்கலாம். சாதாரண மனிதருக்கு இல்லாளின் அன்றாடத் தொண்டு முடிவில்லாத சலிப்பாகத் தோன்றலாம்; சலிப்பும் அலுப்பும் தரக்கூடிய ஒவ்வொரு சிறு விவரங்களையும் கவனிக்க வேண்டிய தொல்லை தரும் பணியாகவும் தோற்றலாம். இத்தனையும், "பொய்யான காயத்திற்கும் காற்றடைத்தபைக் கும்" செய்கின்ற செயல்கள்தாமே என்றும் அவர் நினைக்கலாம்! ஒருவருக்கு வாழ்க்கைத் துணைவியாக வந்தநாள்தொட்டு இத் சிறு விவரங்களையும் கண்ணுங்கருத்துடன் யாதொரு சலிப்புமின் றித் தொடர்ந்து அவள் செய்து வருவதற்குக் காரணம் என்ன? அவளது தன்னலமா? இல்லை. இவை யனைத்தையும் ஒன்றாகப் பிணிப்பது ஒன்றே ஒன்றுதான்; அதுதான் அன்பு; குடும்பத்தின் மீது அவள் கொண்டுள்ள அன்பு. தன் துணைவனின் நலம், தனது 'செல்வச் சிட்டுக்களின்' நலம் ஆகியவற்றைக் கவனிப்பதையே தன் கடன் எனக் கொண்டு 'பின் தூங்கி முன் எழும் பேதையர்' களால்தாம் இவ்வுலகம் இதுகாறும் நிலைபெற்று வருகின்றது. இத்தகைய 'குடும்ப விளக்குகள்'தாம் இவ்வுலகத்தை நன்முறை யில் இயங்கச் செய்கின்றனர். இத்தகைய பொறுப்புகளையும்தன் 'திருமணத்தன்று' பெறுகின்றாள் குடும்பத் தலைவி. இத்தலைவி யின் பொறுப்பைப் போன்றதுதான் ஆசிரியரது பொறுப்பும். அவள் பல தொல்லைகளை மறந்து தன் கடமையிலேயே கவனம் செலுத்துவதைப் போலவே, ஆசிரியரும் தம் அவலக்கவலைகளை யெல்லாம் மறந்து தாமும் கவிதை இன்பத்தில் திளைத்து தம் மிடம் பயிலும் சிறுவர்களையும் அதில் திளைக்கச் செய்யவேண்டி யவராக உள்ளார். ஆசிரியப் பணியை ஏற்ற அன்றே அப்பொறுப் புகள் அவரை வந்தடைகின்றன.

ஆசிரியர் அடையும் மகிழ்ச்சி: கல்வியின் முக்கிய நோக்கங் களுள் ஒன்று சால்பினை[6] வளர்ப்பது. ஆசிரியர் இதில் கவனம் செலுத்தாவிடில் சால்பிற்கு எல்லைக் கோடுகளை யாவர்தாம் வரையறுப்பது? சால்பினை வளர்க்கும் பொறுப்பு ஆசிரியரை யன்றி வேறு எவரும் மேற்கொள்ள இயலாது. மேற்கொண்டா லும் தக்க பயனைக் காணல் இயலாது; ஆசிரியர்களே மாணாக் கர்களின் வீர வழிபாட்டிற்குரியவர்கள். ஆசிரியருக்கு அநுபவம் பெருகப் பெருகச் சால்பினை வளர்க்கும் பெருவழி மிகவும் வியப் பினைத் தருவதாக அமைகின்றது. அந்த வழியில் காணும் ஒவ் வொன்றும் புதியனவாகவே தோற்றமளிக்கும். நன்மையும் தீமை யும் தரும் ஆற்றலும், மகிழ்ச்சியையும் துன்பத்தையும் நல்கும்

6. சால்பு-Character.

ஆற்றலும் அவர்கள் கையில்தான் உள்ளது. அவர்கள்தாம் அதனைச் சரியாக உணர்தல் கூடும். அந்தப் பொறுப்பினை அவர்கள் நன்கு உணர்வார்களாயின், அது சுமக்க முடியாத அளவுக்குப் பெரிதாக இருப்பது தெரியவரும். கற்பித்தல் என்பது ஒருவரது பணியின் ஆற்றலையும் சாத்தியப்படக் கூடியதையும் காட்டுவதைப்போலவே, அவரது சிறுமையையும் எடுத்துக் காட்டவல்லது. தாம் என்ன செய்யலாம் என்பதையும் தம்மால் என்ன செய்யமுடியும் என்பதையும் ஆசிரியர் காணும்பொழுது, அவர் தம்முடைய சுவட்டிலேயே, தாம் வகுத்துக் கொண்ட துறையிலேயே, சிலர் மிகப்பெரிய நிலையை எய்துகின்றனர் என்று காண்பார்; தம்முடைய ஆற்றலையெல்லாம் கொட்டி ஒரு பாடத்தை முடித்தபிறகு தாம் காண்பதைப்போன்ற பெரு மிதத்தை வேறு எப்பொழுதும் அவரால் காணமுடிகின்றதில்லை. அவரிடம் பாடங்கேட்ட சிறுவர்கள் பள்ளியை விட்டு வெளிச் செல்லுகின்றனர்; ஆசிரியரும் சாதாரணமனிதராகி விடுகின்றார். ஆனால், அந்த ஒரு மணி நேரமாவது தம் வாழ்க்கை முழுத் தன்மை எய்தியது என்ற உணர்ச்சி அவரிடம் கட்டாயம் இருக் கத்தான் செய்யும். ஆசிரியத் தொழிலில் இல்லாதவர்களும் இத் தகைய 'பேரின்பத்தை' அடையும் வாய்ப்பு உண்டு. ஒரு நல்ல கவிதையைப் படித்து அதன் சுவையை அநுபவித்தவர்களும், அந்தக் கவிதையைப் படித்த ஒரு சிறிய கால அளவிலாயினும் தம்முடைய வாழ்க்கை முழுத்தன்மை எய்தியது என்பதை உணர் வர். எடுத்துக்காட்டாக,

எள்ளத் தனைவந் துறுபசிக்கும்
இரங்கிப் பரந்து, சிறுபண்டி
எக்கிக் குழைந்து, மணித்துவர்வாய்
இதழைக் குவித்து விரித்தழுது,
துள்ளித் துடித்துப் புடைபெயர்ந்து,
தொட்டில் உதைத்து, பெருவிரலைச்
சுவைத்துக் கடைவாய் நீர்ஒழுகத்
தோளில் மகரக் குழைதவழ,
மெள்ளத் தவழ்ந்து, குறுமூரல்
விளைத்து, மடியின் மீதிருந்து,
விம்மிப் பொருமி முகம்பார்த்து,
வேண்டும் உமையாள் களபமுலை
வள்ளத் தமுதுண் டகம்மகிழ்ந்த
மழலைச் சிறுவா! வருகவே!
வளரும் களபக் குரும்பைமுலை
வள்ளிக் கணவா! வருகவே.'[7]

7. திருச்செந்தூர்ப் பிள்ளைத் தமிழ்-வருகைப் பருவத்திலுள்ள ஒரு பாடல்.

என்ற பாடலைக் கேதாரகௌளத்தில் பாடினால் எத்தகைய மகிழ்ச்சியுண்டாகும் என்பது அதைப் பாடி மகிழ்பவர்களே அறிவர். அந்தப் பண் தெரியாதவர்கள் இப்பாடலைஓரளவு ஏதாவது இசையுடன் படித்தாலும் அதை நன்கு அநுபவிக்கலாம். இசை கலந்து பாட்டின் பொருளில் நாம் ஈடுபடும்பொழுது, அறிதுயில் போன்ற அநுபவம் நம்மிடம் உண்டாவதை அறியலாம். கம்ப ராமாயணம், சீவக சிந்தாமணி, பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், வில்லிபுத்தூரார் பாரதம் போன்ற காவியங்களில் பல கட்டங்களில் உள்ள பல பாடல்கள் இத்தகைய இன்பத்தை—அநுபவத்தை—உண்டாக்கும். நம் வாழ்க்கையில் அடிக்கடி குறுக்கிடும் நிகழ்ச்சிகளும் நாம் அடிக்கடிக் காணும் இயற்கைக் காட்சிகளும் மறைந்து போகாமல் கவிஞன் தன் பாடல்களில் ஒழுங்குறப் பதியவைத்துக் காக்கின்றான். அப்பாடல்களை உணர்ச்சியுடன் படிக்கும்பொழுது அதே நிகழ்ச்சி அல்லது காட்சி மீண்டும் நம் மனத்தில் திரும்பப்படைக்கப் பெறுகின்றது.

அந்தியிரு ளாற்கருகும் உலகு கண்டேன்;
அவ்வாறே வான்கண்டேன்; திசைகள் கண்டேன்;
பிந்தியந்தக் காரிருள்தான் சிரித்த துண்டோ?
பெருஞ்சிரிப் பின் ஒளிமுத்தோ? நிலவே நீதான்!
சிந்தாமல் சிதறாமல் அழகை எல்லாம்
சேகரித்துக் குளிரேற்றி ஒளியும் ஊட்டி
'இந்தா'என் றேஇயற்கை அன்னை வானில்
எழில்வாழ்வைச் சித்திரித்த வண்ணந் தானோ?[8]

என்ற பாடலைப் படிக்கும்பொழுது இந்த உண்மையினை அறியலாம்.

**ஆசிரியரின் பொறுப்பு:** ஆசிரியப் பணி என்பது நாம் சிறப்பாகப் பெறும் உரிமை; அது கீதாசாரியனின் பணியைப் போன்றது. இப்பணியுடன் ஒரு பெரிய பொறுப்பும் இணைந்தே வருகின்றது. நாம் என்றும் அப்பணிக்கு நம்மைப் பொருத்தப்பட அமைத்துக் கொள்வதே அது. என்றும் கவிதையநுபவத்துடன் வாழ்வதென்பது எளிதான செயல் அன்று. பிறவிலேயே ஆசிரியக் கூறு சிறிதளவாவது அமையப்பெற்றவர்களுக்கே இஃது இயலும். பயிற்சிக் கல்லூரிகளில் ஆசிரியத் துறையில் நம்பிக்கை கொண்டு பயிற்சி பெறுபவர்களுக்கும் அது சாத்தியமாகும்.

எண்ணிய எண்ணியாங்கு எய்துப; எண்ணியார்
திண்ணிய ராகப் பெறின்.[9]

8. பாரதிதாசன் 'புரட்சிக்கவி' என்பதில் ஒரு பாடல்
9. குறள்-666

என்ற வள்ளுவர் வாக்கிலும் இவ்வுண்மை காணப்பெறுவதை எண்ணி ஓர்க.

எடுத்துக்காட்டாக, ஆயிரக்கணக்கான மாணாக்கர்களில் எத்தனை பேர் கவிதையை அநுபவிப்பதில் ஆசிரியரைச் சார்ந்து நிற்கின்றனர்! கவிதை அவர்கள் வாழ்க்கையில் அழகினைத் தரலாம்; களிப்பினையும் நல்கலாம்; நல்லவனற்றைத் தரும் ஆற்றலாகவும் திகழலாம். அங்ஙனமே, அது சவம்போலும் காட்சியளிக்கலாம்; சலிப்பினையும் தரலாம்; அதைப் படிப்பது வீண் என்ற உணர்ச்சியையும் அவர்களிடம் எழுப்பலாம். பெரும் பான்மையான மாணாக்கர்கள் கவிதையைத் துய்ப்பது ஆசிரியரைப் பொறுத்தே அமைகின்றது. அலெக்ஸாந்தர் ஹேடோ என்பார், "குழந்தை கவிதையுலகில் புகுவதற்குக் காத்து நிற்கின்றது; அதற்கு வழிகாட்டுவது ஆசிரியரின் பொறுப்பிலுள்ளது"[10] என்று கூறியிருப்பது ஈண்டுச் சிந்தித்துப் பார்த்தற்குரியது. தமிழ் நாட்டைப் பொறுத்தமட்டிலும், தமிழ் மொழியைப் பொறுத்தமட்டிலும், கவிதைக் கருவூலத்திற்குக் குறைவில்லை. எல்லாம் கவிதைமயமாகவே உள்ளன. இலக்கியமேயன்றிச் சோதிடம், கணிதம், வானநூல் மருத்துவம், நிகண்டு போன்ற துறைகளும் கவிதை வடிவம் பெற்றுள்ளன. இதனால், நம்முடைய சிறுவர்களின் முருகுணர்ச்சியை வளர்ப்பதற்குக் கவிதைத் துறை சிறந்த பயிற்சிக் களமாகின்றது. அத்துறையில் பலரைக் கொண்டு செலுத்தாவிடில், அவர்கள் கவிதையுலகினை என்றும் காணவே முடியாது. இதனால் அவர்கள் தங்கள் கவிதையநுபவமாகிய பிறப்புரிமையையே இழந்தவர்களாகின்றனர். "செஞ்சொற் கவியின்பத்தைத்" துய்க்கும் வாய்ப்பே அவர்கட்கு இல்லாது போகின்றது.

**மாணாக்கர் மறக்கமுடியாத அநுபவம்:** ஒரு சிலர் மாறுபட்ட கவிதையநுபவத்தைச் சிறுவர்கட்கு அளிப்பதுபற்றி மாறுபட்ட கருத்தினைக் கொண்டுள்ளனர். பள்ளியைவிட்ட பிறகு ஒரு சிலரே கவிதைகளைப் படிப்பதால், கவிதையைப் படிக்கும் பயிற்சி தராததால் ஒன்றும் முழுகிப் போகவில்லையென்று இவர்கள் கருதுகின்றனர். இஃது உண்மையாயின், இது நம் பள்ளிகளைப்

10 The child stands waiting to enter the land of poetry, and it lies with the teacher to lead the way -*On the Teaching of Poetry* P 10.

பற்றிக் குறைத்துப் பேசுவதாகும். இது பள்ளிகள் தம் பணியைச் செவ்வனே ஆற்றவில்லை என்பதாகின்றது. அப்படியே இஃது உண்மையாக இருந்தாலும், அதனால் என்ன? சிறுவர்கள் நம்மிடம் இருக்கும்வரையிலும் கவிதை அவர்கட்கு உயிர்க் களை தரும் அழகுணர் பொருளாக இருக்கட்டுமே.அவர்கள் நாடோறும் வளர்ந்து கொண்டுதானே இருக்கின்றனர்? துலக்கமுறுதல்[11] என்பது சிறுவர்களிடம் காணப்படுவதுதானே? கவிதை எந்த அளவுக்கு அவர்கட்குப் பயன் அளித்துள்ளது என்பதை யார் மதிப்பிட முடியும்? பள்ளி வாழ்க்கையின்பொழுது சிறுவன் கோடை விடுமுறையில் மலைக்காட்சிகளையும் கடற்காட்சிகளையும் கண்டு களிக்கட்டும். பள்ளி வாழ்க்கை முடிந்ததும் அவன் பல்லாண்டுகள்—ஏன்? வாழ்க்கை முழுவதுமே — நகர வாழ்க்கையில் அடைபட்டுக் கிடப்பதாக வைத்துக் கொள்வோம். இதனால் அவன் மலைக் காட்சிகளையும் கடலலைகளின் ஓசையையும் என்றாவது மறக்க முடியுமா? இளமைப் பருவத்தில் இவை அவனிடம் விடுதலை யுணர்ச்சியையும் களிப்பையும் எழுப்பின. இவை புதுமையையும் துணிவையும் அவனுக்குத் தந்தன. விழுமிய கருத்தையும் புலன்களுக்கு எட்டாத மர்மத்தையும் அவை உணர்த்தின; இவற்றால் அவனுடைய சால்பு உருவம் பெற்றது. ஆகவே, அவை என்றும் அவனிடம் வாழும். இங்ஙனமே, இளமையில் முறைப்படிப் பெற்று வளர்த்த கவிதையநுபவமும் அவனிடம் என்றும் வாழும்; நிலைத்து நிற்கும். ஆசிரியர் தாம் உயிரோடிலங்கும் வளரும் சிறுவர்களிடம் புழங்கிக் கொண்டிருப்பதாகமட்டிலும் நினைவில் வைத்துக் கொண்டால் போதுமானது. ‘வாழ்வு வாழ்வையே தரும்; சாவு சாவையே நல்கும்’ என்பது நாம் அனைவரும் அறிந்த உண்மை.

நீலமா மஞ்ஞை ஏங்க
 நிறைகொடிப் புறவம் பாடக்
கோலவெண் முகையேர் முல்லைக்
 கோபம்வாய் முறுவல் காட்ட
ஆலுமின் இடைசூழ் மாலைப்
 பயோதரம் அசைய வந்தாள்
ஞாலநீ டரங்கில் ஆடக்
 காரெனும் பருவ நல்லாள்.[12]

என்ற **சேக்கிழாரின் கார்கால** ஓவியத்தை இளமையில் பயின்ற

11 துலக்கமுறுதல்-Development

12- பெரியபுரா- ஆனாயர்- 19

சிறுவன் அதை ஒருநாளும் மறக்கமாட்டான்; மறக்கவே முடியாது. இயற்கை எப்பொருளை உள்ளத்தில் பதிக்கின்றதோ, அப்பொருளையே அதன் படமாகவுள்ள பாட்டும் பதித்தல் வேண்டும். அங்ஙனம் பதிவியாதது பாட்டன்று. அங்ஙனம் பாட்டைத் துய்க்கும் திறனை மாணாக்கர்களிடம் வளர்த்தல் ஆசிரியர் கையில்தான் உள்ளது. பொறுப்பறிந்து பணியாற்ற வேண்டியது ஆசிரியரின் தலையாய கடமையாகும். இதில் நற்பணியாற்றுவதற்கு மாணாக்கர்களின் பல்வேறு நிலைக்கேற்றவாறு கவிதைகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். கவிதைகளைத் தேர்ந்தெடுப்பது பற்றி அடுத்துக் காண்போம்.

இயல்-3

# கவிதையைத் தேர்ந்தெடுத்தல்

கல்வி நிலையங்களில் பணியாற்றும் பெரும்பாலான தாய் மொழியாசிரியர்கட்கு இப்பொறுப்பு இல்லை. பாடநூலை வெளியிடுவோர் யாரோ ஒருவரைக் கொண்டு கவிதைகளைத் தொகுக்கச் செய்து சில குறிப்புகளுடன் பாடநூல்களை வெளியிடுகின்றனர். ஒவ்வொரு வகுப்பிற்கும் நூல் சந்தையில் பல நூல்கள் காணப்பெறுகின்றன. நூல்களைத் தேர்ந்தெடுக்கும் பொறுப்பும் சில தாய்மொழியாசிரியர்கட்குக் கிட்டுவதில்லை. அதற்காக அவர்கள் சிறிதேனும் கவலை கொள்ளுவதும் இல்லை. நூலினைத் தொகுப்போராவது பாடத்திட்டத்தை வைத்துக் கொண்டு, தமது கவிதைக் கருவூலத்திலிருந்து, தாம் படித்துத் துய்த்த கவிதைத் தொகுதியிலிருந்து, மாணாக்கர்கட்கு ஏற்ற கவிதைகளைத் தேர்ந்தெடுக்கின்றனரா என்பதும் ஐயப்பாட்டிற்குரியதே. வெளியிடுவோர் அதற்கு வேண்டிய காலத்தைத் தருவதில்லை; தொகுப்போரிடமும் அத்தகைய கவிதைக் கருவூலம் இருப்பதில்லை. அரசினராலும் பல்கலைக் கழகத்தினராலும் வெளியிடப்பெறும் கவிதைத் தொகுப்பு ஒரு குழுவினரால் தேர்ந்தெடுக்கப்பெற்று அவர்களால் நியமிக்கப்பெறும் ஒருவரால் தொகுப்பு பதிப்பிக்கப்பெறுகின்றது.

**தொகை நூல்கள்** : சாதாரணமாகக் கீழ்வகுப்பு மாணாக்கர் கட்கேற்ற கவிதைகள் தமிழ்மொழியில் அதிகமாக இல்லை. மாணாக்கர்களின் வயது நிலை, அறிவுநிலை, அநுபவ நிலைக் கேற்ற கவிதைகளே இல்லை எனலாம். ஆனால், நடைமுறையில் பாடத்திட்டக் குழுவினர் நீதிபற்றிய கவிதைகளையே அவர்கட்குத் தேர்ந்தெடுக்கின்றனர். செவிலிப்பாடல்கள், ஆட்டப் பாடல்கள், கதைப்பாடல்கள் போன்றவை இந்த நூற்றாண்டில் தோன்றத் தொடங்கியுள்ளன என்றே சொல்லாம். பத்துப் பாட்டு, எட்டுத்தொகை பதினெண்கீழ்க்கணக்கு நூல்கள் யாவும் தொகை நூல்களே.[1] தனிப்பாடல் திரட்டு, தனிச் செய்யுள் சிந்தாமணி, புறத்திரட்டு, பன்னூற்றிரட்டு போன்ற கவிதைத் தொகுதிகளும் உள்ளன. இவை யாவும் மாணாக்கர்கட்கென்று

1. திரட்டு நூல், தொகை நூல்-Anthology

திரட்டப் பெற்றவை யன்று. இன்று தமிழாசிரியர்கள் செய்ய வேண்டிய முக்கிய பணியொன்று உண்டு. ஒவ்வொரு வகுப்பிற் கேற்றவாறு கவிதைகளைத்தொகுத்து வகைப்படுத்தி நல்லமுறை யில் பதிப்பித்து வெளியிடவேண்டும். ஆழ்ந்தும் அகன்றும் கற்றுக் கவிதைகளைச் சுவைத்த தாய்மொழியாசிரியர்களைத் துணை கொண்டு வெளியிடுவோர் தக்க குறிப்புகளுடன் இத்தகைய திரட்டு நூல்களை வெளியிட வேண்டும். அவை தாய்மொழிக் கவிதைகளைப் கற்பிப்பவர்களுக்குப் பெருந்துணையாக இருக் கும். பாடநூல்கட்கு ஏற்ற கவிதைகளை அத்தகைய தொகை நூல்களிலிருந்து தேர்ந்தெடுக்கலாம். சாதாரணமாகக் கீழ் வகுப்பிற்குரிய இத்திரட்டு நூல்களிலுள்ள கவிதைகளைக் செவிலிப் பாடல்கள், ஆட்டப் பாடல்கள், கதைப் பாடல்கள் என்று பிரிவினை செய்யலாம். இந்த ஒவ்வொரு பிரிவிலும் கிடைக்கும் பாடல்களுக்கேற்றவாறு வேறு சில உட்பிரிவு களையும் அமைக்கலாம். இன்று வெளிவந்திருக்கும் கவிதைத் தொகுப்புகள் இவற்றுக்கு வழிகாட்டிகளாகக் கொள்ளலாம். இங்ஙனமே தமிழ் இலக்கியக் கருவூலத்திலிருந்து மேல் வகுப்பு கட்குரிய கவிதைகளையும் கல்லூரி வகுப்புகட்குரிய கவிதைகளை யும் தொகுக்கலாம். இவற்றை வாழ்த்துப் பகுதி, அறவுரைப் பகுதி, தொடர்நிலைச் செய்யுட் பகுதி, பல்சுவைப் பகுதி என்று பிரிவுகள் செய்யலாம் ஒவ்வொரு பிரிவின்கீழும் வேறு சில உட் பிரிவுகளையும் அமைக்கலாம். கவிதைகளைப்பற்றிய மிகச் சுருக்கமான குறிப்புகள் மிகமிக இன்றியமையாதவை. மாணாக் கர்கட்குக் கற்பித்து அநுபவம் மிக்க பெரும்புலவர்களைக் கொண்டு இப்பணி மேற் கொள்ளப்பெறல் வேண்டும். பல்கலைக் கழகமும் இப்பணியில் ஈடுபடலாம்.

**பாடத்திட்டங்கள் :** இன்று பள்ளியின் பல்வேறு வகுப்புகட் கும் கல்லூரியின் பல்வேறு வகுப்புகட்குமுரிய பாடத்திட்டங்கள் ஆழ்ந்த பயிற்சியும் அநுபவமும் மிக்க ஆசிரியர்களைக் கொண்ட ஒரு குழுவினரால் ஆயத்தம் செய்யப்பெறுகின்றன. இன்று பள்ளி வகுப்புக்குரிய பாடத்திட்டங்களில் கீழ் வகுப்புக்குரிய கவிதைப் பகுதி (1-7 வகுப்புக்குரியது) வாழ்த்து, நீதி, கதை, பல்சுவை என்றும் மேல் வகுப்புகட்குரிய பாடல்கள்(8-10 வகுப்புக்குரியது) சங்ககாலம் (கி.பி. 300 வரை) இடைக்காலம் (301 முதல்

2. பாரதியாரின் கவிதைகள்,' மலரும் மாலையும், பாரதிதாசன் கவிதைகள் கவிகுஞ்சரம், முடியரசன் கவிதைகள் போன்றவை.

1300 வரை), பிற்காலம் (கி.பி. 1301 முதல்1800 வரை), இக் காலம் (கி.பி. 1801 முதல் இன்றுவரை) என்று வரையறை செய்யப்பெற்றுள்ளன. ஒவ்வொரு வகுப்பிற்கும் ஒவ்வொரு காலப் பகுதியிலுள்ள பாடல்கள் எவ்வளவு இருக்கலாம் என்றும் வரையறை செய்துள்ளனர். எடுத்துக்காட்டாக எட்டாம் வகுப்பிற்குச் சங்ககாலப் பாடல்கள் 35 விழுக்காடும், இடைக் காலபிற்காலக் கவிதைகள் 50 விழுக்காடும், இக்காலக் கவி தைகள் 15 விழுக்காடும் இருத்தல் வேண்டும். மனப்பாடம் செய்ய வேண்டிய பகுதிகள் 100 வரிகள் இருக்கவேண்டும் என்ற குறிப் பும் பாடத்திட்டத்தில் காணப்பெறுகின்றது. கல்லூரி வகுப்புக் கட்கும் கிட்டத்திட்ட இதையொட்டிய பாடத்திட்டங்கள் வகுக்கப் பெற்றுள்ளன.

மேற்கூறியவாறு தொகுக்கப்பெற்ற பாடநூலிலிருந்து தம் முடைய மாதிரிப் பாடத்திற்கு எக்கவிதையைத் தேர்ந்தெடுப்பது என்ற சங்கடம் இளம் ஆசிரியரிடையே எழுகின்றது. இவர் அங்ஙனம் சங்கடப்படுவதற்குக் காரணம், கவிதைகளைத் தவறான நோக்கத்துடன் அணுகுவதேயாகும். மாணாக்கர்களி டையே தாம் கவிதை மாரிகளைப் பொழிவதற்கேற்ற அடிநில மாக அமையக்கூடிய கவிதையை அவர் தேடிக் கொண்டிருக்க லாம்; அல்லது வகுப்பின் அறிதிறனைச்[3] சோதிக்கக் கூடிய கவிதையாக இருக்க வேண்டும் என்று ஒரு வேளை கருதலாம்; அல்லது தம்முடைய கவிதை அறம் உரைக்கக் கூடியதாக இருக்க வேண்டும் என்றும் கருதலாம். இக்கருத்துகள் யாவும் உண்மை யான நோக்கத்திற்கு அப்பாற்பட்டவை. நாம் ஒரு கவிதை யைக் கற்பிக்க வேண்டுமாயின், நாம் வேண்டுவது கவிதையே யன்றி நம்முடைய வினா விடுக்கும் திறன் அன்று; நம்முடைய கவி தைப் பாடத்தின் வெற்றியை-அப்பாடத்தில் மாணாக்கர் பெறும் களிப்பை—அளவாகக் கொண்டு மதிப்பிடவேண்டுமே யன்றி, நம்முடைய வினா விடுக்கும் ஆற்றலைக் கொண்டு அளத்தல் கூடாது. கவிதைப் பாடத்தில் வினா விடுக்கும் முறை மாணாக் கரின் மகிழ்ச்சிக்குத் துணை செய்தாலன்றி, வேறு நோக்கத்திற் கென அதனை மேற்கொள்வது சரியன்று; அதற்கு இங்கு இடமும் இல்லை. கவிதைகள் அறிதிறன் ஆய்வுகளுமன்று[4]; சில சமயம் அவற்றை அங்ஙனம் ஆய்வுகளாக மேற்கொள்வதும் உண்டு. சிறந்த கவிதைகளில் அறங்கூறும் பண்பும் அமைந்திருப் பதில்லை. எனவே, அவர் பாடத்திற்கென மேற்கொள்ளப்

3 அறிதிறன் -Intelligence

4 அறிதிறன் ஆய்வுகள் - Intelligence tests.

பெறும் கவிதை அவ்வகுப்பிற்கு ஏற்றதுதானா என்று மட்டிலும் சோதித்துக் கொண்டால் போதுமானது. அதுவும் ஆசிரியர் நன்கு அறிந்த கவிதையாக இருப்பின், அவர் எடுக்கும் பாடம் பின்னும் சிறக்கும்; வெற்றியையும் நல்கும்.

**இன்றியமையாத பழக்கம்:** தாய்மொழியைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் தாம் படித்துச் சுவைத்த சிறந்த கவிதைகளைத் தொகுப்பாகத் திரட்டி வைத்துக் கொள்ளும் பழக்கமுடையவர்களாக இருத்தல் வேண்டும். இன்று தமிழ்நாட்டில் தமிழ்ப் பணியாற்றும் தமிழாசிரியர்களில் எத்துணைப் பேரிடம் இப்பழக்கம் உள்ளது? எத்துணைப் பேரிடம் கவிதைகளைச் சதா படித்துச் சுவைக்கும் பழக்கம் அமைந்துள்ளது? இவை இரண்டும் உண்மையிலேயே சவால் விடுக்கும் வினாக்களே. தமிழ்மொழியில் பல திரட்டு நூல்கள் உள்ளன என்பது உண்மைதான். ஆயின், அவை எவராவது படித்துச் சுவைத்த கவிதைகள் என்று துணிந்து சொல்ல இயலாது. அவை பல காரணங்களை அடிப்படையாகக் கொண்டு தொகுக்கப் பெற்றவை என்றுதான் கொள்ள வேண்டும். காதலில் நாமேதான் காதலியைப் பொறுக்கி எடுக்க வேண்டும். பிறர் காதலிக்கின்றனர் என்பதற்காக நாம் ஒரு பெண்மேல் காதல்கொள்ள இயலாது! இன்று நமக்குக் கிடைக்கும் திரட்டு நூல்கள் அனைத்தையும் நம்முடைய இலக்கியப்பரப்பிலுள்ள அழகான கவிதைகள் அனைத்தையும் நம்முன் கொண்டுவைக்க இயலும். நம்மிடம் சிறப்பான திறமை அமையாத வரை, நாம் சிலவற்றைத்தான் சுவைக்க முடியும். நாம் சுவைக்கக் கூடியவை மட்டிலும்தான் நம்முடைய திரட்டு நூலில் இடம் பெறும். ஒரு நல்ல கவிதை உண்மையில் நல்லதாகவே இருக்க வேண்டும் என்று சிலர் வாதிக்கலாம். உண்மைதான்; ஆனால் ஒருவருடைய உள்ளத்தைக் கவர்ந்த கவிதை அனைவருடைய உள்ளத்தையும் கவரும் என்று சொல்வதற்கில்லை; கவர வேண்டும் என்ற கட்டாயமும் இல்லை. ஒவ்வொருவருடைய அறிவு நிலைக்கும் உணர்ச்சி நிலைக்கும் ஓர் எல்லை உண்டு. கம்பனைக் கருத்தூன்றிப் படிப்பவர்கள் இளங்கோவையும் படித்துச் சுவைக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை; சிந்தாமணியில் உள்ளத்தைப்பறிகொடுப்போர் சேக்கிழாரிடமும் உறவுகொள்ள வேண்டும் என்ற நியதி இல்லை; செயங்கொண்டாரிடம் ஈடுபட்டவர் முத்தொள்ளாயிரத்திடமும் கனிவு கொள்ள வேண்டும் என்ற அவசியமும் இல்லை. நாம் பாநலம் துய்க்கும் திறனை வளர்த்துக் கொள்ளவேண்டும் என்பது உண்மையே; நாம் அதனை வளர்த்துக்கொள்ளவும் செய்கின்றோம். நாம் என்னதான் முயன்று அத்

திறனைப் பெற்றாலும் நமக்கும் ஓர் எல்லையுண்டு அல்லவா? இந்த எல்லைதான் நம்முடைய திரட்டு நூலை வரையறை செய்கின்றது. ஓர் எல்லைக் கோட்டினுள் அடக்குகின்றது. எனவே, நம் உள்ளத்தைக் கவரும் கவிதை யொன்றினைத் தேர்ந் தெடுக்க வேண்டுமாயின், நம்முடைய திரட்டு நூலைத்தான் புரட்ட வேண்டும். பள்ளியில் ஒரு மாணாக்கன் தக்க முறையில் கற்பிக்கப்பெற்றால், அவன் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியை அடைவதற்கு முன், ஒரு நல்ல கவிதைத் தொகுப்பை வைத்திருப் பான்.

**இன்றைய அவலநிலை:** ஆனால், இன்று பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் நிலவும் அவலநிலை என்ன?, கவிதை பயிற்றல் நேரான வழியில் செல்வதில்லை. அது தேர்வுகளின் நிமித்தமே நடைபெற்று வருகின்றது. மாணாக்கர்கள் கவிதையைப்பற்றிய தம்முடைய சுவையில் அதிகமாக நம்பிக்கை கொள்ள முடிகின்ற தில்லை. மாணாக்கர்கள் ஒரு கவிஞனைப்பற்றிய திறனாய்வு வினாவிற்கு விடையளிக்க முடியும். ஆனால், அக்கவிஞனுடைய கவிதைகளிலிருந்து தாம் படித்துச் சுவைத்த, தமக்குப் பிரிய மான, கவிதைகளை மேற்கோள்களாகக் காட்ட முடிகின்ற தில்லை. பெரும்பாலான மாணாக்கர்கள் ஒரு பெருங் கவிஞனு டைய கவிதைகளை விட அக்கவிஞனைப்பற்றி யாரோ எழுதி வெளியிட்ட திறனாய்வு உரையையே நன்கு அறிந்தவர்களா யுள்ளனர். தேர்வு முறையே இத்தகைய அவல நிலைக்குக் காரணம் என்று சொல்லவேண்டும். தேர்வு பிரச்சினைப்பற்றி இங்கு ஆராயத் துணிவது மற்றொன்று விரித்தலில் கொண்டு செலுத்திவிடும். தேர்வுகளைப்பற்றி நன்கு அறிந்தவர்கள் அவற்றை வெறுக்கத்தான் செய்கின்றனர். தேர்வினைக் கொண்டு மதிப்பிடப் பெற்றவர் பெரும்பாலும் 'புலவர்' என்று கருதப்பெறும் நிலையில் இல்லாததை நாம் காணாமல் இல்லை. ஆனால், அதுதான் இன்றைய உலகம்; எப்படியோ முதல் வகுப் பில் தேர்ச்சி பெற்றுவிட்டார் என்றால் அவர்தான் 'தமிழறிஞர்'; அங்ஙனமே, எப்படியோ பெரிய பதவியிலிருக்கும் வாய்ப்பு கிடைத்துவிட்டால், அவரும் 'தமிழறிஞராகவே' கருதப்பெறு கின்றார். அறிவியல் துறையிலோ கணிதத் துறையிலோ ஒரு வருக்கு இவ்வாய்ப்பு ஏற்பட்டால், அவர் உண்மை நிலை விரை வில் வெளிப்பட்டுவிடும்; தமிழ்த்துறையில் 'உண்மைநிலை' வெளி படாமலேயே தம்முடைய காலம் முழுவதையும் ஓட்டி விட லாம்!

மேற்கூறியவாறு தேர்வுகளில் வெற்றியடைந்தவர்கட்கும் கவிதை யுலகத்திற்கும் சிறிதும் தொடர்பு இல்லாத நிலையைக் காணும்பொழுதுதான் நாம் மிகவும் வருந்த வேண்டியுள்ளது. தேர்வுக் காய்ச்சலில் சீரழிகின்றவர்கள் தம்முடைய உள்ளத்தைக் கவரும் கவிதைகளில் கருத்தினைச் செலுத்த முடிகின்றதில்லை. பேராசிரியர்கள் தரும் குறிப்புகளிலும், அச்சு வடிவம் பெற்றுள்ள உரைநூல்களிலுமே தம் உள்ளத்தைப் பறிகொடுக்கின்றனர்; அவற்றையே 'மறை மொழிகளாகக்' கருதுகின்றனர். கவிதை கற்பிப்போரும் தேர்விற்காகவே கற்பிக்கும் சடங்கினை நடத்துகின்றனர். ஆனால், கவிதை கற்பிப்பதன் நோக்கம் முருகுணர்ச்சியை வளர்ப்பது, அழகினைக் கண்டு களிப்புறுவது என்பதாகும். இதனை அறிந்தும் கற்பிப்போர் அந்நோக்கத்தை நிறைவேற்ற முடிகின்றதில்லை. ஏதோ அத்தி பூத்தமாதிரி ஒரு சிலர் இல்லாமலும் இல்லை. நாம் விரும்பும் கவிதை யொன்றினைச் சிறந்த முறையில் ஒரு வகுப்பிற்குக் கற்பித்தால், மாணாக்கர்களின் கண்களில் ஒருவித ஒளி வீசுவதைக் காணலாம்; அவர்கள் முகத்தில் ஒரு வித மலர்ச்சியைப் பார்க்கலாம்; அவருடைய உள்ளங்கள் உணர்ச்சி நிறைந்தவைகளாக இருப்பதையும் உணரலாம். இந்நிலையைக் காண்பதே நம்முடைய பரிசில் ஆகும். இதுவே நாம் பெறும் ஊதியத்தினும் சிறந்ததாகும்.

**திறனாய்வாளர்களின் குறிப்புகள்:** திறனாய்வாளர்கள் கவிதையைப்பற்றிக் கூறியுள்ள குறிப்புகள் கவிதைகளை உணர்வதற்குப் பெருந்துணை செய்கின்றன என்பதில் சிறிதும் ஐயம் இல்லை. சில பாடல்களை இக்குறிப்புகளின்றிச் சரியாக உணரவும் முடிகின்றதில்லை. பேராசிரியர், நச்சினார்க்கினியர், பரிமேலழகர், அடியார்க்கு நல்லார் போன்ற உரையாசியர்கள் விட்டுச் சென்றுள்ள குறிப்புகள் இல்லையாயின் தமிழ் இலக்கியத்திலுள்ள பல அருமையான பாடல்களின் கருத்தினை நன்கு புரிந்து கொள்ள முடியாது. சாதாரணமாகப் பொருள் வெளிப்படையாகவுள்ள பாடல்களும் அவர்களுடைய உரைகளால் புதுமெருகுடன் பொலிவதைக் காணலாம். சிந்தாமணியிலிருந்து ஓர் எடுத்துக்காட்டு:

> ''கரும்பே தேனே அமிர்தே காமர் மணியாழே!
> அரும்பார் மலர்மேல் அணங்கே மழலை அன்னம்மே
> சுரும்பார் சோலை மயிலே குயிலே சுடர்வீசும்
> பெருபூண் மன்னன் பாவாய் பூவாய் பிணைமானே''[5]

இஃது இலக்கணையாரிலம்பகத்தில் வந்துள்ளது; சீவகன்

5. சிந்தாமணி-செய். 2453

இலக்கணையின் நலம் பாராட்டுவதாக அமைந்துள்ளது இப் பாடல். பாட்டின் பொருள் வெளிப்படை. இதற்குள்ள நச்சினார்க்கினியர்ரின் உரை வருமாறு:

"கணவற்கு மெய்ம்முழுதும் இனிதாயிருத்தலின், கரும்பு. நல்லாருறுப்பெல்லாங் கொண்டு இயற்றலின், தேன். இவ்வுலகி லில்லாத மிக்க சுவையும், உறுதியும் கொடுத்தலின் அமிர்து. காமவேட்கைகளை விளைவித்துஇனிய பண்தோற்றலின், மழலை யுடையதொரு யாழ். கணவற்குச் செல்வத்தைக் கொடுத்தலின் திரு. நடையால் அன்னம். சாயலால் மயில். காலமன்றியும் கேட்டோர்க்கு இன்பஞ் செய்தலின், குயில். மன்னன் மகளே யென்றல் புகழன்மையின் மன்னன் பாவாயென்றது, அவன் கண் மணிப்பாவை யென்பதுணர்த்திற்று: இனி இவள் கொல்லிப் பாவையல்லள், மன்னன் பாவையென்றுமாம். சேடியர் கற்பித்த கட்டளை தப்பாமற் கூறலின், பூவை. நோக்கத்தால் மான்."

நச்சினார்க்கினியரின் இந்த உரையால் பாடலின் சிறப்பு பன்மடங்கு உயர்ந்து விடுகின்றது: நம்முடைய சுவையறிவும் விஞ்சுகின்றது. பாட்டு ஜீராவில் போட்டுள்ள '**குலோப் ஜாமுன்**' போலாகின்றது. உரை கவிதையின் புதுப்பொருளில் நம் மனத்தை ஈடுபடுத்துகின்றது, என்றாலும், கவிதையைப்பற்றி எல்லாம் சொல்லி முடிந்தபின், நாம் உள்ளத்தால் உணர்வதே கவிதையின் உண்மையாகும். எனவே, ஆசிரியர் தாமே ஒரு கவிதைத் தொகுப்பை வைத்துக்கொள்ளவேண்டியது மிகவும் இன்றியமையாதது என்பது பெறப்படுகின்றது. அப்பொழுது தான் ஆசிரியர் தாம் உணர்ந்ததை மாணாக்கர்கட்கு நன்கு உணர்த்த முடியும். கவிதையைப்பற்றிய பல செய்திகளை ஆசிரியர் தெரிந்து கொண்டிருக்கலாம்; இவற்றை அவர் தகவல் களைத் தருவது போலவே கற்பிக்க முடியும். ஆனால் கவிதை யைப்பற்றிய உணர்ச்சி அவரிடம் இல்லாவிடில், மாணாக்கர் களிடம் அவ்வுணர்ச்சியை எழுப்புதல் முடியாது. கவிதையைப் பற்றிய உணர்ச்சி ஆசிரியரின் இதயத்திலிருந்து நேராகப் பாயாத வரை, அது மாணாக்கர்களின் இதயத்தைக் கொள்ளை கொள்ள இயலாது. கவிதை கற்பித்தலில், கவிதையை மாணாக்கர் களிடையே உயிருடன் வாழச் செய்வதே முக்கியமாக வேண்டப் படுவது; அஃதாவது, கவிதையின் அழகில் அவர்களைச் சொக்கும் படிச் செய்வது, மேலும் கற்பித்தலால் இம்மகிழ்ச்சியை உரம் பெறச் செய்யலாம். எனவே, நம்முடைய நோக்கம் கவிதையை

அறியச் செய்வதன்று; உணரச்செய்வது; அழகான பொருளை விரும்பச் செய்வது; அதன்பிறகு அவ்விருப்பத்தைப் புரிந்துகொள்ளும் முறையால் உரம்பெறச் செய்யலாம். "ஒரு கவிதையை நாம் உணராதவரை அதைப் புரிந்துகொள்ள முடியாது; கவிதையிலுள்ள உணர்ச்சிகள் திரும்பவும்-படைக்கப் பெறாதவரை, அக்கவிதை நமக்குப் புரிவதில்லை"[6] என்று முர்ரே என்ற அறிஞர் கூறியிருப்பது ஈண்டுச் சிந்தித்தற்குரியதாகும். இஃது உண்மையாயின், ஆசிரியர் தம்முடைய கவிதைத் தொகுப்பிலிருந்தே கவிதையைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

**பயிற்சிக் கல்லூரியின் பணி:** மேற்கூறியவற்றிலிருந்து ஆசிரியர் பயிற்சிக் கல்லூரியின் தமிழ்த்துறைப் பகுதியின் பணிகளுள் இத்தொகுப்புப் பணியும் ஒன்றாக இருக்க வேண்டும் என்றாகின்றது. இங்கு மாணாக்கர்கட்குப் பல பாடல்களைத் தாமாகவே படித்துச் சுவைத்துத் திரட்டும் பயிற்சியைத் தருதல் வேண்டும். தம்முடைய கவிதைச் சுவைகளில் ஓர் அசைக்க முடியாத நம்பிக்கைஏற்படும்படி செய்தல் வேண்டும். நாம் படிப்பில் காட்டும் புதிய வழிகளுக்கேற்பவும் புதிய நோக்கத்திற்கேற்பவும் பயிற்சிக் கல்லூரி மாணாக்கர் தம்முடைய சுவையை வளர்த்துக் கொள்ளக் கூடும். தாமாகக் கவிதைகளைத் தேர்ந்தெடுக்கும் திறன் ஏற்படத் தொடங்கிவிட்டால், அவர்கள் சரியான பாதைகளில் செல்லுகின்றனர் என்று கொள்ளலாம். அவர்கள் கவிதைகளைக் கவிதைகளுக்காகவே படித்துச் சுவைக்கத் தொடங்கிவிட்டனர் என்றும், தம் இதயம் களிப்படைவதற்கேற்றவாறு புதிய கவிதைகளைக் கேட்க விரும்புகின்றனர் என்றும் நம்பலாம். கற்பிப்பதற்கென்று அவர்களிடம் கவிதைகள் சேரத் தொடங்கும். அன்றியும், அவர்களிடம் பயில வரும் மாணாக்கர்களையும் கவிதைகளைத் தேர்ந்தெடுக்கும் பணியில் உய்ப்பர்.

**நினைவிலிருத்த வேண்டியது:** நம்முடைய கவிதைத் தொகுப்பிலிருந்து பாடல்களைத் தேர்ந்தெடுக்குங்கால் ஒன்றை நாம் நினைவிலிருத்தல் வேண்டும். நம்முடைய கவிதைத் தொகுப்பிலுள்ள சிலவகைப் பாடல்கள் இளம் மாணாக்கர்கட்குச் சிறிதும் பொருந்தாமலிருக்கும். புரியாத மொழிநடை, கவிதையுணர்த்தும் கருத்து அல்லது உணர்ச்சியில் தெளிவில்லாமை சில பாடல்களைப் பொருத்தமற்றதாக்கக் கூடும். ஆனால் பல ஆசிரியர்கள் நினைப்பதுபோலன்றி, சிறுவர்களின் பாநலம் வியக்கும் ஆற்றல்

6. Professor G, Murray; *The Interpretation of Ancient Greek Literature*

மிகப் பெரியதாக உள்ளது. அவர்களது மகிழ்ச்சியில் ஒருவித செழிப்பும் கூர்மையும் துலங்கும்; இவற்றின் முன்னர் முதிர்ந்தவர்களின் சுவையுணரும் ஆற்றலும்கூட மங்கிவிடுகின்றது. சில சமயம் ஆசிரியர் மாணாக்கர் நிலைக்குக் கீழிறங்க வேண்டுமென்று முயன்று அவர்கள் நிலைக்கும் மிகக் கீழாக இறங்கி வருவதினின்றும் இதை ஓரளவு அறியலாம். இங்ஙனம் முயல்வதைவிட ஆசிரியர்கள் மாணாக்கர்களைத் தம் நிலைக்கு உயர்த்துவதில் முயல்வது சிறந்த பலன் அளித்தல் கூடும்.ஒரு கவிதையில் மாணாக்கர்கள் முற்றிலும் சுவைக்க முடியாத பல செய்திகள் இருக்கலாம். ஆனால், என்ன? கம்பனிலும் வள்ளுவத்திலும் சிலப்பதிகாரத்திலும் சிந்தாமணியிலும் நாம் எடுத்தவுடன் புரிந்துகொள்ள முடியாத எத்துணையோ இடங்களிருக்கவில்லையா? எனினும், நாம் துணிவாக அவற்றைப் படித்துப் புரிந்துகொள்ள முயல்கின்றோமன்றோ? நம்முடைய முழுக் கவனத்தையும் செலுத்தி ஒவ்வொரு சொல்லையும் சொற்றொடரையும் மீட்டும்மீட்டும் ஆராயும்பொழுது, அவற்றின் பொருள்களைக் கண்டறியும் பொழுது, பாட்டின் புதிய அழகுகள் நமக்குப் புலனாகின்றன; புதிய உண்மைகள் தெளிவாகின்றன. முழுவதையும் சுவைக்க முடியாவிட்டாலும், ஓரளவு வெற்றியடைகின்றோம். பிறிதொரு முறை அப்பாடலைப் பயில நேரிடுங்கால், இன்னும் அது நமக்கு விளக்கம் எய்துகின்றது. நாம் விரும்பும் கவிதையைத் துணிவாகப் பயில்வதே மேல்; இதில் தயக்கமே கொள்ள வேண்டியதில்லை. தயக்கம் இருப்பின், வெற்றி கிட்டுவதும் அரிதாகப் போய்விடும். இங்ஙனமே, ஒரு கவிதையை ஒரு வகுப்பிற்குக் கற்பிக்க நேரிடும்பொழுதும், தயங்காமல் செயலில் இறங்கி விடுதல் வேண்டும். கவிதையில் ஆசிரியர் கொண்டிருக்கும் நம்பிக்கை அவர் விரும்பும் சூழ்நிலையை உண்டாக்கிவிடும். உண்மையாக ஆசிரியர் மாணாக்கர்களை உயர்நிலைக்கு உயர்த்த வேண்டும் என்று விரும்புவாராயின், அதற்கு வேண்டிய முயற்சியையும் மேற்கொள்வாராயின், மாணாக்கர்கள் ஆசிரியர் விரும்பும் எந்த நிலைக்கும் உயர்வர் என்பது ஒருதலை. இந்த உண்மையை அநுபவத்தில் பல ஆசிரியர்கள் நன்கு அறிவர்.

**சிறந்த மாணாக்கர்கள் :** சில சமயம் ஒரு வகுப்பில் ஆசிரியர் மனத்தைவிட உயர்ந்த மனங்களைக் கொண்ட மாணாக்கர்களும் இருத்தல் கூடும் என்பதை ஆசிரியர் நினைவில் கொள்ள வேண்டியதொன்று. ஆசிரியர் மனத்தைவிட விரைந்து செல்லக் கூடிய மாணக்கர் மனங்களும் உண்டு. சில சமயம் இவ்வுண்மையை நாம் நினைத்தாலும், இத்தகைய மனங்கள் இருப்

பதைப் பெரும்பாலும் நாம் காணத் தவறுகின்றோம். காரணம், மாணாக்கரின் மனநிலையைப் புரிந்துகொள்ள முயலாததே. மாணாக்கர் நிலைக்கு நாம் இறங்கவேண்டும் என்பதை விட்டு, அவர்களை நம் நிலைக்கு உயர்த்த வேண்டும் என்று முயன்றால், மிக உயர்ந்த கவிதைகளையும் மாணாக்கர்களைச் சுவைக்கச் செய்தல் வேண்டும் என்று விரும்பினால், உண்மையில் சில உயர்ந்த மனங்கள் இருப்பது நமக்குத் தட்டுப்படும். மாணாக்கர் கள் அப்பாடல்களைச் சுவைக்கும்பொழுது அவர்களின் கண் ணொளியின் ஒளிர்விலிருந்தே இதனை அறிந்து கொள்ளலாம். இவ்வாறு நம் ஆற்றல் முழுவதையும் கொட்டி ஒரு பாடலைப் பயிற்றும்பொழுது, சில சமயம் நாம் அக்கவிதைகளில் காண முடியாத ஆழ்ந்த உள்ளுணர்வையும் உணர்ந்து விடுகின்றோம்; கவிதையின் மிக ஆழ்ந்த அடித்தளமும் நம் உணர்வுக்குத் தட்டுப் படுகின்றது. கவிதைச் சுவையின் கொடு முடியையும் நாம் எட்டி விட முடிகின்றது. நாமும் நம் நிலையைவிட எத்தனையோ மடங்கு உயர்ந்து விடுகின்றோம். இந்த உண்மையையெல்லாம் நன்கு உணர்ந்து கவிதைகளைத் தேர்ந்தெடுக்கும் செயலில் இறங்க வேண்டும். மேற்கூறியவாறு தேர்ந்தெடுக்கப்பெற்ற கவிதைகளை மாணாக்கர்கட்கு அறிமுகம் செய்வதிலும் ஒரு முறை உண்டு; வழி உண்டு. இதை அடுத்துக் காண்போம்.

# கவிதை அறிமுகம்

அறிமுகம் செய்து வைத்தல் என்பதுவே ஒரு கலை. என்ன தான் படித்திருந்தாலும், எத்தனைப் பட்டங்கள் பெற்றிருந்தாலும் நாகரிகமாக அறிமுகம் செய்து வைக்கமுடியாத பலரை நாம் காணத்தான் செய்கின்றோம். ஆனால், இலக்கிய உலகில் அறிமுகம் செய்து வைப்பதென்பதோ ஓர் அரிய கலையாகக் காட்டப்பெறுகின்றது. கம்பன் சித்திரித்துள்ள கலையுலகத்தில் பரதன் குகனுக்குத் தன் தாயரை அறிமுகம் செய்து வைத்தல் மிக அற்புதமாக்க் காட்டப்பெற்றுள்ளது. நாகரிக உலகை அறியாத கங்கை வேடனுக்குப் பரதன், கோசலை, சுமித்திரை, கைகேயி ஆகியோரை அறிமுகம் செய்கின்றதாகக் கம்பநாடன் படைத்துள்ள சொல்லோவியங்களை ஒவ்வொருவரும் படித்துச் சுவைக்கவேண்டியது மிகவும் இன்றியமையாதது. அந்தமுறையில் சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்ற பெற்றியில், கவிதைகளை அறிமுகம் செய்தால் மாணாக்கர்கள் தமக்குப் பாடமாக வந்துள்ள கவிதைகளை நன்கு சுவைப்பர்.

கம்பராமாயணத்தில் சூளாமணிப் படலம் ஐந்தாவது படிவத்திற்குப் பாடமாக வந்துள்ளதாகக் கொள்வோம். அநுமனும் சீதையும் உரையாடுவதாகக் கம்பன் சித்திரித்துள்ள அற்புதச் சொல்லோவியங்களை மாணாக்கர்கட்கு எவ்விதம் அறிமுகம் செய்வது? இன்று சாதாரணமாகப் பள்ளிகளில் எவ்வாறு அறிமுகம் செய்யப்பெறுகின்றது? ''கம்பராமாயணம் சூளாமணிப் படலம்: கம்பராமாயணம் என்பது கம்பரது இராமாயணம் என்று விரியும்: ஆறாம் வேற்றுமைத்தொகை. கம்பரால் செய்யப்பட்ட இராமாயணம் என விரிந்து மூன்றன் உருபும் பயனும் உடன் தொக்க தொகை எனவும் கொள்ளலாம்; கம்பர் இயற்றிய இராமாயணம் என்பது கருத்து. இராமாயணம் ராம+அயநம் வடமொழிப் புணர்ச்சி; தீர்க்கசந்தி. 'ராம' என்னும் சொல்லுக்குத் 'தன் திருமேனி யழகினாலும், நற்குண நற்செய்கைகளாலும் யாவரையும் மகிழ்விப்பவன்' என்பது பொருள். அயநம்—அறிவிப்பது: நெறி எனவும், இடம் எனவும் பொருள்படும். இதற்கு அவதாரம், கதை எனப்பொருள் கூறுவாருமுளர். இராமாயணம், பாலகாண்டம், அயோத்தியா காண்டம் ஆரணிய காண்டம், கிட்கிந்தா காண்டம், சுந்தர காண்டம், யுத்த காண்டம், என்னும் ஆறு காண்டங்களை யுடையது. இராமா

யணத்தை முதன்முதலில் வான்மீகி முனிவர் வடமொழியில் இயற்றினார். கம்பர் அதனை முதல் நூலாகக் கொண்டு தமிழ் மொழியில் இயற்றினார். ஆகையால் இது வழிநூலாம். இந் நூலுக்குக் கம்பரால் இடப்பட்ட பெயர், இராமாவதாரம் என்பது. இஃது அறம், பொருள், இன்பம் வீடு என்னும் உறுதிப் பொருள் நான்கினையும் திறம்பட விரித்துப் பரம்பரையான பழைய வரலாறுகளைத் தொகுத்துக் கூறுகின்றமையால் இதிகாசமாம்.''[1]

இத்துடன் அறிமுகம் நிறுத்தப் படுவதில்லை! கம்பர் என்ற பெயர்க் காரணம், தாய் தந்தையர், பிறந்த குலம், தழுவியிருந்த சமயம், ஆதரித்தவர், சமகாலப் புலவர்கள், சமகால அரசர்கள், இயற்றிய நூல்கள், காலம் போன்ற செய்திகளை யெல்லாம் அடக்கி நூலாசிரியரின் வாழ்க்கை வரலாறு கூறிய பிறகு, சுந்தர காண்டம்- பெயர்க்காரணம், அதிலுள்ள படலங்கள் முதலியவை களும் அறிவிக்கப்பெறும். இத்தனைக்கும் மேலாக இராமாயணக் கதையும் சுருக்கியுரைக்கப்பெறும். இதன் பிறகு பாடமாக வந் துள்ள பகுதியின் பாடல்கள் ஒவ்வொன்றாகப் பதவுரை, தெளி வுரை, விளக்கவுரை, இலக்கணக் குறிப்பு என்ற வரிசையில் கற்பிக்கப்பெறும். இவ்வாறு ''அடியைப் பிடிடா, பாரதப் பட்டா!'' என்று தொடங்கிப் பாடல்களை அறிமுகம் செய்வ தால் வரும் பயன் என்னை? வெறும் சலிப்பும் அலுப்பும் தவிர வேறு ஒன்றும் இராது. அடுத்து வரும் காலாண்டுத் தேர்வு அரையாண்டுத் தேர்வுகளில் கேட்கப்பெறும் வினாக்கட்கு விடைகளாகத் தருவதைத் தவிர, இதில் வேறு ஒரு நோக்கமும் இல்லை. இந்த அறிமுகத்தால் கவிதையைப்பற்றிய சிறப்பு ஒருசிறிதும் புலனாகாது. அதற்கு மாறாக வெறுப்புச் சுவை வேண்டுமானால் வளரக்கூடும்.

கவிதையை எப்படித்தான் அறிமுகம் செய்வது? இந்த வினா வுக்கு விடைக்காணல் அவ்வளவு எளிதன்று. இந்த நூலாசிரி யரைப் பொறுத்தவரை, இன்று நடைமுறையிலுள்ள முறைகள் அனைத்தும் சரியானவை அல்ல என்றுதான் கருதுகின்றார். எல்லா முறைகளும் கவிதைச் சுவையைக் கெடுக்கத்தான் துணை செய்கின்றன. இவற்றால் கவிதைமீது வெறுப்புத் தட்டவும் செய்யலாம்; கவிதைகளை யாத்த கவிஞனையும் பாராட்டத்

1. தேர்வுக்காக ஆயத்தம் செய்யப்பெற்ற ஓர் உரை நூலிலிருந்து எடுத்தது. இம்முறையையே பல தமிழாசிரியர்கள் மேற்கொள்ளுகின்றனர்.

2Alexander Haddw : *On the Teaching of Poetry*. pp. 18 - 24

துணை செய்யாது போகவும் செய்யலாம். இன்று கையாளப் பெறும் முறைகள் யாவும் இவ்விரண்டையும் தவறாது செய்கின்றன என்றுதான் சொல்ல வேண்டும். பெரும்பான்மையான தமிழாசிரியர்கள் மேற்கொள்ளும் முறைகள் இப்பலன்களைத்தான் தருகின்றன. நடைமுறையில் மேற்கொள்ளப்பெறும் ஒரு சில முறைகளை ஈண்டு நோக்குவோம்;

கவிஞர் வரலாறு கூறும்முறை: சிலர் கவிதைகளை யாத்த கவிஞனின் வரலாற்றைக் கூறிப் பாடத்தைக் கற்பிக்கத் தொடங்குகின்றனர். பாடப் பகுதியாக அமைந்துள்ள பாடல்களை எழுதுவதற்குக் கவிஞனுக்கு நேரிட்ட சூழ்நிலையைச் கூறிப் பாடல்களைக் கற்பித்தல் இம்முறையின் அடிப்படையான நோக்கமாகும். மாணாக்கர்கள் அறிந்துள்ள கவிதைகளைக் கற்பிக்க நேரிடுங்கால் இம்முறை பெரிதும் பயன்படும்; அப்பொழுதுதான் அவர்கள் கவிதைகளை யாத்த கவிஞனைப்பற்றி அறிந்து கொள்ள ஆர்வங் காட்டுவர். இம்மாதிரியான நிலை ஏற்படுங்கால், முதலில் கவிதையை அறிமுகம் செய்து கற்பித்தால் மாணாக்கர்களிடம் இயல்பாக அக்கவிதைகளைப் பாடிய கவிஞனைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற ஆர்வம் எழும்; அவர்கள் ஆர்வத்தை அறிந்து, கவிஞனின் வரலாற்றைக் கூறினால், அஃது அவர்கள் உள்ளத்தில் நன்கு பதியும்; கவிதைகளின் விளக்கமும் தெளிவாகப் புலனாகும்.

ஆனால், ஒன்று நினைவிலிருத்த வேண்டியது மிகவும் இன்றியமையாதது. கவிஞனின் வரலாறு கூறுவது கவிதையைக் கற்பித்தல் ஆகாது. கவிஞனின் பிறப்பு, வளர்ப்பு, கல்வி முதலிய செய்திகளைக் கூறுவதால் யாதொரு பயனும் விளையாது. அவற்றை அறிவதால் கவிதைகளுக்கு விளக்கம் ஏற்படுமானால், அல்லது கவிதைகளைத் துய்க்கும்போது இன்பம் பயக்க அவை துணை புரியக் கூடுமானால், அச்செய்திகளைக் கூறலாம். அப்படியொன்றும் ஏற்படாது என்பதை அறிந்தால், இச்செய்திகளைக் கூறவேண்டிய அவசியமே இல்லை.

கீழ்க்காணும் பாடல் ஐந்தாம் படிவத்திற்குப் பாடமாக வந்துள்ளது எனக் கொள்வோம்.

இவ்வே ,பீலி அணிந்து மாலை சூட்டிக்
கண்திரள் நோன்காழ் திருத்திநெய் அணிந்து
கடியுடை வியன்நக ரவ்வே; அவ்வே,
பகைவர்க் குத்திக் கோடுநுதி சிதைந்து

கொல்துறைக் குற்றில மாதோ என்றும்;
உண்டாயின் பதம் கொடுத்து
இல்லாயின் உடன் உண்ணும்
இல்லோர் ஒக்கல் தலைவன்
அண்ணல்எங் கோமான் வைந்நுதி வேலே[8].

அதியமானிடமிருந்து தொண்டைமானிடம் தூது சென்ற அவ்வையாரிடம் தொண்டைமான் தன் படைக்கலக் கொட்டிலைக் காட்டித் தன் செருக்குத் தோன்ற நின்றபோது, அவ்வையார் அதியமானின் படைக்கலங்களைப் பழிப்பதுபோல் புகழ்ந்தும், தொண்டைமானின் படைக்கலங்களைப் புகழ்வது போலப் பழித்தும் கூறியதாக அமைந்த பாட்டு இது. இப் பாடலை எங்ஙனம் அறிமுகம் செய்வது? இப்பாடலைப் புரிந்து கொள்வதற்கு அவ்வையாரின் ஆதியோடந்த வரலாறு தேவை யில்லை. அதுபோலவே தொண்டைமான் அதியமானின் வரலாறு களும் தேவையில்லை. அவ்வையாருக்கும் அதியமானுக்கும் இடையே இருந்த நட்பும் நம்பிக்கையும், தொண்டைமானுக்கும் அதியமானுக்கும் ஏற்பட்ட பகைமை உணர்ச்சியும் தெளிவாக அறிவிக்கப்பெற்றால் போதும். பாடல் தோன்றிய சூழ்நிலையை மாணாக்கர் அறிந்து கொண்டால் பாடலின் உயிர் நாடி பேசத் தொடங்கி விடும்; பாடலும் துலக்கமாகும்.

**விளக்க முறை:** பல்வேறு போக்குகளில் இம்முறை மேற் கொள்ளப் பெறுகின்றது. சில சமயம் பாடல்களிலுள்ள கடின சொற்கள் மட்டிலும் கரும்பலகையில் எழுதப்பெற்றுப் பாடம் தொடங்கப் பெறுகின்றது. இந்தப் போக்கை மேற்கொள்வத னால் கடின சொற்கள் பின்னும் கடின சொற்களாக மாறு கின்றன. அச்சொற்கள் வந்துள்ள சந்தர்ப்பங்களை அறியாது அவற்றின் பொருளை யாங்ஙனம் அறிந்து கொள்ள இயலும்? இவ்வாறு சொற்களின் பட்டியலை முன்னரே தருவதற்குப் பதி லாகப் பாடல்கள் வகுப்பில் நல்ல முறையில் படிக்கப்பெற்று அவற்றின் உயிர்நாடியை மாணாக்கர்கள் அறிந்து கொள்வார் களேயானால், பெரும்பாலோர் சந்தர்ப்பங்களையொட்டிக் கடின சொற்களின் பொருளை அறிந்து கொள்ளக்கூடும். இம் முறையில் சொற்களின் பொருளை அறிவதைக் காட்டிலும் வேறு சிறந்த முறை ஒன்று இருக்க முடியுமா? சந்தர்ப்பங்களையொட்டி மாணாக்கர்கள் சொற்களின் பொருளை ஊகித்தறிந்து பிறகு அவற்றின் சரியான பொருளை உறுதி செய்து கொள்வதை விட,

8 புறம் - 95.

வேறு முறையில் அவற்றின் பொருளை நிலைநிறுத்த முடியாது. ஆனால் பாடல்களின் பொருளையறியாது அவற்றின் உயிர் நாடியை யாங்ஙனம் அறிந்து கொள்ள முடியும் என்றும், பாடல் களின் பொருளையறிவதற்குச் சொற்களின் பொருளை அறிந்து கொள்வது இன்றியமையாததன்றோ என்றும் வினவலாம். ஆம்: உண்மைதான். ஒரு முறை படித்தவுடன் பாடல்களின் பொருளை ஒருவரும் அறிந்து கொள்ள முடியாது. ஏன்? இரண்டாம் முறை மூன்றாம் முறைகளில் கூடப் பொருள் புலனாகாத பாடல்களும் உள்ளன. அங்ஙனமிருக்க, ஒன்றுமறியாக் சிறார்களிடமிருந்து எதை எதிர்பார்க்க முடியும்? புறப்பாடல்கள் போன்றவற்றின் பாடல்களிலுள்ள சொற்கள் மிகக் கடினமானவை; அப்பாடல்களின் உயிர்நாடியை மாணாக்கர்கள் படித்தலினால் உணர்ந்துகொள்ளவே முடியாது. இத்தகைய பாடல்கள் மாணாக்கர்களின் அறிவுநிலைக்கு அப்பாற்பட்டவை; இவற்றைத் தனிப்பட்ட முறையில்தான் கையாள வேண்டும். இவற்றைக் கற்பிக்க நேரிடுங்கால் சொற்களின் பொருளைத் தொடக்கத்திலேயே விளக்கலாம்; அல்லது பாடல்கள் படிக்கப் பெறும்போதே விளக்கவும் செய்யலாம்.

சிலசமயம் பாடல்களின் கருத்தை முன்னதாகவே கூறிப் பாடத்தைத் தொடங்குவதுமுண்டு. சங்கப் பாடல்கள், சிலேடைச் செய்யுட்கள், பிள்ளைத்தமிழ்ப் பாட்டுகள் போன்றவற்றைக் கற்பிக்க நேரிடும்போது இப்போக்கைத்தான் மேற்கொள்ள வேண்டும். சிறிதளவு உதவி செய்யாவிடில் முதல் தடவை படிப்பதால் மாணாக்கர்கள் பாடல்களைப் புரிந்துகொள்ளவே முடியாது. பெரும்பாலும் மேற்படிவங்களில்தான் இந்நிலை ஏற்படும். எப் போக்குகளை மேற்கொண்டாலும், முதலில் கவிஞனைப் பேச விட வேண்டும்; கவிஞனுக்குத்தான் முதலிடம் தரவேண்டும். கவிஞன்தான் தன் கருத்தைத் தெளிவாக, ஆணித்தரமாக, உணர்த்த முடியும்.

இம்முறையில் கேவலமான போக்கும் உண்டு. சில சமயம் ஆசிரியர் பாடம் நடைபெறுங்கால் "இது முக்கியம், குறித்துக் கொள்க; இந்த அடியைக் கவனி; எவ்வளவு அழகாக உள்ளது! வருணனையின் வனப்பைக் காண்க; வந்துள்ள அணியின் நயத்தை எண்ணி மகிழ்க" என்றெல்லாம் கூறிக் கவிதை அநுபவத்தையே சிதைக்கக்கூடிய சந்தர்ப்பமும் இருக்கும். இதை அறவே நீக்க வேண்டும். கவிதை கற்போர் கவிதைகளை நேரடியாக

அநுபவித்தல் வேண்டும். கவிதைகளிலுள்ள கற்பனை நயம், தொடைநயம், அணிநயம் முதலியவற்றை யெல்லாம் மாணாக்கர்கள் தாமாகக் காணவேண்டும். ஆசிரியரே அனைத்தையும் சொல்லிவிட்டால், மாணாக்கர்களிடம் கவிதைச் சுவையறியும் திறன் எங்ஙனம் அமையும்? அப் பயிற்சி எப்படி அவர்களிடம் வளரும்? ஆசிரியர் குறுக்கிடாது மாணாக்கர்களே நேரடியாகக் கவிஞனிடம் உறவு கொண்டால்தான் இப்பண்பு அவர்களிடம் நன்முறையில் வளரக்கூடும். ஆசிரியரின் விளக்கம் அல்லது விமர்சனம் கூறப்பெறுவதற்கு முன்பு மாணாக்கர்கள் குறைந்தது இரண்டு முறையாவது கவிஞனிடம் நேர்த் தொடர்பு கொள்ள வேண்டும். பிறகுதான், தாம் கவிதைகளைக் கற்பிகும்போது ஆசிரியர் அவற்றின் கற்பனை நயம் முதலியவற்றை — மாணாக்கர் உணராதிருந்தால்—கற்பிக்கத் தொடங்க வேண்டும். வினாக்களின்மூலம் சோதித்தால், பெரும்பான்மையானவற்றை மாணாக்கர்களே அறிந்து கொண்டிருப்பதைக் கண்டு ஆசிரியர் இறும்பூது எய்த நேரிடும். வேண்டுமானால், உறுதியான அநுபவம் ஏற்படுவதற்கு அவற்றை வலியுறுத்தி விளக்கம் தரலாம். எனவே, மாணாக்கர்களே கவிதைகளைச் சுவைப்பதுதான் முறை; வேண்டப்படுவதும் அஃதே என்பதை அறிந்து பாடல்களை அறிமுகம் செய்வது மிகவும் இன்றியமையாதது.

**சூழ்நிலை காட்டும் முறை:** கவிஞன் எந்தச் சூழ்நிலையில் கவிதையைப் பாடினானோ அந்தச் சூழ்நிலையை மாணாக்கர்கட்குக் காட்டிக் கவிதையின் உயிர்நாடியை அவர்கள் உணரும்படி செய்வது சூழ்நிலை காட்டும் முறையாகும். இம் முறையின் நோக்கம் மிகச் சிறந்தது; நல்லாசிரியர்களில் பெரும்பாலோர் இம்முறையைத்தான் மேற்கொள்கின்றனர். மாணாக்கர்கள் கவிதையின் அழகைக் காணத் தவறக்கூடும் என்று சிலர் எண்ணி, மாணாக்கரிடையே ஆவலாக எதிர்பார்த்து நிற்கும் பண்பை உண்டாக்க முனைகின்றனர். இது தவறு; பெருந் தவறுங்கூட. இவ்வாறு முனைவது ஆசிரியர் கவிதையைப் பாடிய கவிஞன்மீது அல்லது அதனைக் கற்கும் மாணாக்கர்கள்மீது நல்லெண்ணம் கொள்ளவில்லை என்றே கருத இடமுண்டாகின்றது. ஆசிரியர் நல்ல முறையில் கவிதையைப் படித்தால், அவர் குரல், படிக்கும் பாணி ஆகியவை மாணாக்கரின் கவனத்தை ஈர்த்துவிடும்; கவிதை தோன்றிய அல்லது கவிதை சித்திரிக்கும் சூழ்நிலையையும் மாணாக்கர் உணர்ந்து கொள்ளும் நிலையையும் காட்டிவிடும். பாரதியின் குயிற்பாட்டிலுள்ள பகுதிகளை இதற்கு எடுத்துக்காட்டுகளாகக் கொள்ளலாம். இவற்றுள்,

குயில் தன் நெஞ்சைப் பறிகொடுத்தாகக் கூறும் பகுதியை ஈண்டுத் தருவோம்.

"கானப் பறவை கலகலெனும் ஓசையிலும்,
காற்று மரங்களிடைக் காட்டும் இசைகளிலும்,
ஆற்றுநீர் ஓசை அருவி ஒலியினிலும்,
நீலப் பெருங்கடல்எந் நேரமுமே தான்இசைக்கும்
ஓலத் திடையே உதிக்கும் இசையினிலும்,
மானுடப் பெண்கள் வளரும்ஒரு காதலினால்
ஊனுருகப் பாடுவதில் ஊறிடுந்தேன் வாரியிலும்,
ஏற்றநீர்ப் பாட்டின் இசையினிலும், நெல்இடிக்கும்
கோற்றொடியார் குக்குவெனக் கொஞ்சும் மொழியினிலும்
சுண்ணம்இடிப் பார்தம் சுவைமிகுந்த பண்களிலும்,
பண்ணை மடவார் பழகுபல பாட்டினிலும்,
வட்டமிட்டுப் பெண்கள் வளைக்கரங்கள தாம்ஒலிக்கக்
கொட்டி இசைத்திடுமோர் கூட்டமுதப் பாட்டினிலும்,
வேயின் குழலோடு வீணைமுத லாம்மனிதர்
வாயினிலும் கையாலும் வாசிக்கும் பல்கருவி
நாட்டினிலும் காட்டினிலும் நாளெல்லாம்நன்றொலிக்கும்
பாட்டினிலும், நெஞ்சைப் பறிகொடுத்தேன் பாவியேன்"[4]

இந்தப் பகுதியை நல்ல முறையில் ஆசிரியர் படித்தால் பாட்டின் உயிர்நாடியை ஓரளவு மாணாக்கர் உணரக்கூடும். ஆனால், அவர் பாரதியைப்போல் படித்துக் காட்டமுடியாது; பாரதிதான் முறைப்படி படித்துக்காட்டக் கூடும். அவர் பாடின கவிஞரல்லவா? ஆசிரியர் படிக்கும்போது பாரதி காட்டும் பண்பில் ஒரு சிறிது தோன்றவே செய்யாது ஒழியினும் ஒழிய லாம். ஆனால், ஆசிரியர் படிப்பதிலிருந்தே மாணாக்கர்கள் கவிதையின் சிறப்பியல்புகளைக் காணட்டும்; கவிதையைப்பற்றிய எண்ணங்கள் அவர்கள் மனத்தில் உதிக்கட்டும். ஆசிரியர் கவிதையைப்பற்றிக் கூறுவதற்கு இடம் இல்லாமல் இல்லை; அதற்கும் ஒரு வாய்ப்பு உள்ளது. இருந்தாலும் முதலில் கவிஞனைப் பேசவிடுவதுதான் முறை. கவிஞனே உயிரோடிருந்து வகுப்பிற்கு வந்தால், ஆசிரியர் என்ன செய்வார்? அதைதான் அவர் இப்போதும் செய்ய வேண்டும்.

சில சமயம் சிறப்புச் சொற்பொழிவுகள் நடைபெறுங்கூட்டத்திற்கு உள்ளூர்ப் பிரமுகர் ஒருவரைத் தலைவராகப் போடுவ

4. பாரதியார்: குயில்பாட்டு: வரி [28-44]

துண்டு. ஒவ்வொரு சொற்பொழிவாளரையும் அறிமுகம் செய்து வைப்பதில் தலைவர் தலையச்சுற்றி மூக்கைப் பிடிப்பார்; "அடியைப் பிடிடா, பாரதப்பட்டா" என்பதுபோல் அவர் பேச்சாளர்களின் குலம் கோத்திரங்களையெல்லாம் சொல்லிக் காலத்தைக் கொலை செய்வார். சொற்பொழிவாளர்களின் பேச்சுகளைக் கேட்பதற்காகத் திரளாக வந்திருக்கும் மக்கள் கைகளைப் பிசைந்து கொண்டு தலைவர் எப்போது தாம் பேசுவதை நிறுத்திக்கொண்டு இருக்கையில் அமர்ந்து பேச்சாளரைப் பேசவிடுவரோ என்று தம் வெறுப்பை முகக் குறிகளால் காட்டி நிற்பர். இந்தத் தலைவர் நிலைக்கும் கவிஞரைப்பற்றிக் கூறிக் காலத்தை வீணாக்கும் ஆசிரியர் நிலைக்கும் வேறுபாடில்லை. எனவே, ஆசிரியர் கவிஞனிடமும் மாணாக்கர்களிடமும் நல்லெண்ணங் கொண்டு விரைவாகக் கவிதையில்நுழைவதே சாலவும் ஏற்புடைத்து.

**தொகுத்தறி முறை:** சிலர் தேர்ந்தெடுக்கப்பெற்ற வினாக்களைக்கொண்டு மாணாக்கரிடமிருந்தே கவிதையை வருவிப்பதற்கு முனைவதுண்டு. இதைத் தொகுத்தறி முறை என்று வழங்கலாம். 'முனைவதுண்டு' என்றுதான் கூறினோம். ஏனெனில் கம்பன், வள்ளுவன், இளங்கோ ஆகிய மேதைகளின் சொல்லோவியங்களை யாண்டிலும் ஆற்றலிலும் குறைந்துள்ள மாணாக்கர்களிடமிருந்து எங்ஙனம் வருவிப்பது? சட்டியிலிருந்தால்தானே அகப்பையில் வரும்? இன்னும் யோசிக்கப்போனால் ஆசிரியரிடந்தான் அச்சொல்லோவியங்களைக் காணமுடியுமா? அன்றித் தேர்ந்தெடுக்கப்பெற்ற அவர் வினாக்கள், மாணாக்கர் தரும் விடைகளில் தேர்ந்தெடுக்கப்பெற்றவை ஆகியவற்றில் தான் பார்க்கமுடியுமா? ஒரு சில பாடல்களை இவ்வாறு தொடங்கலாம்; இதற்குப் பெருந் திறனும் வினவும் ஆற்றலும் இருக்கவேண்டும்; இவற்றைப் பெற்றுள்ள ஆசிரியர்கள் மட்டிலுந்தான் இம்முறையை மேற்கொள்ள முடியும். சில சந்தர்ப்பங்களில் இம்முறையை மேற்கொள்ளலாம்; ஆனால், இதைக் கற்பிக்கும்முறை என்று கொள்ளுதல் தவறு. வகுப்பில் ஒரு முறை படித்தவுடன் எளிதில் விளங்கக்கூடிய கவிதைகளை மட்டிலுந்தான் இங்ஙனம் கையாளலாம். 'அழகை' வருணிக்கும் கீழ்க்காணும் பாரதிதாசனின் பாடல்களை அறிமுகம் செய்யுங்கால் இம்முறையை மேற்கொள்ளலாம்:

காலையிளம் பரிதியிலே அவளைக் கண்டேன்!
  கடற்பரப்பில், ஒளிப்புனலில் கண்டேன்! அந்தச்
சோலையிலே, மலர்களிலே, தளிர்கள் தம்மில்,
  தொட்டஇடம் எலாம்கண்ணில் தட்டுப் பட்டாள்!

மாலையிலே மேற்றிசையில் இலகு கின்ற
　　மாணிக்கச் சுடரிலவள் இருந்தாள்; ஆலஞ்
சாலையிலே கிளைதோறும் கிளியின் கூட்டந்
　　தனில்அந்த 'அழகெ'ன்பாள் கவிதை தந்தாள்.

சிறுகுழந்தை விழியினிலே ஒளியாய் நின்றாள்;
　　திருவிளக்கிற் சிரிக்கின்றாள்? நாரெ டுத்து
நறுமலரைத் தொடுப்பாளின் விரல்வ ளைவில்
　　நாடகத்தைச் செய்கின்றாள்: அடடே! செந்தோட்
புறத்தினிலே கலப்பையுடன் உழவன் செல்லும்
　　புதுநடையில் பூரித்தாள்; விளைந்த நன்செய்
நிறத்தினிலே என் விழியை நிறுத்தி னாள்;என்
　　நெஞ்சத்தில் குடியேறி மகிழ்ச்சி செய்தாள்.[6]

இப்பாடல்களை இசையுடன் படிக்கும்போதுதான் கவிதை தோன்றும். இவற்றிலுள்ள சொற்களையோ சொற்றொடர்களையோ கரும்பலகையில் எழுதிப் போட்டோ வேறு விதமாகவோ கற்பித்தலால் யாதொரு பயனும் விளையாது. பல்வேறு விதமான வினாக்களை விடுத்து மாணாக்கர்களிடமிருந்து கவிதையை வருவிக்கமுயல்வது ஆசிரியரின் திறமையை விளம்பரப் படுத்துலதாக முடியுமேயன்றி, கவிஞன் படைத்துக் காட்டியுள்ள கலையின் அழகைக் காட்டுவதாக அமையாது. ஓர் அழகான ஓவியத்தில் ஒவ்வொரு கோடுகளின் நயத்தைக் கண்டு வியக்கலாம்; மகிழ்ச்சி கொள்ளலாம். ஆனால், அவை அவ்வோவியத்தின்கோடுகளேயன்றி ஓவியம் அன்று. அக்கோடுகள் அனைத்தும் ஒன்று சேர்ந்து கலை வடிவத்தைக் காட்டி நிற்கின்றனவே, அதைக் காண்பதுதான் ஓவியத்தின் அழகைக் கண்டு மகிழ்தலாகும்; ஓவியத்தை முழுமையாகக் கண்டு மகிழ்வதுதான் கலையைத் துய்த்தலாகும். தனிப்பட்ட கோடுகளில் அழகில்லை. அவற்றின் அழகெல்லாம், கலையின் அழகை மிகுவித்தலைப் பொறுத்துள்ளது. அதுபோலத்தோன் கவிதையிலும். எடுத்துக் காட்டாக,

'அண்ணலும் நோக்கினான்; அவளும் நோக்கினாள்[15].

என்று கவிஞன் வாளா கூறி விட்டுவிட்டான். நோக்கினால் விளைந்த பயனைப்பற்றி யாதொன்றும் கூறவில்லை. அதன் பொருளைத்தான் வள்ளுவப் பெருந்தகை முன்னரே விரித்து விட்டாரே.

6 பாரதிதர்சன்: அழகின் சிரிப்பு- அழகு 1, 2.
5 கம்ப-மிதிலைக் - 35.

கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனும் இல.[7]

இக்குறளால் 'நோக்கு' என்ற சொல்லின் எண்ணத்தைத் தோற்றுவிக்கும் ஆற்றலை அறிந்த நமக்கு மேற்குறித்த கம்ப நாடன் வாக்கில் வந்துள்ள 'நோக்கு' என்பதன் பொருளை அறிவதில் சிரமம் ஒன்றும் இல்லை. என்றாலும், காவியத்தில் அவ்வாக்கின் சந்தர்ப்பத்தை யறியாது அது குறிக்கும் பொருளையோ அன்றி வேறு நயத்தையோ அறிந்து அநுபவிக்க முடியாதன்றோ? அன்றியும், செய்யுள் உறுப்பினுள் ஒன்றாகிய 'நோக்கு' என்பதற்குப் பேராசிரியர் 'முல்லை வைந்நுனை' என்ற அகப்பாட்டை[8] எடுத்துக்காட்டித் தம் நுண்மாண் நுழைபுலம் தோன்றக் கூறியிருக்கும் அரிய உரையும்[9] ஈண்டுச் சிந்திக்கற் பாலது. ஒரு செய்யுளின் அடியில் வந்துள்ள சொல்லின் பொருளை நன்கு அறிவதற்கு அந்த அடியின் பொருளை நன்கு அறிவதுடன், அச்செய்யுளில் எத்தனை அடிகள் வந்திருந்தாலும் அவற்றை முழுவதும் அறிந்தாலன்றி அச்சொல்லின் பொருளைத் தெளிவாக அறிந்து கொள்ள இயலாது என்று அவ்வுரையாசிரியர் குறிப்பாற் பெறவைத்தமை எண்ணி எண்ணி மகிழ்வதற்குரியது; சிந்தித்தற்குரியது. தமிழ் இலக்கியத்திலிருந்து இத்தகைய நுட்பமான எடுத்துக்காட்டுகள் எத்தனை வேண்டுமானாலும் தரலாம்.

கைவண்ணம் அங்குக் கண்டேன்
கால்வண்ணம் இங்குக் கண்டேன்.[10]

கடைக்கண்ணாற் கொல்வான்போ னோக்கி நகைக்கூட்டம்
செய்தானக் கள்வன் மகன்.[11]

என்ற அடிகளின் நயத்தை அவை வந்துள்ள சந்தர்ப்பங்களை யறியாது யாங்ஙனம் அறிந்து கொள்ள இயலும்?

இனி, அதிகம் கூறவேண்டியதில்லை. ஆசிரியர்கள் முருகுணர்ச்சியை மாணாக்கர்களிடம் வளர்க்க விரும்பினால், அவர்களாகவே கவிதைகளிலுள்ள நயத்தைக் காணும் ஆற்றலை அவர்

7. குறள்- 11000.
8. அகம்-4. 9. தொல். பொருள். செய்யுளி- (பேராசிரியம்) 104.
10. கம்ப- அகலிகை- 82. 11- குறிஞ்சிக்கலி- 16.

களிடம் உண்டுபண்ண விழைந்தால், கவிதையை முழு வடிவமாக அவர்கட்குக் காட்டாது யாங்ஙனம் அதை நிறைவேற்ற முடியும்? உள்ளங்கவர் கவிதைகளை மாணாக்கர்களின் உள்ளத்தைக் கவருமாறு செய்வதே ஆசிரியரின் தலையாய கடமையாகும். கவிதையை உணரச் செய்வதுதான் ஆசிரியரின் நோக்கமாக இருக்கவேண்டுமன்றி அறியச் செய்வது அன்று; அழகுக் கலையை விழையும் ஆற்றலை வளர்த்து அதை ஈடுபாட்டுடன் துய்த்த லால்தான் அவ்விழைவை மிகுவிக்க முடியும். இனி, கவிதையை அறிமுகம் செய்த பிறகு அதை எங்ஙனம் அவர்களிடையே படிப்பது என்பதை அடுத்துக் காண்போம்.

# கவிதையைப் படித்தல்

பாட்டு என்பது பாடி இன்புறவேண்டிய கலை. பாட்டை அநுபவிப்பதற்குச் செவிப்புலன் வேண்டும். பாட்டின் ஒலிநயம் தான் நம் உள்ளத்தைக் கவர்வது; கொள்ளை கொள்வது.

பூதங்கள் ஐந்தாகிப்
 புலனாகிப் பொருளாகிப்
பேதங்கள் அனைத்துமாய்ப்
 பேதமிலாப் பெருமையனைக்
கேதங்கள் கெடுத்தாண்ட
 கிளரொளியை மரகதத்தை
வேதங்கள் தொழுதேத்தும்
 விளங்குதில்லை கண்டேனே.[1]

*[புலனாகி- தன் மாத்திரைகள் ஐந்துமாகி; கேதங்கள் - துன்பங்கள்.]*

என்ற பாடலை உரைநடைபோல் படிக்கலாம்; கதைபோல் வாய்க்குள்ளேயே படிக்கலாம். மெல்லப் பாடியும் படிக்கலாம். இம் மூன்று முறையில் எது சிறந்தது? பாடலை வாய்க்குள்ளேயே படித்தறியும்போது அதன் கருத்துமட்டிலும்தான் விளங்கியிருக்கும். ஏதோ ஒரு பெருங்குறை தட்டுப்படும்; மதுரம் மிக்க மாம் பழத்தை உண்ணாமல் முகர்ந்துபார்த்துவைத்துவிட்டது போன்ற குறை உணரப்படும். வாய்விட்டுப் படித்திடும்போதும் ஒருவிதக் குறை உணரப்படத்தான் செய்யும்; அந்தப் பழத்தை முகர்ந்து பார்த்தது மட்டும் அன்றி, மெல்ல நறுக்கி வைத்து அதன் கனிந்த நிறத்தையும் கண்டு பிறகு உண்ணாமல் வைத்து விட்டாற் போன்ற குறை உணரப்படும். பாடலைப் பாடிப் படிக்கும் போதுதான் குறைகளெல்லாம் நீங்கிப் பழத்தையே உண்டது போன்ற மனநிறைவு ஏற்படும். எனவே, கவிதையை அநுபவிப் பதற்குக் கட்புலன் மட்டிலும் போதாது; செவிப்புலனின் துணையும் வேண்டும். ஓவியம் பார்த்து இன்புறவேண்டிய கலையாகு மாறுபோலப் பாட்டும் பாடி இன்புற வேண்டிய கலையாகும். கவிதையைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் இந்த உண்மையை அறிந்து கவிதையை வகுப்பில் படிக்க வேண்டும்.

1 திருவாசகம்-48[2]

வாய்விட்டுப் படித்தல்: பழங்காலத்தில் கவிஞன் பாட்டைப் பாடியே கேட்போரை மகிழ்வித்தான். எங்குச் சென்றாலும் அவன் பெரு விருந்தினன்போல் வரவேற்கப்படுவான். நமது நாட்டில் மட்டிலுமல்ல; மேனாடுகளிலும் கவிஞனுக்கு இதே நிலைதான் இருந்தது. இன்று கவிஞன் பாடுவதில்லை; மக்களும் அவனைச் சரியாக மதிப்பதில்லை. இன்று கவிதைகள், அச்சிட்ட நூல்களில் மூங்கையர்போல் உறங்கிக் கிடக்கின்றன. அச்சுக் கலையால் பெரு நன்மைகள் விளைந்த போதிலும், அதன் வளர்ச்சி கவிதைகளை மூங்கையர்போல் இருக்கத் துணையும் செய்துவிட்டன என்று எண்ண வேண்டியுள்ளது. ஆனால், கூட்டங் கூட்டி யாரேனும் ஒருவர் கவிதைகளை உரக்கப் படிக்கும்போதுதான் கவிதைகள் புத்துயிர் பெற்றெழுகின்றன; கவிஞனே எழுந்து பேசுவது போலுள்ளது. கல்விக்கூடங்களில் உரக்கப் படிக்கும்போது இதே நிலையைக் காணலாம். சிறுவர்களும் இளைஞர்களும் கவிதை உலகத்திற்குப் புதியவர்கள். கவிதையிலுள்ள உயிர் நாடியை அவர்கள் அறியார்; அதிலுள்ள இசையின்பம் அவர்கட்குத் தட்டுப்படாது. அதை வாய்விட்டுப் படிக்கும்போதுதான் கவிதையினுள்ள ஓசை நலனை அவர்கள் அறிய முடிகின்றது; துய்க்கவும் முடிகின்றது.

வெடிபடு மண்டத் திடிபல
  தாளம் போட — வெறும்
வெளியி லிரத்தக் களியொடு
  பூதம் பாடப் — பாட்டின்
அடிபடு பொருளின் அடிபடும்
  ஒலியிற் கூடக் — களித்
தாடுங்காளீ, சாமுண்டீ; கங்காளீ!
அன்னை, அன்னை
  ஆடுங் கூத்தை நாடச்
  செய்தா யென்னை.[2]

என்ற பாரதியாரின் 'ஊழிக் கூத்தை' வாய்க்குள் படித்தால் அந்த வீரக் கவிஞனின் ஆவேச உரையைக் கேட்க முடியுமா? அவன் உயிர்நாடியை உணரத்தான் முடியுமா? கவிதைய உரக்கப் படிக்கும்போதன்றோ இயற்கையன்னையின் கோரத் தாண்டவம் நம் மனக்கண்முன் வந்து தோன்றுகின்றது? இக் கவிதையை முறைப்படி படித்தால் தமிழ்மொழியறியாத வேற்று

2 பாரதியார் கவிதைகள் - ஊழிக்கூத்து

நாட்டாரும் இதன் உணர்ச்சியை நன்கு அநுபவித்து மகிழக் கூடும்.

**சிலரது தவறான முறை:** ஒரு புதிய பகுதியைக் கற்பிக்க நேரிடுங்கால், சில ஆசிரியர்கள் மாணாக்கர்களில் சிலரை ஆளுக் கொரு பாடலாக வாய்விட்டுப் படிக்கச் செய்கின்றனர். ஆனால், பட்டறிவு மிக்க ஆசிரியராலேயே அப்பகுதியை முதல் தடவை யாகப் படித்தல் இயலாது. ஆம், அவரால் எங்ஙனம் இயலும்? அவர் அதை நன்கு படித்து உணர்ந்திருந்தாலன்றோ நல்ல முறை யில் படிக்க முடியும்? ''ஒரு பெரிய தொடர்நிலைப் பாட்டை நாம் நன்கு உணராதவரை அதைப் புரிந்துகொள்ள முடியாது; அதை உரக்கப் படித்து அதிலுள்ள உணர்ச்சிகளை நாம் மீண்டும் உண்டாக்காதவரை அதன் பொருள் தெளிவாகப் புலனா காது''— இவ்வாறு கூறுவர் முர்ரே என்ற மேற்புலப் பேராசிரியர். பாடலைப் படிப்பதற்குமுன் அதை நன்கு உணர்ந்து கொள்ள வேண்டும். உண்மை இங்ஙனம் இருக்கும்போது ஒன்றுமறியாத மாணாக்கர்கள், பாடப்பகுதியின் தொடக்கத்தையே அறியாத வர்கள், ஆளுக்கொரு பாடலாகப் படித்தால் அவற்றை அவர்கள் யாங்ஙனம் உணர்தல் முடியும்? அப்படிப் படிப்பதால் அவர்கள் பாடல்களின் அழகைக் காண முடியுமா? அவற்றிலுள்ள முரு குணர்ச்சியைப் பெறத்தான் முடியுமா? இம்மாதிரிப் பொறுப் பற்ற முறையில் புதிய பாடங்களை மாணாக்கர்களுக்கு அறி முகம் செய்து வைக்கும் ஆசிரியர்களைப்பற்றி நாம் என்ன நினைப்பது? இன்னும் சிலர் படிப்பதை அலட்சியமாக எண்ணி, ஏதோ வாய்திறந்து படிக்கின்றனர். பாடல்களிலுள்ள சொற் களின் பொருள்களை அறிந்து கொண்டால் மாணாக்கர்கள் பாடல்களை நன்கு உணர்ந்து கொள்ள முடியும் என்று எண்ணு கின்றவர்கள் இவர்கள். இன்னும் ஒரு விந்தை என்னவென்றால் ஒரு தடவை படித்து முடித்தவுடன் அப்பாடல்களை கற்பிப் பதிலே இறங்கியும் விடுகின்றனர்! படிப்பது அவ்வளவு முக்கிய மன்று, தமது போதனைதான் மிகவும் முக்கியம் என்று இவர் கள் எண்ணுகின்றனர் போலும். உண்மையாக வேண்டப்படுவது எது? ஒரு பாடலைப் பயிற்ற வேண்டுமானால், பாடல்தான் முக்கியம்; பாடல் நூலில் இல்லை. அது படிக்கும்போதுதான் தோன்றும். பாடலை முதலில் மனத்தில் கொள்வதுதான் மிகவும் இன்றியமையாதது. அலட்சியமாக ஒரு தடவை படிப்பதால் பாடல் எங்ஙனம் மாணாக்கர் மனத்தில் குடிபுகும்? உணர்வதற் குக் காலம் வேண்டுமன்றோ? இதைச் சிறிதும் உணராது கற்பிப்ப வர் கவிதை பயிற்றுதலின் நோக்கங்களைச் சிறிதும் அறியா தவர் என்றே கொள்ளவேண்டும்.

**ஒலிநயத்தின் சிறப்பு:** ஒலிநயமே பாட்டின் உடல், ஒலியில்லாவிட்டால் பாட்டு ஏது? இலக்கணவழு இல்லாமல் கவிதையை இயற்றலாம். ஆனால், அது சிறந்த ஓசையுடன் அமைய வேண்டும் என்ற வரையமை இல்லை. ஓசை தருதல் கவிஞனின் திறனைப் பொறுத்தது; ஓசை வேறுபாட்டால் பொருளைத் தெளிவாக்கலும் அவனது வன்மையைப்பற்றியதே. எனவே, பாடல்களை நல்ல முறையில் படித்தால் அவற்றின் உயர்ந்த ஒலியமைப்புக் கேட்போரின் செவிப்புலனை எளிதில் கவர்ந்துவிடும். ஒலியின்பத்தில் மாணாக்கர்களின் உள்ளம் ஒன்றினால்தான். கருத்தின்பத்தை அவர்கள் சிறந்த முறையில் பெற இயலும். ஏற்கெனவே காவடிச்சிந்தின் ஒலிநயத்தை ஒன்றிரண்டு முறை அநுபவித்த உள்ளம் எவ்வளவு பரபரப்பான வேலையில் ஈடுபட்டிருந்தாலும் மீண்டும் அவ்வொலிநயத்தைக் கேட்க நேரிடுங்கால், வேலைகளில் ஈடுபட்டிருக்கும் பரபரப்பைக் குறைத்து விடுதலே இதற்குச் சான்றாகும். வேறு சான்றுகளும் உள்ளன. எதையோ எண்ணிப் பிடிவாதம் செய்து அழும் குழந்தை அன்னையின் தாலாட்டைக் கேட்டு உறங்கிவிடுகின்றது; விரைந்தோடும் பாம்பு இன்னோசையைக் கேட்டதும் வேகத்தைத் தணித்துக்கொண்டு சுருண்டு அமைதி பெறுகின்றது. பறவைகளும் விலங்குகளும் இசையில் மனத்தைப் பறிகொடுக்கின்றன. யோகியர் உள்ளத்தையும் இன்னிசை கவர்ந்து விடுகின்றது.

**செவியின் நுண்ணுணர்வு:** செவி மிகவும் நுட்பமாக அமைந்த பொறி. நரம்புகளின் மென்மைக்கு ஓர் எல்லையாகவும் அமைந்துள்ளது. செவி நரம்புகள் உடம்பின் ஏனைய நரம்புகளையும் ஆட்டிவைக்கும் வன்மையைப் பெற்றுள்ளது. மேளக் கச்சேரியைக் கேட்போரில் இசையறிவு இல்லாதவர்களும் பாட்டின் இசைக் கேற்றவாறு கைத்தாளம் போடுவதைக் காண்கின்றோம். வெகுதூரத்திலுள்ள பறையொலியைக் கேட்டதும் சாளரத்தின் அருகில் நின்றுகொண்டிருக்கும் சிறுவனின் கைகால்கள் தாமாக ஆடுகின்றன. செய்தித் தாளைப் படித்துக் கொண்டிருக்கும் நாமும் வானொலிப் பாட்டைக் கேட்டதும் நம்மை அறியாமல் கைத்தாளம் போடத் தொடங்குகின்றோம்; இவ்வாறு ஒலிநயம் செவிப்புலனைக் கவர்ந்து உடலையே ஆட்டிவைப்பதற்கு எண்ணற்ற எடுத்துக்காட்டுகள் உள்ளன. எனவே, கற்பிக்கும் ஆசிரியர் பாட்டுகளைப் பன்முறை இசையுடன் பாடுங்கால், மாணாக்கரின் உள்ளம் அவற்றுடன் ஒன்றிவிடும் என்பதற்கு எள்ளளவும் ஐயம் இல்லை. திருவாசகப் பாக்களைக் கசிந்துருகிப் பாடிய இராமலிங்க அடிகள் தம் அநுபவத்தை,

வான்கலந்த மாணிக்க வாசகநின் வாசகத்தை
நான்கலந்து பாடுங்கால் நற்கருப்பஞ் சாற்றினிலே
தேன்கலந்து பால்கலந்து செழுங்கனித்தீஞ் சுவைகலந்தென்
ஊன்கலந்து உயிர்கலந்து உவட்டாமல் இனிப்பதுவே.[3]

என்று வெளியிட்டுள்ளதைப் பாட்டைப் பயிற்றும் ஆசிரியர்கள் எண்ணி உணர்தல் வேண்டும். கவிதையநுபவம் இன்னது என்பதை விளக்கும்போதும் இதனைக் குறிப்பிட்டுள்ளோம்.

கன்னன் மனவுவப்போடு தன் புண்ணியமனைத்தையும் வேதியனாக வந்த கண்ணனுக்கு ஈந்து, பெறற்கரிய பேற்றைப் பெற்று மகிழ்ந்த நிலையை வில்லிபுத்தூரார் காட்டும்,

நீலநெடுங் கிரியும்மழை முகிலும் பவ்வ
நெடுநீருங் காயாவும் நிகர்க்கும் இந்தக்
கோலமும்வெங் கதைவாளும் சங்கு நேமி
கோதண்டம் எனும்படையும் குழைத்த வாச
மாலைநறுந் துழாய்மார்புந் திரண்ட தோளும்
மணிக்கழுத்துஞ் செவ்விதழும் வாரி சாதக்
காலமலர் எனமலர்ந்த முகமுஞ் சோதிக்
கதிர்முடியும் இம்மையிலே கண்ணுற் றேனே.[4]

என்ற சொல்லோவியத்தைக்கற்பிக்கநேரிடுவதாகக் கொள்வோம். இங்கு வில்லியின் கன்னன் மாணாக்கர்களிடம் பேசுவதற்குக் காத்துள்ளான். கன்னன் பெற்ற உணர்ச்சியை வில்லி பெற்றால்தானே அவன் கொண்ட உணர்ச்சியை நம்மிடம் கொட்ட முடியும்? வில்லி பெற்ற உணர்ச்சியை ஆசிரியர் பெற்றால் அன்றி, அவர் அவ்வுணர்ச்சியை மாணாக்கர்கட்கு எங்ஙனம் காட்ட முடியும்? ஆசிரியர் இவ்வுணர்ச்சியை எவ்வாறு பெறுவது? ஆசிரியர் தம்மை கன்னனாகவே எண்ணிக்கொண்டு பாடலை உணர்ச்சி ததும்ப இசையுடன் படித்தால், இவ்வுணர்ச்சியைப் பெறலாம். கன்னன் பெற்ற உணர்ச்சி ஆசிரியரைக் கிளர்ந்தெழச் செய்தால், அவர் வாயிலிருந்து வெளிவரும் பாடலும் அவ்வுணர்ச்சியைப் பீறிட்டுக் கொண்டு வெளிவரும்.

பாடலை படித்தல் எளிது என்று அலட்சியம் செய்யும் ஆசிரியரிடம் ஒருநாளும் கவிஞனின் உணர்ச்சி தோன்ற முடியாது.

3. ஆளுடைய அடிகள் அருள்மாலை-செய்-7

4. வில்லிபார-பதினேழாம் போர்-செய்-247.

பாடலைப் படித்தல் அரிய செயல் என்று எண்ணிப் பாடலை ஈடுபாட்டுடன் படிக்கத்தொடங்கும் ஆசிரியரிடமே இவ்வுணர்ச்சி எளிதில் தோன்றும். உண்மையில், பாடலைப் படித்தல் என்பது உள்ளத்தையே அசைத்து விடக்கூடிய செயல்தான்; உணர்ச்சியுடன் படித்தல் பெறற்கரிய பேரின்பத்தை அடைவிக்கும் செயல். சில பாடல்களை உணர்ச்சியுடன் உரக்கப் படிக்கும்போது, அவ்வுணர்ச்சி உரக்கப் படிப்பதையே தடைப்படுத்தவும் கூடும். அங்ஙனம் உணர்ச்சியின் கொடுமுடியினையே எட்டிப் பிடிக்கக் கூடிய அற்புதப்பாடல்கள் தமிழ் இலக்கியங்களில் எண்ணற்றவை உள்ளன. எடுத்துக்காட்டாக ஒன்றைத் தருவோம். மேகநாதன் இறந்து படுகின்றான். இராவணன் சோகக்கடலில் வீழ்ந்துபுத்திர சோகத்தால் பலவாறு புலம்புகின்றான். ஆம், நெற்றிக்கண்ணன் மலையைப் பேர்த்தெடுத்தவனும், கூற்றுவனையும் ஆடல் கொண்டவனுமாகிய இராவணன்தான் புலம்புகின்றான்.

சினத்தொடும் கொற்றம் முற்ற
இந்திரன் செல்வம் மேவ
நினைத்தது முடித்து நின்றேன்;
நேரிழை ஒருத்தி நீரால்
எனக்குநீ செய்யத் தக்க
கடனெலாம் ஏங்கி ஏங்கி
உனக்குநான் செய்வ தானேன்
என்னின்யார் உலகத் துள்ளார்![5]

என்ற பாடல் சோகவுணர்ச்சியின் கொடுமுடியைக் காட்டுவதாகும். இறுதி இரண்டு அடிகளை உணர்ச்சியுடன் படிக்கும் போது, நமது தொண்டை அடைத்து மூச்சே நின்று போவது போன்ற நிலை நமக்கு ஏற்பட்டு விடுகின்றது. மூவுலகங்களையும் வென்று மும்மூர்த்திகளையும் ஏவற்படுத்தி வீர வாழ்க்கை வாழ்ந்த இராவணனையும் புத்திரசோகம் விட்டபாடில்லை. அம்பிகாபதியை இழந்த கம்பநாடன் அன்றோ இவ்வாறு பேசுகின்றான் இராவணன் வாயிலாக? இம்மாதிரி, கவிதையை உணர்ச்சியுடன் படிப்பதுதான் கவிதை கற்பிக்கும் ஆசிரியனின் முதற் கடமை; முதலாய கடமையும் அதுதான்.

ஆசிரியர் நல்ல குரலைப் பெறாதவராக இருக்கலாம்; சிறந்த முறையில் படிக்கும் திறமை பெறாதவருமாகவும் இருக்கலாம். ஆனால், ஈடுபாட்டோடு கூடிய இதயபாவத்துடன் பாடலைப்

5 யுத்த- இராவணன்சோகம்- 36.

படிக்க முற்பட்டால், கட்டாயம் வெற்றிப் பாதையை அடைந்து விடலாம். இதில் சிறிதும் ஐயம் வேண்டாம்; தோல்வி நேரிடக் காரணமே இல்லை. ஆனால், உண்மையான ஈடுபாடு மட்டிலும் வேண்டும்; இதில் சிறிதும் தயக்கம் கூடாது. ''ஐயமுண்டு பயமில்லை மனமே '' என்று எண்ணிச் செயலில் இறங்கவேண்டும். கவிதை கற்பித்தலில் வெற்றி காண வேண்டுமானால், ''பாடலை பன்முறை படிக்க; மீண்டும் மீண்டும் படிக்க; மாணாக்கர்கள் விரும்பும் வரையில் படிக்க; உங்கள் உள்ளம் மெய்மறந்து கவிதையில் தோயும் வரையில் படிக்க'' என்பதையே மறைமொழியாகக் கொள்ளவேண்டும்.

**இசையும் பொருள் விளக்கமும்:** தமிழ்க் கவிதைகளைச் சிறிது இசையோடு வாய்விட்டுப் படித்தால்தான் அவற்றின் சொல்லும் பொருளும் சுவையும் நன்கு தோன்றி உள்ளத்திற்கு உவகை அளிக்கும். இசையில் ஈடுபடாதவர்கள் எவரும் இல்லை. பகுத்தறிவில்லாக் குழந்தைகளும், கொடிய விலங்குகளும் இசையில் ஈடுபடுகின்றன என்பதை இலக்கியங்கள் வாயிலாக நாம் அறிகின்றோம். தொழிலாளர் தம் தொழில் வருத்தம் தோன்றாதிருத்தற் பொருட்டுப் பாட்டுகள் பாடி அவற்றின் இசை இனிமையில் ஈடுபட்டுத் தொழில் செய்து முடிப்பதை இன்றும் காணலாம். நாட்டுப் புறங்களில் பொழுது புலர்வதற்குப் பல நாழிகைக்கு முன்னதாகவே எழுந்து கபிலை ஏற்றங்களில் நீர் இறைக்கும் உழவர்கள் ஏற்றப் பாட்டுகள் பாடுவது இன்றும் வழக்கிலிருந்து வருகின்றது. 'ஏற்றப் பாட்டிற்கு எதிர்ப் பாட்டில்லை' என்ற பழமொழியையும் காண்க. எனவே, கவிதைகளைப் படிக்கும் ஆசிரியர்கள் இசையுடன் அவற்றைப் படித்தால், புறத்தே சென்றுலவும் மாணாக்கர் மனத்தைச் செய்யுட் பாடத்தில் ஈர்ப்பதுடன், கவிதைச் சுவையிலும் திளைப்பதற்கு வழிகோலவும் கூடும். இசையென்றால் கேள்விக்கு இனிமையாக இருக்குமாறு அதற்குரிய ஓசையில் கவிதையைப் படிப்பதேயாகும்.

தமிழ்ப்பாக்களை எந்தெந்தப் பண்களில் எவ்வாறு பாடுவது என்பதற்குக் கீழ்கண்ட குறிப்புகள் ஓரளவு துணை செய்யலாம்.

| பா | பண் |
|---|---|
| வெண்பா | சங்கராபரணம் |
| அகவற்பா | ஆரபி, தோடி |
| கலிப்பா | பந்துவராளி |
| கலித்துறை | பைரவி |
| தாழிசை | தோடி |

| | |
|---|---|
| விருத்தம் | காம்போதி, கல்யாணி, மத்யமாவதி |
| உலா | சௌராஷ்டிரம் |
| பிள்ளைத்தமிழ் | கேதார கௌளம் |
| பரணி | கண்டாரவம் |

பாட்டின் சுவைக்கேற்றவாறும் இசையை மாற்றிக்கொள்ளலாம்.

| சுவை | பண் |
|---|---|
| கடவுள் வாழ்த்து, வணக்கம் | தன்யாசி, காம்போதி, பூபாளம் மாயாமாளவ கௌளம், நாத நாமக்கிரியா, ஆனந்தபைரவி மத்ய மாவதி, ஆரபி. |
| நகை | இந்தோளம், மோகனம், பிலகரி, கல்யாணி. |
| அழுகை | தோடி, புன்னாகவராளி, பைரவி, ஸ்ரீ முகாரி, சாவேரி. |
| சமநிலை | சங்கராபரணம் |
| பெருமிதம் | அடாணா, கேதாரகௌளம், கானடா, நாட்டை. |
| காதல் | வசந்தா, பைரவி, கமாஸ், |
| செவிலிப் பாடல் | நீலாம்பரி |

இவ்வாறு பண்களை அமைத்துப் பாட முடிந்தால் சாலவும் ஏற்புடைத்தாக இருக்கும்.[6] இசைப் பயிற்சி யுள்ளவர்கள் இவற்றைச் சீரிய முறையில் மேற்கொண்டு கவிதை கற்பித்தலில் சிறந்ததொரு வெற்றியடையலாம். இனி, இவ்வாறு படிக்கப் பெற்ற கவிதைக்குவிளக்கம் தருவதெங்ஙனம் என்பதை அடுத்துக் காண்போம்.

6. பொருத்தமான பண்களை அமைத்து இசையுடன்பாடுவதற்குத் தேவையான கருத்துகளைக் கோபாலகிருஷ்ண பாரதியாரின் நந்தனார் சரித்திரம், அருணாசலக் கவிராயரின் இராம நாடகக் கீர்த்தனைகள் ஆகிய நூல்களில் காணலாம். தேவாரம், திருப்புகழ்ப் பாக்களுக்குப் பண்கள் இருத்தலை அறிக.

# கவிதை விளக்கம்

'கவிதைக்கு எவ்வாறு விளக்கம் தருவது?' என்று வினா கற்பித்தல் தொழிலில் புகும் நிலையிலுள்ள இளம் ஆசிரியர்களிடையே எழுதல் இயற்கை. இந்த நூலாசிரியரைப் பொறுத்தவரை கவிதைக்கு விளக்கம் தருவதற்கு எவ்வித திட்டமான முறையொன்றும் இல்லை. பேராசிரியர் அலெக்ஸாண்டர் ஹேடோவின் கருத்துப்படி கவிதை கற்பித்தல்—கவிதைக்கு விளக்கம் தருதல்—காதல் புரிதலை ஒத்தது. காதல் புரிவதில் முறையொன்று இருக்க முடியுமா? என்ற வினாவிற்கு என்னவிடையோ அதைத்தான் கவிதைக்கு விளக்கம் தருவதற்கும் வைத்துக் கொள்ளவேண்டும்! விளக்கந் தருவதில் ஒவ்வொருவரும் தத்தமக்குத் தோன்றுகின்ற முறையில்தான் விளக்கந் தருதல் வேண்டும். என்றாலும், ஒரு சில குறிப்புகளை ஈண்டு எடுத்துக் காட்டலாம். ஆனால் குறிப்புகளைக் கையாளும்பொழுது கற்பிக்கும் வகுப்பு, கற்பிக்க வேண்டிய பாடல் ஆகியவற்றிற்கேற்றவாறும், கற்பிக்கும் ஆசிரியரின் அறிவுநிலை, மனப்பான்மை ஆகியவற்றிற்கேற்றவாறும் மாறுபடத்தான் செய்யும்.

முதல் நிலை: கவிதையை அதற்கு ஏற்ற இசையுடன் சொற்களைப் பிரிக்காமல் சீர் பிரித்துப் படித்துக் காட்டவேண்டும். பாட்டின் பொதுக்கருத்தை மாணாக்கர்கள் உணரும்வரை பல முறை ஆசிரியர் படித்துக் காட்டலாம். மாணாக்கர்கள் பாடலின் கருத்தை உய்த்துணர்வதுடன் கவிதை இன்பத்தையும் சொல் நயம், பொருள் நயம் ஆகியவற்றையும் துய்க்க வேண்டும். எக்காரணத்தைக்கொண்டும் கவிதையைப்பற்றித் தமது கருத்தை மாணாக்கர்களின் மனத்தில் வலிந்து திணித்தல் கூடாது. கவிதையைப்பற்றி அவர்கள் சிந்தையில் ஒரு கருத்து உருவாவதற்கு வேண்டிய காலம் தருதல் இன்றியமையாதது. ஒவ்வொரு மாணாக்கனும் தத்தம் மனப்பான்மைக்கேற்றவாறு கவிதையைப்பற்றி ஒரு கருத்தை உருவாக்கிக் கொள்ளும் உரிமையை ஆசிரியர் பறித்தல் கூடாது. ஆசிரியர் புரியும் உதவியெல்லாம் மாணாக்கர்கள் கொண்ட கருத்தை வளர்ப்பதற்கும் உறுதிப்

1. பேராசிரியர் அலெக்ஸாண்டர் ஹேடா-Professor Alexander Haddow

படுத்துவதற்கும் துணையாக இருக்க வேண்டுமேயன்றி, அதைச் சிதைக்கவோ மாற்றவோ துணையாக இருத்தல் கூடாது. இதைக் கவிதை கற்பிக்கும் முக்கிய நோக்கமாகக் கொள்ளவேண்டும் ஆசிரியர்கள். கவிதைகளைத் துய்க்கும் பயிற்சி மாணாக்கர் கட்கு ஏற்பட்டு விட்டால், ஆசிரியர் கவிதையை இரண்டாவது தடவை படிக்கும்பொழுதே அவர்கள் கவிதையை ஓரளவு தம் உள்ளத்தில் அமைத்துக்கொண்டு விடுவர். அடுத்து ஒன்றிரண்டு தடவை படிக்கும்பொழுது ஆசிரியர் **பாட்டின் உயிர்நிலைக் கருத்துக்குப்** போய் அதை எடுத்துக்காட்டவேண்டும். அக் கருத்தை, காட்சி அல்லது கதை நிகழ்ச்சியை, நமக்கு உணர்த்தவே அப்பாடல் கவிஞனால் பாடப்பெற்றது என்பதை அவர்கள் அறியச் செய்தல் வேண்டும்.

**இரண்டாம் நிலை:** பாடலை அல்லது பாடல்களை ஒரு முழுப்பொருளாகவே கருதவேண்டும். பாடல்களைப் பல விவரங்கள் அடங்கியவை என்று கருதிக் **கண்ணழித்து** (பதச் சேதம் செய்து) சொல்லுக்குச் சொல் பொருள் கூறியும், பாடல் களில் வரும் அணிகளுக்கும் இலக்கணக் குறிப்புகளுக்கும் தனித் தனி விளக்கம் கூறியும் பாடல்களை விளக்குதல் தவறு. முதலில் சொல் சொல்லாகப் பிரித்து உரை சொல்வது, உரைநடை யாக்குவது, உவமைப் பொருள் கேட்பது முதலியவற்றைக் கையாண்டு பழைய முறையில் கற்பித்தல் கவிதைச் சுவையைக் கெடுத்துக் கவிஞனின் உணர்ச்சியை அறியத் துணை செய்வ தில்லை என்று இக்காலத்தவர் அம்முறையைக் கண்டிக்கின்றனர். பாடல்களைப் படித்து அவற்றின் உயிர்நிலைக் கருத்தையும் உணர்ச்சி நிலையையும் அழகையும் அறிந்த பிறகு, அவற்றை மீட்டும் நன்கு உணர்வதற்குத் துணை புரியுமளவிற்கு விளங்காத அருஞ்சொற்களுக்குப் பொருள் கூறலாம்; சில விவரப் பகுதி களை விளக்கலாம். இறுதியாக ஒருமுறை பாடல்களை இன்னோசையுடன் பாடி மாணாக்கர்களைக் **கவிதைச்** சுவை **யின் கொடுமுடிக்குக்** கொண்டுசெலுத்தவேண்டும். **சிலப்பதி காரம், மணிமேகலை, கம்பராமாயணம், பாரதம்** போன்ற நீண்ட கதைப் பகுதியாக இருந்தால், அதைக் கருத்து முடிவு கொண்ட சிறுசிறு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு கற்பித்தல் வேண்டும்.

**உணர்ச்சியைப் பெறுவதே:** பாடல்களுக்குச் சொற்பொருள் (பதவுரை), பொழிப்புரை, கருத்துரை, இலக்கணக் குறிப்புகள் தொடைநயம், அணிநயம் முதலியவற்றை நன்கு எடுத்துக்

கூறி விளக்குவதால், மாணாக்கர் பாடல்களின் பொருளை நன்கு உள்ளத்தில் அமைப்பர்; தேர்விலும் உயர்ந்த மதிப்பெண்கள் பெறுவர். ஆனால், பாடல்களின் பொருளை மட்டிலும் அறிதல் ஒருசார் நோக்கமேயாகும். சுவையான உயர்ந்த உணவைச் சுவைத்து மகிழாது அப்படியே விழுங்கி வயிற்றைநிரப்புவது போலாகும் இது. இதைவிடப் பாடல்களின் நயத்தையும் அழகையும் உணர்ந்து சுவைத்து மகிழ்தலே சிறந்த நோக்கமாகும்; முருகுணர்ச்சியில் திளைத்தலே முக்கிய நோக்கமாகும். கவிதைகளைக் கவிஞன் எந்த உணர்ச்சியில் பாடினானோ அவ்வுணர்ச்சி கவிதைகளைக் கற்போரிடத்தும் உண்டாதல் வேண்டும்; அப்பொழுதுதான் அவர்கள் கவிதை இன்பத்தில் திளைக்க முடியும். இதற்கு ஆசிரியர் என்னசெய்யவேண்டும்? கவிஞனின் உணர்ச்சியை முதலில் தாம் பெற்று, பிறகு மாணாக்கட்கு வழங்கவேண்டும். சொற்சுவையும் பொருட்சுவையும்; தொடைநயமும் அணிநயமும் இடத்திற்கேற்ற சந்த இனிமையும் கொண்டு விளங்கும் பாடல்களில் மாணாக்கர்களைத் திளைக்க வைத்தலே தமிழாசிரியர்களின் முதற்கடமையும் முதலாய கடமையுமாகும். கவிதைகளின் கவினை, உணர்ச்சியை, அறியச் செய்யாது பாடல்களைப் பயிற்றுவதால் பயனொன்றும் இல்லை. தொடக்க நிலையில் கற்ற பாடல்களையே உயர்நிலையில் கற்பிக்க வேண்டிய முறையில் கற்பித்தால் கட்டாயம் புதிய பொருள் துலங்கும்; மாணாக்கர்கள் சுவைப்பதிலும் குறைவு இராது. பாடத்தின் பொருள் நன்கு துலங்கிவிட்டால், மாணாக்கர்கள் தேர்வில் எந்த வினாக்கட்கும் விடையளிக்கும் திறனையும் பெற்று விடுவர்.

ஓர் எடுத்துக் காட்டு: 1959-ஆம் ஆண்டில் தமிழ்க் கவிதைகளைக் கற்பிப்பதைப்பற்றி ஆராய்வதற்குக் கூட்டப்பெற்ற கருத்தரங்கொன்றிற்கு என்னால் எழுதப்பெற்ற கவிதைப்பாடம் ஒன்றினை ஈண்டுத் தருகின்றேன்.

1. செஞ்சொல்முனி சஞ்சயனுக்கு யாமுரைத்த
 கருமமும்முன் சென்ற காலை
அஞ்சொல்முனி புரோகிதனுக்(கு) அவனிசைத்த
 கருமமும்நீ அறிதி யன்றே
நஞ்சுதனை மிகஅருந்தி நன்மருந்தும்
 மந்திரமும் விரைந்து நாடா(து)
எஞ்சினர்தங் களைப்போல இருக்குமதோ
 யார்மனத்தும் இருக்கும் சோதீ!

2 இக்கருத்தரங்கு (Seminar) காரைக்குடி அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி 'விரிவுப்பணித்துறை'யின் ஆதரவின்கீழ்க் கூட்டப்பெற்றது.

2. செய்வரால் இனமுகளுந் திருநாடு
பெறநினைவோ? சென்று மீளப்
பைவராய் அருங்கானில் பயின்றுதிரி
தரநினைவோ? பகைத்த போரில்
உய்வரார்? எனவிரைவின் உருத்தெழுத்து
பொரநினைவோ? உண்மை யாக
ஐவராம் அவனிபர்க்கும் நினைவேதென் (று)
அருள்புரிந்தான் அமரர் கோமான்.

3. "வயிரமெனும் கடுநெருப்பை மிகமூட்டி
வளர்க்கினுயர் வரைக்கா டென்னச்
செயிரமரில் வெகுளிபொரச் சேரஇரு
திறத்தேமுஞ் சென்று மாள்வேம்;
கயிரவமும் தாமரையும் கமழ்பழனக்
குருநாட்டில் கலந்து வாழ,
உயிரனையாய் சந்துபட உரைத்தருள்" என்
றான்அறத்தின் உருவம் போல்வான்.

4. "அரவுயர்த்தோன் உடன்மறுகு தாடிநீர்
வென்றஅந்நாள் அவன்றான் சொன்ன
விரதமொழி தவிராமல் வெங்கானம்
போய்மீண்டீர்; வெய்யோன் உங்கள்
குருநிலத்திற் பாதியினிக் கொடாதிருந்தால்
ஆங்கவனைக் கொன்று போரில்
இருநிலத்தை ஆளஇனித் துணிவதே
கடன்" என்றான் எம்பிரானே.

இந்த நான்கு பாடல்களும் வில்லி பாரதத்தில் கிருட்டிணன் தூதுச் சருக்கத்தில் உள்ளவை. இவை நான்காம் படிவ மாணாக்கர்கட்குப் பாடப் பகுதியாக வந்துள்ளன. விறுவிறுப்பான எளிய இனிய நடையில் கதைச்சுருக்கம் கூறிப் பாடல்களின் இடம் சுட்டி மாணாக்கர்களின் மனத்தை ஆயத்தம் செய்து கவிதைகளைப் படிக்க ஆர்வம் ஊட்டுதல் வேண்டும். இதனை இப்பாடத்தின் முகவுரையாகக் கொள்ளலாம்:

முகவுரை: "பாண்டவர்களின் பன்னிரண்டு யாண்டு காடுறை வாழ்க்கையும் ஓராண்டு கரந்துறை வாழ்க்கையும் முடிவுறுகின்றன. கண்ணன் உலூகன் என்ற ஓர் அந்தணனைத் தூது போக்கிப் பாதி நாட்டைக் கொடுப்பதில் துரியோதனின் கருத்தை அறிந்து வருமாறு ஏவுகின்றான். அங்ஙனமே, உலூ

கனும் அத்தினபுரம் வருகின்றான். வந்த காரியத்தைக் கூறுகின்றான். துரோணன், வீடுமன் முதலிய பெரியோர்கள் சொல்லியும் கேளாது கர்ணன் முதலிய சிற்றினத்தவர்களின் கருத்தை முக்கியமாகக் கொண்டு சிறிது இராச்சியம்கூடத் தர முடியாது என்று மறுத்து விடுகின்றான் துரியோதனன். 'இந்த இராச்சியம் எங்களுடையது; இதுகாறும் வசித்துவந்தகாட்டிற்குப் பாண்டவர்கள் திரும்பவும் போக வேண்டியதுதான்' என்று சொல்லிவிடுகின்றான். உலூகனும் அச்செய்தியைப் பாண்டவர்களிடம் தெரிவித்து விடுகின்றான். பிறகு திருதராட்டிரன் வேண்டுகோளின்படி சஞ்சயன் என்பான் பாண்டவர்களிடம் தூது வருகின்றான். அவர்களிடம் துறவற நெறி கூறி மீண்டும் கானிற் கேகும்படி சொல்லுகின்றான். அதைச் செவிமடுத்த தருமன் 'தாங்கள் சொல்லிய தருமம் துறவியருக்கே உரியது. மன்னர் அரச தருமத்தைவிட்டுத் துறவற நெறியை விரும்பார்; அவர்கள் பகைவர்களை விசும்பிலேற்றிய பிறகுதான் துறவறத்தில் நாட்டம் செலுத்துவர்' என்று கன்று கூறுகின்றான். வீமனும் சஞ்சயனை நோக்கி, 'நீ கூறும் தவம் எங்கட்கு உகந்ததன்று; துரியோதனாதியராம் நூறு பசுக்களைக் கொன்று இராசசூய யாகம் வேட்ட தருமனைப் போர்க்கள வேள்வியையும் புரிவிப்பதே எம்மனோர் கடன்' என்று வெஞ்சினம் மூளச் சாற்றுகின்றான். கண்ணனும், 'பாண்டவர்கள் நிலவுலகை ஆளுதலும் துரியோதனாதியர் வீரசுவர்க்கம் ஏறுதலும் செய்யக்கூடிய தவமே' என்று கூறுகின்றான். நிகழ்ந்தவற்றை அப்படியே சஞ்சயன் திருதராட்டிரனிடம் உரைக்கின்றான். பாண்டவர்கள் மீண்டும் கண்ணனைத் தூதுபோக்க எண்ணுகின்றனர். இந்நிலையில் தருமன் கண்ணபிரானை நோக்கி இவ்வாறு பேசுகின்றான்''.

இதன் பிறகு கவிதைகளை இசையூட்டி மாணாக்கர்கள் மன நிறைவு கொள்ளும்வரை நன்றாகப் படித்தாகி விட்டது என்று கொள்வோம். படிக்கும்பொழுதே பாடல்களில் வரும் சொற்றொடர்களையும் சொற்களையும் விளக்கிக்கொண்டே (அல்லது கரும்பலகையில் எழுதிக்கொண்டே) போதல் வேண்டும்.

**கவிதையின் சூழ்நிலையை உண்டாக்கல்:** இதற்குமேல் நாம் செய்ய வேண்டுவதென்ன? பாடல்களின் உயிர்நிலைக் கருத்திற்குப் போகவேண்டும். இனி, தாம் செய்யவேண்டியவற்றைக் கூறுமாறு கண்ணனைத் தருமன் வேண்டுவதும், அதற்குப் கண்ணன் கூறும் மறுமொழியுமே பாடல்களின் உயிர்நிலைக் பொருள். இந்தச் சூழ்நிலையைக் கவிஞன்தான் தன் சொல்லோ

வியத்தால் தீட்டும் முறையை மாணாக்கர்கள் நன்கு உணர வேண்டும். பாடல்கள் சித்திரிக்கும் சூழ்நிலையை மாணாக்கர் களிடமிருந்தே வருவித்தல் வேண்டும். அப்பொழுதான் ஆசிரியர் பாடல்களைப் பன்முறைப் படித்ததன் பயனும் மாணாக்கர்கள் அவற்றை எந்த அளவுக்குச் சுவைத்துப் பொருளுணர்ந்தனர் என்பதும் தெரியவரும். மாணாக்கர்களின் ஒத்துழைப்பைக் கொண்டே கவிஞன் சித்திரிக்கும் சூழ்நிலையைத் 'திரும்பப் படைக்க' வேண்டும். இவ்வாறு செய்வதில் மாணாக்கர்களைத் தேர்வாளர்கள் வினவி அவர்களது அறிவினைச் சோதிப்பது போல் செய்தலாகாது; அவர்களது மறுமொழியில் குறைகளிருப் பின் அவற்றைக் களைவதிலும் கருத்தைச் செலுத்தலாகாது. மாணாக்கர்கள் பாடல்களிலிருந்தே அவை காட்டும் சூழ்நிலை யைப் பெற்றனர் என்பதையும், இச்சூழ்நிலை பாடம் முழுவதி லும் ஊடுருவிச் செல்லவேண்டும் என்பதையும் நினைவிலிருத்த வேண்டும். இதற்குமேல் அதிகமாக இதனை வலியுறுத்தவும் முடியாது. ஏற்கெனவே குறிப்பிட்டது போல், கற்பித்தலின் நோக்கத்தை நாம் மறத்தலாகாது. ஆசிரியரின் குரல், கூறும் முறை, பிற கூறுகள் யாவும் சூழ்நிலைக்கேற்றவாறு அமைதல் வேண்டும். மாணாக்கர்களைக் கடிவதோ, உரத்துப் பேசி அச் சுறுத்துவதோ, திருத்துவதோ, பரிகசிப்பதோ கூடாது. இம்முறை களினால் பாடச் சூழ்நிலை கெடுமேயன்றி வேறு பயன் விளை யாது! அதற்கு மாறாக, பரிவுடனும் அன்புடன் அவர்களை ஒத் துழைக்கச் செய்தால், வில்லி படைத்த சூழ்நிலையைத் திரும்ப வும் வகுப்பறையில் ஓரளவு படைத்து விடலாம்.

முதற் பாடல்: பாடல்களில் குறிப்பிடப்பெறும் இரு முனிவர் கள் யாவர்? "சஞ்சயன், உலூகன்." கவிஞன் அவர்களை எவ் வெச் சொற்றொடர்களால் குறிப்பிடுகின்றான்? "சஞ்சயனை செஞ்சொல் முனி என்று; உலூகனை அஞ்சொல் முனி புரோகி தன் என்று." அவர்களை யார் யாரிடம் எதற்காக அனுப் பினர்? "முன் பேசியபடி நாட்டில் பாதியைத் தரும்படி கேட்டு வருமாறு பாண்டவர்கள் உலூகனைத் துரியோதனிடம் அனுப் பினர். பாண்டவர்களிடம் சென்று அவர்களுக்குத் துறவற நெறியைக் கூறி மீண்டும் கானிற்கு ஏகும்படிச் சொல்லி வரு மாறு திருதராட்டிரன் சஞ்சயனைப் பாண்டவர்களிடம் அனுப் பினான்." 'யாம் உரைத்த கருமமும்'—என்ற தொடரில் 'யாம்' என்பது யாரைக் குறிக்கின்றது? 'கருமம்' என்ன? "'யாம்' என்பது தருமனையும் கண்ணனையும் வீமனையும் குறிக்கின்றது. பகைவர்களை விண்ணாட்டிற்கனுப்பிய பிறகு துறவறத்தில் நாட்டம் செலுத்துவதுதான் மன்னர்களின் அறம் என்பது தரு

மன் உரைத்த 'கருமம்'; துரியோதனாதியராம் நூறு பசுக்களைக் கொன்று மறக்கள வேள்வி புரிவிப்பதே எம்மனோர் கடன் என்பது வீமன் உரைத்த 'கருமம்'; பாண்டவர்கள் நிலவுலகை ஆளுதலும் துரியோதனாதியர் வீர நாடு அடைதலுமே செய்யக் கூடிய தவம் என்பது கண்ணன் உரைத்த 'கருமம்'.'' 'அவன் இசைத்த கருமமும்'—என்பதில் 'அவன்' யார்? இசைத்த கருமம் யாது? '',அவன்' என்பது துரியோதனன். பாண்டவர்கள் திரும் பவும் கானேக வேண்டியதுதான் என்பது அவன் இசைத்த கருமம்.'' தருமன் தங்கள் நிலைமையை எந்த உவமையால் சுட்டுகின்றான்? ''நஞ்சுதனை மிக அருந்தி நன்மருந்தும் மந்திர மும் விரைந்து நாடாது இருக்கும் எஞ்சினர் தங்களைப் போல—என்ற உவமையால்.'' இந்த உவமையை நன்கு விரித்துக் கூறும்படியும் சிறுசிறு வினாக்ககளை விடுத்து விடைகளை வருவிக்கலாம். 'யார் மனத்தும் இருக்கும் சோதி'—என்ற சொற்றொடர் யாரைக் குறிக்கின்றது? ஏன்? ''கண்ணனைக் குறிக்கின்றது. கண்ணன் நல்லார் மனத்தும் தீயார் மனத்தும், ஞானியர் மனத்தும், பேதையர் மனத்தும், கற்றவர் மனத்தும், கல்லாதவர் மனத்தும் வேற்றுமையின்றி அந்தர்யாமியாய் எழுந்தருளியிருக்கும் ஒளி வடிவமானவன்.'' எல்லோருடைய கருத்தையும் அறிந்தவனாதலின், அவனுக்குத் தெரியாதது ஒன்றுமில்லை. ஆகவே, அவன்தான் தம் நிலையைச் சமாளிக்கத் துணைபுரிய வேண்டும் என்பது இச்சொற்றொடரில் அடங்கியுள்ளது என்ற 'சொல்நயத்தை' ஆசிரியர் நன்கு விளக்கல்வேண்டும். மேலும், செஞ்சொல் முனி, அஞ்சொல்முனி நஞ்சுதனை, எஞ்சினர் என்பவற்றிலுள்ள இரண்டாம் எழுத்து ஒரே மாதிரியாய் வருதல் எதுகைக்கு ஓர் எடுத்துக்காட்டு என்ப தையும் விளக்கலாம். ஒவ்வொரு பாடலிலுமுள்ள எதுகையை எடுத்துக்காட்டுமாறு மாணாக்கர்களை வினவலாம்.

**இரண்டாம் பாடல்:** குருநாட்டின் வளத்தைச் சுட்டும் சொற் றொடர் எது? ''செய்வரால் இனம் உகழும் திருநாடு''. கண்ணன் தருமன் கருத்தை எவ்வாறு வினவுகின்றான்? ''நாட்டைச் சமா தானத்தால் பெற நினைவா? மீண்டும் துன்பம் அநுபவிப்பவ ராய்க் கானேகுதல் நினைவா? அல்லது போர் செய்ய நினைவா? என்று வினவுகின்றான்.'' 'அமரர் கோமான்'—என்ற தொடர் யாரைக் குறிக்கின்றது? ''கண்ணபிரானை''. அமரர் என்பதன் பொருள் என்ன? ''மரணமில்லாதவர்.'' தேவர்கள் அமுத முண்டதனால் மரணம் இல்லாதவராயினர் என்பதை ஆசிரியர் விளக்கலாம். இப்பாடலில் பஞ்சபாண்டவரைக் குறிக்கும்

சொற்றொடர் யாது? "ஐவராம் அவனிபர்". 'செய்வரால்... பொர நினைவோ?' என்றவற்றின் சொல்நயத்தை ஆசிரியர் எடுத்துக்காட்டி மாணாக்கர்களைச் சுவைக்கச் செய்யலாம்.

**மூன்றாம் பாடல்: கண்ணன்** வினவியதற்குத் தருமன் உரைத்த மாற்றம் என்ன? "'போரில் இருவேமும் அழிவேம். நீ சென்று இருதிறத்தாரும் கலந்துவாழச் சமாதானம் செய்க' என்று வேண்டினான்." இருதிறத்தாருக்கும் நடக்கக்கூடிய போரைக் கவிஞன் எந்த உவமையால் விளக்குகின்றான்? "'நெருப்பினால் அழியும் மூங்கிற் காடு போல்' என்று விளக்குகின்றான்." அந்த உவமையைக் கவியின் தொடராலேயே கூறுக. "வயிர மெனும் கடுநெருப்பை மிக மூட்டி வளர்க்கின் உயர் வரைக் காடென்ன." இச்சொற்றொடரில் 'வயிரமெனும் கடு நெருப்பை மிக மூட்டி வளர்க்கின்' என்பதில் உருவக அணியும், 'வரைக்கா டென்ன' என்பதில் உவம அணியும் வந்துள்ளதை எடுத்துக்காட்டலாம். உருவக அணிக்கும் உவமை அணிக்கும் உள்ள வேற்றுமையை விளக்கிக் காட்டுவதற்கு இதனை ஒரு நல்ல வாய்ப்பாகப் பயன்படுத்தலாம். ஆசிரியர் 'கயிரவமும் தாமரையும் கமழ் பழனக் குருநாட்டிற் கலந்துவாழ' என்ற சொற்றொடரிலுள்ள 'குறிப்புப் பொருளை' நன்கு விளக்கவேண்டும். 'கயிரவம்' கௌரவர்களையும் 'தாமரை' பாண்டவர்களையும் குறிக்கின்றன என்பதை எடுத்துக்காட்டவேண்டும். பகலில் கதிரவனைக் கண்டு மலரும் தாமரையும், இரவில் மதியினைக் கண்டு மலரும் ஆம்பலும் உயிரற்ற பொருள்கள்; ஒன்றற்கொன்று மாறுபாடான தன்மைகளையுடையவை. இவை ஒற்றுமைப்பட்டுக் கழனிகளில் வாழ்கின்ற பொழுது பகுத்தறிவுள்ள மனிதருள்ளும் 'சிறந்த அரசரான யாம் கூடி வாழாதிருப்பது தகுதியோ?' என்று தருமன் குறிப்புப் பொருளால் குறிப்பிடுவதை மாணாக்கர்கள் உணர்ந்து இன்புறச் செய்ய வேண்டும், 'உயிரனையாய்!' என்ற சொற்றொடரிலுள்ள நயம் என்ன? "உடம்பினுள் உயிர் போல் உயிருக்குள் உயிராய்த் தங்குபவன். பரமான்மா சீவான்மாவினிடம் அந்தர்யாமியாய்த் தங்குதலால் இவ்வாறு கூறினான் கவிஞன்." இதனை மாணாக்கர்கள் அறிவது குதிரைக் கொம்பு; ஆசிரியர்தான் எடுத்துக்காட்டி விளக்கவேண்டும். தருமனைக் குறிக்கும் சொற்றொடர் யாது? "அறத்தின் உருவம் போல்வான்." தருமனைக் கவிஞன், நூல்கள் நுவலும் அறங்கள் எல்லாம் நிறைந்தவன் என்று குறிப்பிடுவதை விளக்க வேண்டும்.

**நான்காம் பாடல்:** 'அரவுயர்த்தோனுடன் மறுசூதாடி' – மறுசூதாடியதன் காரணம் என்ன? "முதலில் ஆடிய சூதாட்டங்களி

லெல்லாம் தாங்கள் அனைவரும் தோற்றதோடன்றி, துரி யோதனுக்கு அடிமைகளாகவும் ஆயினர். இந்த அடிமைத்தனம் நீங்குவதற்குப் பாண்டவர்கள் திரௌபதியின் சொற்படி மறு படியும் சூதாடி அடிமைத் தனத்தை ஒழித்தனர்." 'அவன்தான் சொன்ன விரத மொழி' - அவன் யாரைக் குறிக்கின்றது? கூறிய 'விரதமொழி' என்பது என்ன? "'அவன்' என்றது துரியோ தனனை. 'விரதம்' - என்பது இன்ன அறம் செய்வேனென்றும், இன்னபாவம் ஒழிவேன் என்றும் தம் ஆற்றலுக்கேற்ப வரைந்து கொள்வது. இங்குப் பன்னிரண்டு யாண்டுகள் காடுறை வாழ் வும் ஓராண்டு கரந்துறை வாழ்வும் செய்து தீர்வோம் என்று தருமன் உறுதிப்பாடு செய்து கொள்வதற்குத் துரியோதனன் சொல்லும் சொல் 'விரதமொழி' எனப்பட்டது." எம்பிரான் இரு நிலத்தை ஆள்வதற்குக் கூறும் யோசனை என்ன? "பேசிய படி துரியோதனன் நாட்டில் பாதி கொடாவிடில், அவனைப் போரில் கொன்று இரு பகுதிகளையும் நீங்களே ஆள்வது தகுதி என்று கண்ணன் யோசனை கூறினான்".

இவ்வாறு மாணாக்கர்களுடன் ஒத்துழைத்துக் காட்சிகளை வகுப்பறையில் நல்ல முறையில் சித்திரித்த பிறகு, பாடல்களை மீட்டும் ஒரு முறை இசையுடன் பாடி மாணாக்கர்களைச் சுவை யின் உச்ச நிலைக்குக் கொண்டுசெலுத்த வேண்டும். இஃது ஒரு முறையேயன்றி, இதுதான் முடிவான முறையென்று சொல்ல முடியாது. மாணாக்கரின் வயது, அவர்கள் வாழும் சூழ்நிலை (நகர்ப்புறம், நாட்டுப்புறம்), அறிவுநிலை ஆகியவற்றையொட்டி இம்முறையைச் சிறிது மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும்.

**இன்னோர் எடுத்துகாட்டு:** இன்னோர் எடுத்துக்காட் டினைத் தருவோம்.

யாதும் ஊரே யாவரும் கேளிர்;
தீதும் நன்றும் பிறர்தர வாரா;
நோதலும் தணிதலும் அவற்றோ ரன்ன
சாதலும் புதுவ தன்றே; வாழ்தல்
இனிதென மகிழ்தன்றும் இலமே; முனிவின்
இன்னா தென்றலும் இலமே; மின்னொடு
வானந் தண்டுளி தலைஇ ஆனாது
கல்பொரு திரங்கு மல்லற் பேர்யாற்று
நீர்வழிப் படூஉம் புணைபோல் ஆருயிர்
முறைவழிப் படூஉம் என்பது திறவோர்
காட்சியிற் றெளிந்தனம்; ஆகலின் மாட்சியிற்

பெரியோரை வியத்தலும் இலமே;
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே.
— புறம் - 192 (கணியன் பூங்குன்றனார்)

பண்டைத் தமிழ்ச் சான்றோர் ஒருவரின் பரந்த உள்ளத்தைக் காட்டும் பாட்டு இது. பாட்டின் கருத்துகளை உணர்தல் கடினம். கற்று உணர்ந்து அடங்கிய சான்றோர்களும் மேற்கொள்வதற்கு அரியனவாகவுள்ள சில கருத்துகள் இப்பாடலில் மிளிர்கின்றன. இதைத் தனிப்பட்ட பிரத்தியேகமான முறையினால்தான் கற்பித்தல் வேண்டும்.

இத்தகைய பாடல்கட்கு விளக்கமான முகவுரை ஒன்றிருத்தல் வேண்டும். அவ்வித விளக்கம் பெற்றால்தான் ஆசிரியர் பாடலை இசையுடன் படிக்கும்பொழுது [3] மாணாக்கர் அதன் கருத்தை ஓரளவு உளங்கொள்ள முடியும். இப்பாட்டிற்கு இதனை விளக்கந் தரும் முகவுரையாகக் கொள்ளலாம்.

**முகவுரை** "பாடலைப் பாடிய கணியன் பூங்குன்றனார் வாழ்விலும் தாழ்விலும் தளராத மனத்தினையுடையவர்; இன்பத்தையும் துன்பத்தையும் ஒரே மாதிரியாகக் காணும் மன அமைதியுடையவர். நன்மை செய்ததற்காக ஒருவரைப் பாராட்டவும் செய்யார்; தீமை செய்தார் என ஒருவரை இகழவும் மாட்டார். இவ்வாறே பெரியோர் என்று ஒருவரைப் போற்றிப் புகழவும் மாட்டார்; சிறியோரென்று ஒருவரைப் புறக்கணிக்கவும் மாட்டார். ஊழ்வலியில் பெரு நம்பிக்கை கொண்டவர். மண்ணிடைப் பிறந்த உயிர்கள் யாவும் தாம் தாம் செய்த வினைக்கேற்றவாறு இன்பமும் துன்பமும், உயர்வும் தாழ்வும், செல்வமும் வறுமையும் எய்தும் என்பதை நூல்களாலும் அநுபவத்தாலும் நுணுகியறிந்தவர். இத்தகைய உயர்ந்ததொரு பண்பினால் முடியுடை வேந்தர்களையும் புகழ்ந்து பாடவில்லை; குறுநில மன்னர்களையும் வியந்து போற்றவில்லை. வள்ளல்களையும் மகிழ்ந்து பாராட்டவில்லை. இதனைக் கண்ட அக்காலச் சான்றோர்களுள் சிலர் அவரிடம் சென்று ஒருவரையும் அவர் பாடாததற்குக் காரணம் யாதாக இருக்குமோ என்று வினவினர். அதற்கு அவர் கூறிய விடையே மேற்கூறிய பாட்டாக வடிவெடுத்தது."

**கவிதையின் சூழ்நிலையை உண்டாக்குதல்:** ஆசிரியர் பாடலை முதலில் இன்னோசையுடன் சொற்களைப் பிரிக்காமலேயே சீர்

3. ஆரபி, தோடி - ஆகிய இரண்டினுள்ளும் ஏதாவதொரு இராகம் பொருந்தும்.

பிரித்துப் பலமுறைப் படிக்க வேண்டும். நல்ல முறையில் கவிதை பயிற்றலைக் கவனித்துப் பயிற்சி பெற்ற மாணாக்கர் கள் தாம் இத்தகைய பாடல்களை அறிய முடியும்; உணர்ந்து சுவைக்க முடியும். இவ்வாறு படித்துக் காட்டுதல் போதுமென்று ஆசிரியருக்குத் தோன்றும்வரை படித்துக் காட்டலாம். மாணாக் கர்களின் முகமலர்ச்சியே இதற்கு அளவு கருவி. படிக்கும் பொழுதே சில அருஞ்சொற்களுக்குப் பொருளும் கூறலாம். பாடலைப் படித்து முடிந்த பிறகு பாடலில் கூறப்பெற்றுள்ள கருத்து ஒவ்வொன்றையும் தனித்தனியாகக் கூறும்படித் தூண்டலாம்—வினாக்களின் மூலமாக. அடியிற் காணும் முறை யில் இதனை மேற்கொள்ளலாம்.

கவிஞர் மிகவும் பரந்த நோக்குடையவர் என்பது எதனால் அறியக் கிடக்கின்றது? "'யாதும் ஊரே யாவரும் கேளிர்' என்ற கொள்கையை யுடையவராதலால்." எங்கும் தமிழ் முழக்கம் கேட்கப்பெறும் இக்காலத்தில் கட்டாயம் இதைப் பலர் சொல்லக் கூடும். பலர் மேடைப் பேச்சுகளில் இவ்வரியை அடிக்கடிக் கையாளுவதை மாணாக்கர்கள் கவனித்திருத்தல் கூடும். ஒருவருக்கு நன்மையும் தீமையும் எப்படி வருகின்றதாகக் கவிஞர் கூறுகின்றார்? "நன்மையும் தீமையும் பிறர் தருவதால் வருவ தில்லை; முன் நியதிப்படி வருகின்றன." நோய் எப்படி வரு கின்றது? எப்படித் தீர்கின்றது? "அதுவும் அப்படித்தான்; தானாக வருகின்றது; தானாகத் தணிகின்றது." இறப்பினைக் குறித்துக் கவிஞர் என்ன தெரிவிக்கின்றார்? "சாவது ஒரு புதிய காரியமல்ல!" வறுமையையும்செல்வ நிலையையும் ஒன்றாகப் பாவிக்கின்றார் கவிஞர் என்பதைப் பாட்டின் எந்த அடிகள் காட்டுகின்றன?

"'இனிதென மகிழ்ந்தன்று மிலமே; முனிவின்
இன்னா தென்றலும் இலமே'

என்ற அடிகளால்." உயிர்கள் எவ்வாறு இன்ப துன்பங்களை அநுபவிக்கின்றன என்பதைக் கவிஞர் எப்படிக் கூறுகின்றார்? "நீரின் வழியே இயக்கப்பெறும் மிதவைபோல உயிர்கள் அவற்றை அநுபவிக்கும்." இவ்விடையை மாணாக்கர் இறுப்பது சற்றுக் கடினம்; நடை கடினம்; கூறும் முறையும் கடினம்; மொழியும் கடினம். இவற்றை மாணாக்கர்கள் தாமாகப் புரிந்து கொள்வது இயலாததொன்று. எனவே, இதனை ஆசிரியரே நன்கு விளக்கிச் சொல்லும்படியும் நேரிடலாம். மழை எப்படிப் பெய் கின்றது? எப்பொழுது பெய்கின்றது? என்ற விவரங்களை யாரும்

முன்னரே அறிந்து சொல்ல இயலாது. இன்றைய அறிவியலும் அந்த அளவுக்கு வளரவில்லை. எப்படியோ மழைபெய்து ஆற்றில் வெள்ளம் வருகின்றது. அதுபோலவே, உலகில் நன்மைகளும் உள்ளன; தீமைகளும் உள்ளன. ஏன் உள்ளன? என்பதை நம்மால் அறுதியிட்டுச் சொல்ல முடியாது. ஏதோ உள்ளன; அவ்வளவுதான். உயிர்கள் அவற்றைத் துய்ப்பதுதான் ஊழின் செயல் —"முறை வழிப்படுதல்," உயிர்கள் யாவும் ஆற்று நீரில் இயக்கப் பெறும் மிதவைகள் போலத்தான். எவ்வளவு கற்பனை? ஆன்று அவிந்து அடங்கிய சான்றோரல்லவா? அவர் ஊகித்து எதனையும் சொல்ல முடியும்; கண்ணால் காணும்காட்சிகளால் ஆராய்ந்து சொல்ல முடியும். "திறவோர் காட்சியில் தெளிந்தனம்" என்றல்லவோ கூறுகின்றார்? இவ்விடத்தில் இவ்வாறு ஆசிரியர் விளக்கிக்கூறவும் நேரிடும். பாட்டு கடினமானது; பண்டைய நடையினது. 'யாவரும் கேளிர்' என்பது கவிஞரின் கொள்கை என்பது எவ்வாறு அறியப் பெறுகின்றது?

"'பெரியோரை வியத்தலும் இலமே
சிறியோரை இகழ்தல் அதனினும் இலமே'

என்ற அடிகளால் இது தெளிவாகின்றது." இவ்வாறு இப்பாடலை விளக்கியபிறகு மாணாக்கர்களைக் கொண்டே கருத்துகளைத் தொகுத்துக் கூறச் செய்யலாம். இறுதியாக ஒரு முறை ஆசிரியர் பாடலைப் பெருமிதத்துடன் இசையூட்டிப் படித்தால் மாணாக்கர்கள் கவிஞரின் இதயத்தையே தொட்டுப் பார்த்து விடுவர். இத்தகைய உயர்ந்த பாடல்கள் மாணாக்கர்களின் வயதுநிலை, அறிவுநிலை, அநுபவநிலை ஆகியவற்றிற்கேற்றவாறு விளக்கம் அடையும். அதனால்தான் இத்தகைய பாடல்களை ஐந்தாம் படிவப் பாட நூல்களிலும் காண்கின்றோம்; எம்.ஏ. வகுப்புப் பாடத்திட்டத்திலும் பார்க்கின்றோம்.[4]

**நினைவிருத்த வேண்டியவை :** இன்னும் பல எடுத்துக் காட்டுகளைத் தரலாம். இவ்விரண்டே நமக்குப் போதுமானவை. இவற்றிலிருந்து நாம் நினைவில் வைத்துக்கொள்ள வேண்டியவற்றைத் தொகுத்துக் கூறுவோம்.

(1) பாடல்களைப்பற்றி மாணாக்கர்கள் மனத்தில் ஒரு விதக் கருத்து வளர்வதற்கு வாய்ப்புகள் தருதல் வேண்டும். பாடத்தின் தொடக்கத்தில் நாமே பாடலைப் படிக்கின்றோம்.

4 சுப்புரெட்டியார், ந: தமிழ் பயிற்றும் முறை, பக்கம் 354-358

முதல் தடவை படிக்கும்பொழுது ஏதோ ஒரு கருத்து அவர்கள் மனத்தில் தோன்றத் தொடங்கும். இரண்டாவது முறை பாடலைப் படிக்கும்பொழுது அக்கருத்து ஒரு திட்டமான உருவத்தைப் பெறுகின்றது. நாம் மாணாக்கர்கட்கு அவர்கள் கற்பனை விழித்த நிலையில் பாடல்களைக் கவனத்துடன் கேட்குமாறு பயிற்சி கொடுத்திருந்தால், இஃது எளிதாக அமைதல் கூடும். நன்கு பயிற்சி பெற்றவர்கள் கவிதையை முதல் தடவை படிக்கும் பொழுதே மிக வியத்தகு முறையில் இக்கருத்தினைப் பெற்று விடுகின்றனர்.

(2) கவிதையைக் கற்பித்தல் என்றால் அதனைக் கண்ணழித்துச் 'சித்திரவதை' செய்வது அன்று; அழகான பொருளைச் சிதைத்துத் துய்ப்பது போலவும் அன்று. அங்ஙனம் சிதைத்து விவரங்களைக் காண்பதால் அழகையும் பொருளையும் இழக்க வேண்டியே நேரிடும். ஆனால், அந்த விவரங்களின்மூலம் கவிதையின் முழுமையிலேயே அந்த அழகினைக் காண முயன்றால், அந்த அழகு நம் அறிவுக்குத் தென்படும்.

(3) நாம் கவிதையைப் படிப்பதனால் மாணாக்கர்கள் பெறும் மகிழ்ச்சியின் உச்சநிலையை, கவிதையை மீண்டும் நாம் கற்பிப்பதனால்—விளக்குவதனால்—அதற்கு எதிரான நிலையை உண்டாக்கி விடுதல் ஆகாது. பாடத்தின் இறுதியில் கவிதையை நல்ல முறையில் படிப்பதனால், கவிதையின் முருகுணர்ச்சியை மாணாக்கர்கள் நன்கு அநுபவிப்பர்.

(4) இதற்கு முன்னர், மாணாக்கர்கள் கீழ்வகுப்புகளில் பாடத்தில் வந்த இதே கவிதையைப் படித்திருந்தால், அதை மீட்டும் ஒரு முறை ஆசிரியர் கற்பிக்கக் கூடாது என்பதில்லை. முன்னரே அறிந்தவற்றின் அடிப்படையில் மேலும் விளக்கந் தந்தால், இப்பொழுது வளர்ந்த நிலைக்கேற்ப அதனை நன்கு அநுபவிப்பர். வாழ்க்கையில் அதிகமாகப் பெற்றுள்ள அநுபவமும்,ஆழ்ந்த உள்ளுணர்வும் கவிதையின் முருகுணர்ச்சியை நன்கு பெறுவதற்குத் துணை செய்யும்.

மாணாக்கர்கள் தாமாகவே கவிதைகளை வாய்விட்டுப் படிப்பது எப்பொழுது? என்ற வினா எழலாம். அதற்கு இதுதான் தக்கநிலை. இப்பொழுது கவிதை அவர்களுக்கு நன்கு தெரியும்; கிட்டத்தட்ட மனப்பாடம் செய்த நிலையில் கவிதையை அவர்கள் நன்கு அறிவர். அவர்கள் இப்பொழுது தம்முடைய குரலால் அக் கவிதையைப் படிக்கும் நிலையில் இருப்பதாகக் கருதலாம். படிப்

பதற்கு விரும்புகின்றவர்கள் இப்பொழுது முயலலாம்; இவ்வாறு முன் வருபவர்களை நுட்பமாகக் கையாள வேண்டும். சாதாரண மாகச் சிறுவர்கள் படிப்பதற்கு உடனே ஆயத்தமாக இருப்பர். சற்று வளர்ந்தவர்கள் தன்னுணர்ச்சியின் காரணமாகத் தயங் குவர். அத்தகையவர்களைப் படிக்குமாறு கட்டாயப்படுத்துதல் சித்திரவதைசெய்வது போலாகும். கவிதைப் பாடத்தின்பொழுது மாணாக்கர் அடையும் மகிழ்ச்சிக்கு எவ்விதத்திலும் ஊறு விளை வித்தல் கூடாது. ஒவ்வொருவரும் படிக்கக்கூடிய நாள் தானாக வரும்; அப்பொழுது அவர்கள் தாமாகவே படிக்க முன்வருவர். அப்பொழுதுதான் வாய்விட்டுப் படித்தலில் அவர்கட்குப் பயிற்சி தருதல் வேண்டும். கவிதையைப் படித்து அநுபவிப்பதற்கு இப் பயிற்சி மிகவும் இன்றியமையாதது. ஆகவே, அதனை மேற் கொள்ளத்தான்வேண்டும். ஆனால் ஒரு சமயத்தில் ஒன்றினைத் தான் செய்யவேண்டும்; அதனை உறுதியாகவும் மனநிறைவுடனும் செய்துவிடவேண்டும். நாம் கவிதையைக் கற்பிக்கும் பணியில் இறங்கினால், அத்துடன் அமைதி பெறவேண்டும்; வாய்விட்டுப் படித்தலை வேறொரு சமயத்தில் மேற்கொள்ளலாம்.

**இன்றைய நிலை:** ஆனால், இன்று தமிழ்நாட்டின் பள்ளி களில் நடப்பதை எண்ணினால் உள்ளம் வேகின்றது. கல்வித் துறையினர் 'முடிவுத் தேர்வு' என்ற ஒன்றைப்படைத்துக்கொண்டு அதன் கோரத் தாண்டவத்திற்கு இரையாகின்றனர். மாணாக் கர்களின் உள்ளத்தைச் சிறந்த முறையில் உயர்த்தவல்ல கலை முறையே அவர்களின் உரத்தை—திராணியை—உறிஞ்சவல்ல கொலை முறையாக மாறியிருப்பதை அவர்கள் சிறிதும் எண்ணி பார்க்கவே இல்லை. பதவுரை, பொழிப்புரை, கருத்துரை, அணி, இலக்கணக் குறிப்பு என்ற சில வார்ப்பட முறைகளுக்குள்—உண்மையாகச் சொல்லப் போனால் ஒருவகைச் சடங்கு முறைக் குள்—கவிதையை அடக்கிவிடும் முயற்சியே பயிற்றும் முறையாக இருந்து வருகின்றது. இந்த முறை ஒழியும் நாள் எந்நாளோ என்று "எந்நாட் கண்ணி" பாடி ஏங்க வேண்டியதைத் தவிர நாம் என்ன செய்யமுடியும்?

இன்றைய மொழி வளர்ச்சிக்கு வேண்டாத பல இலக்கணப் பகுதிகளைத் தமிழ்ச் சிறுவர்கள் படிக்க வேண்டும் என்று நினைக் கும் மனப்பான்மை மிக கொடியது. காலங்கடந்ததும் உயர்ந்த உணர்ச்சிகளுக்கு வடிவந் தருவதுமான இலக்கியத்தைக் கற்ப தற்கு அவற்றிற்குச் சிறிதும் வேண்டாத — பொருள் விளக்கத் திற்குத் துணை செய்யாத—இலக்கணப் பகுதிகளைக் கவிதைப் பாடத்தில் எடுத்துக்காட்டிச் சிறுவர்களின் மூளையைத் தாக்கி

அவர்களை வேதனைக்குள்ளாக்கும் கொடுமையினும் வேறொரு கொடிய செயல் இல்லை. தண்டியலங்காரத்திலும், மாறனலங் காரத்திலும் வேண்டாத பகுதிகளாக காட்சியளிக்கும் பகுதிகளை உணர்ச்சியுள்ள கவிதையைக் கற்பிக்கும்பொழுது எடுத்துக் காட்டுவதால் யாது பயன்? ''இஃது என்ன அணி? அஃது என்ன அணி?'' என்று அவற்றின் பெயர் வகைகளைக் காண்பதில் செலுத்தப்பெறும் முயற்சி வீணானது: வெறுக்கத் தக்கது. தவிர, ஒரு பாட்டு இன்ன அணியுடையது என்று கூறிவிடுதல் பாடலைக் கற்றுணரும் திறமையும் அன்று; இது வெறும் பெயரிடும் சடங்கேயன்றி வேறொன்றும் இல்லை. பாடிய கவிஞன் உணர்ந்த அநுபவத்தைக் கற்பனைத்திறன் கொண்டு மாணாக்கர்கள் உணர்வதே கவிதையைக் கற்பிப்போரின் முதன் மையான நோக்கமாக இருத்தல் வேண்டும். பாநலம் வியத்தல் திறனே மாணாக்கரிடம் நிலையாக அமையவேண்டியது என் பதை ஆசிரியர்கள் என்றும் நினைவில் இருத்துதல் வேண்டும். இம்முறைதான் மாணாக்கர்கட்கு 'உவட்டாமல்' இனிக்கும். கவிதையை வாய்விட்டுப் படித்தால்தான் கவிதையநுபவம் ஏற் படும். வாய்விட்டுக் கவிதைகளைப் படிப்பதில் மாணாக்கர் கட்குத் துணை செய்வது எங்ஙனம் என்பதை அடுத்த இயலில் காண்போம்.

# கவிதையை வாய்விட்டுப் படித்தல்

சென்ற இயலில் சிறுவர்கள் பாடல்களை ஏன் வாய்விட்டுப் படிக்கவேண்டும்? என்பதுபற்றிக் குறிப்பிட்டோம். நாம் ஒரு பாட்டை ஒருவர் பாடக் கேட்கும்பொழுது, அதை நாம் திரும்பவும் மெல்ல ஒலித்து மகிழ்ச்சி அடைவதில்லையா?

> ''வள்ளிக் கணவன் பேரை
> வழிப்போக்கர் சொன்னாலும்—என்
> உள்ளங் குழையுதடி—கிளியே
> ஊனும் உருகு தடி''

என்ற டி. கே. பட்டம்மாள் பாடிய பாட்டைக் 'கிராமஃபோன் தட்டு' மூலம் கேட்கும்பொழுது மேற்குறிப்பிட்ட அநுபவத்தை அடைகின்றோம். அங்ஙனமே, அனைத்திந்திய வானொலியில் 'குரல்வகை'யில் நமக்குப் பிடித்தமான சிலவற்றைக் கேட்கும் பொழுது இவ்வநுபவம் அடிக்கடி ஏற்படுவதை நாம் அறிவோம். நாம் தனியாக இருக்கும்பொழுது அப்பாடல்களைச் சிலசமயம் வாய்விட்டுப் பாடியும் மகிழ்கின்றோம். அங்ஙனமே,

> கருவினுரு வாகி வந்து வயதளவி லேவ ளர்ந்து
> கலைகள்பல வேதெ ரிந்து—மதனாலே
> கரியகுழன் மாதர் தங்கள் அடிசுவடு மார்பு தைந்து
> கவலைபெரி தாகி நொந்து—மிகவாடி [1]

என்ற திருப்புகழை யாரோ ஒருவர் எங்கோ தொலைவில் பாடிக் கொண்டு சென்றாலும், நாம் செய்துக்கொண்டிருக்கும் வேலையை விட்டுவிட்டு அப்பாட்டை இன்பமாகக் கேட்டு மகிழ்கின்றோம். அப்பாட்டின் பொருள் விளங்காதவர்களும் அதன் ஒலிநயத்தில் ஈடுபட்டுக் களிப்புறுகின்றனர். அப்பாடலைப் பாடாமல் வேறு சொற்களையும் வேறு கருத்துகளையும் அதே மெட்டில்' (ஒலிவகையில்) அமைத்துப் பாடினால் அதே ஒலியின் பம் உண்டாகின்றது. அதனால்தான் வீணையொலியும் புல்லாங் குழல் ஓசையும், மோர்சிங், நாதசுர ஒலிகளும் நம் காதுக்கு இனிக்

1. அருணகிரிநாதர் - திருப்புகழ் (திருவினான்குடி)

கின்றன. செவி நம் உடலில் மிக நுட்பமாக வளர்ந்தமைந்த ஓர் அற்புத உறுப்பு. நரம்புகளின் மென்மைக்கு ஓர் எல்லையாக அமைந்தது. உடலின் ஏனைய நரம்புகளையெல்லாம் தன் விருப்பத்திற்கிணங்க ஆட்டிவைக்கக் கூடிய ஆற்றலும் பெற்றது. இதனால்தான் 'கிளிக் கண்ணி', 'நொண்டிச் சிந்து', 'காவடிச் சிந்து' என்ற பெயர்களைக் கேட்டவுடன் பழைய நண்பர்களின் குரல்கேட்பதுபோல், பழைய ஒலியமைப்பு மெல்லச் செவியில் கேட்கத் தொடங்குகின்றது. இன்றைய பேசும் படங்களின் பல பாடல்கள் பெருவாழ்பெற்று வருவதற்கு இந்த ஒலிக் கவர்ச்சியே காரணமாகும்.

வாய்விட்டு படிப்பதால் பெறும் அநுபவம்: மேற்குறிப்பிட்ட பாடல்களை நாம் மனத்தால் நினைந்துப் பார்த்து மகிழ்வதை விட அவற்றை நாமே வாய்விட்டுப் பாடி மகிழ்வதுசிறந்தது. அதற்கு இரண்டு காரணங்கள் உள. நாம் பாடும்பொழுது நாமே அவற்றைப் கேட்கின்றோம். நம்முடைய குரல் இனிமையானதாக அமையாவிடினும், அது நமக்குப் புலனாவதில்லை. அப்பாடல்களைக் கேட்க நேரிடும் பிறர் மகிழ்வதைவிட, நாம் உண்மையிலேயே அவற்றில் ஈடுபட்டு அநுபவிக்கின்றோம். இஃதுடன் அப்பாட்டில் நம்மிடையே எழுப்பப்பெறும் உணர்ச்சிகளும் எண்ணங்களும் வடிவம் பெறுவதற்கும் வாய்ப்பு கிடைக்கின்றது. பாடுவதால் நாம் அவற்றிற்கு வடிவம் தருகின்றோம். நாம் பாடலை வாழ வைக்கின்றோம்; அது நமக்கு உண்மையான மன நிறைவையும் மகிழ்ச்சியையும் அளிக்கின்றது. கவிதைப் பாடத்தில் நம்முடைய மாணாக்கர்கட்கும் இந்த அநுபவத்தைத்தான் பெறச் செய்யவேண்டும். பாட்டைப் பாடும் தேவையைப்போல் கவிதையை வாய்விட்டுப் படிக்கும் தேவை அவ்வாறு கட்டாயம் இல்லை என்பதை நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும். நன்றாக உணர்ச்சியுடன் படிக்கக் கேட்ட ஒரு கவிதையை வாய்க்குட் படிப்பதனாலேயே நன்றாக அநுபவிக்கலாம். ஆனால் நன்றாக பாடக் கேட்ட ஓர் இசைப்பாடலை. அவற்றின் சுர அடையாளங்களை வாய்க்குள்ளேயே படிப்பதால், நன்றாக அநுபவிக்க முடியாது. கவிதைக்குரிய இஃது ஒரு தனிச் சிறப்பென்றாலும் அது கவிதைக்கு ஓர் இழப்பாகவும் அமைகின்றது. இதனால் பெரும்பாலோர் கவிதையிலுள்ள ஒலிநயத்தின் அழகை அநுபவிப்பதில்லை; கவிதையில் இசையும் உள்ளது என்பதை அவர்கள் மறக்கின்றனர். கவிதையின் பல நற்கூறுகளை அவர்கள் அநுபவிக்க முடியாமற் போகின்றது. ஒரு கவிதையை வாய்க்குள்ளேயே படித்து அதனை நன்கு உணர்ந்து விட்டதாக நினைக்

கும் சிலர், அக்கவிதை நன்முறையில் உரக்கப் படிக்கப்பெறும் பொழுது, அவர்கள் தாம் காணத் தவறிய பல கூறுகளைக் கண்டு, கேட்டு அநுபவிப்பதையும், கவிதையைப் படிக்காத பலர் பிறர் அதனைப் படிக்கக்கேட்பதால் பெருமகிழ்ச்சி கொள்தையும் நாம் அறியாமல் இல்லை. 'கவிதை அநுபவமாகும் முறையை' விளக்குங்கால் 'இரண்டாம் நிலை' என்ற தலைப்பில் கூறிய கருத்துகளை ஈண்டு நினைவு கூர்க.[2]

நம்முடைய மாணாக்கர்கள் கவிதையை வாய்விட்டுப் படிக்க வேண்டுமானால் அதை நன்கு படிப்பதில் அவர்கட்கு எல்லா விதத் துணைகளையும் நாம் நல்கவேண்டும். வாயினால் 'உபதேசம்' செய்வதை விட, ஆசிரியர் செய்து காட்டலே சிறந்தது; தாம் வாய்விட்டு நன்முறையில் படித்துக் காட்டி மாணாக்கர்கட்கு மகிழ்ச்சியூட்ட வேண்டும்.

சண்டிக் குதிரைமேல் நொண்டித்துரை—செய்யும்
சவ்வாரி போலுமிவ் வாழ்வானில்,
உண்ட துடுத்ததை யன்றிநாம்—வேறெதும்
உண்மையாய்க் கண்டதும் உண்டோ? அடா!

கோர்ட்டிலே ஜட்ஜி இருப்பதுவும்—வக்கீல்,
கொட்டி முழக்கின் நின் றாடுவதும்
கூட்டிலே கள்ளன் நடுங்குவதும்—இந்தக்
கும்பி செயும்செயல் அல்லவோடா?

உண்டு வயிறு நிறைந்துவிட்டால்—உடன்
உள்ளக் கவலை ஒழிந்ததடா?
மண்டை யுடைத்து வழக்குகள்பேசி—நாம்
வாணாளை வீணாளாய்ப் போக்கோம், அடா!

மஞ்சள் சிவப்புத் துணியணிவோம்—பஞ்ச
வர்ணக் கிளிகளைப் போல்நடப்போம்;
வஞ்சனை சூதுகள் செய்யமாட்டோம்—கோர்ட்டு
வாசலை எட்டி மிதிக்கமாட்டோம்.

ஆதிசிவனுமோர் ஆண்டி, அடா! —அவர்க்கு
அன்பான பிள்ளைகள் நாமே, அடா!
ஓதுமெய்ஞ் ஞானியர் யாவருமே—நமக்கு
உற்ற உறவினர் ஆவார், அடா!

2. கவிதையநுபவம் (முதற்பதிப்பு) -பக் (1114-115)

லட்சமும் கோடியும் வேண்டாம், அடா!—அதை
ரட்சிக்க நம்மாலே ஆகு மோடா!
அட்சய பாத்திரம் உண்டே, அடா—நமக்கு
ஆரே நிகர்இவ் வுலகில்? அடா!

என்ற கவிமணியின் பாடல்களை[3] வாய்க்குள் படிப்பதனால் பாட்டின் உணர்ச்சிகளைப் பெறுதல் முடியாது. கற்பிக்கும் ஆசிரியர் அவற்றைக் 'கும்மிப் பாட்டு' மெட்டில் (ஒலி வகையில்) அமைத்துப் பாடினால்தான் 'பிச்சைக்காரர் கும்மாளத்தின்' உணர்ச்சிகளைப் பெறுதல் முடியும்; அப்பாடல்களின் கருத்திலும் ஒன்றித் திளைக்க முடியும்; கவிஞன் குரலில் கவிதையைப் படித்தால்தான் கவிதைகளின் முழு உணர்ச்சியையும் பெறுதல் கூடும்.

ஆசிரியரே வழிகாட்டி: நல்ல முறையில் படித்தல் நல்ல முறையில் பேசுவதைப் பொறுத்தது. சரியாகப் பேசும் திறன் வாய்க்கப் பெறாதவர்கள் சரியாகப் படித்தல் இயலாது. எனவே, கீழ் வகுப்புகளிலிருந்தே சரியான ஒலிப்பு, சரியான உச்சரிப்பு போன்ற கூறுகளில் கவனம்செலுத்திக் குழந்தைகளைப் பயிற்றல் வேண்டும். உரையாடலில் தக்க இடங்களில் நிறுத்தியும், சில சொற்றொடர்களுக்கு அழுத்தம் கொடுத்தும் பேசினால்தான் பேசுவோர் தாம் கூறவேண்டியதைத் தெளிவாக உணர்த்த முடியும் என்பதை நாம் அறிவோம். அங்ஙனமே, சொற்பொழிவுகளிலும் இக்கூறுகளில் தக்க கவனம் செலுத்தப்பெறல் வேண்டும். அப்பொழுதுதான் கேட்போர் உள்ளத்தின் பேசுவோரின் கருத்துகள் தெளிவாகப் பதியும். இக்கூறுகள் யாவற்றிலும் நல்ல பயிற்சி ஏற்பட்டுக் கிட்டத்தட்ட அவை பழக்கமாகவே படிந்து விட்ட பிறகுதான் மாணாக்கர்கள் கவிதையைப் படிப்பதற்கு ஆயத்தமாக உள்ளனர் என்று கருதலாம். கவிதையை வாய்விட்டுப் படிக்கும்பொழுது நாம் கவிதையைத் தவிர வேறு கூறுகளில் கவனம் செலுத்துவதற்கில்லை; அதற்கு நேரமும் இல்லை. கவிதையைப் படிக்கும்பொழுது உச்சரிப்பிலும் பிற வற்றிலும் கவனம் செலுத்த நேர்ந்தால், நாம் சொற்களைத் தான் நன்கு ஒலிக்கலாம்; உச்சரிக்கலாம். கவிதையைப் படித்தல் முடியாது. மாணாக்கர் நிலையில் இதை வைத்து பார்ப்போம். ஆசிரியர்களின் குரலை மாணாக்கர்கள் நாடோறும் கேட்கின்றனர். கவிதைப் பாடத்தின் போதன்றிப் பிறபாடங்களின் பொழுதும் ஆசிரியர்களின் உச்சரிப்பு மாணாக்கர்கட்கு ஒரு

3. கவிமணி: மலரும் மாலையும்-பிச்சைக்காரர் கும்மாளம்-(6-11)

சிறந்த எடுத்துக்காட்டாக அமைகின்றது. ல - ழ - ளகர பேதத்திலும் ர - றகர பேதத்திலும் தக்க கவனம் செலுத்திப் பேச வேண்டும்; படிக்க வேண்டும்.

ஆசிரியர் தம்முடைய தொகுப்பிலிருந்து ஒரு கவிதையைப் படிக்க நேர்ந்தால் அவர் படிப்பதில் இயல்பாகவே சொல் திருத்தமும் ஒலிநயத்தில் திருத்தமும் தாமாகவே அமைந்துவிடும்; அவை இயல்பாகவே படிந்திருக்கும். பாடநூலிலுள்ள ஒரு கவிதையைப் படிக்க நேரிட்டால், அவர் முன்னரே படித்துப் பார்த்து ஆயத்தமாக வந்தால் அவை இயல்பாக அமைந்துவிடும். வகுப்பிற்கு வருவதற்குமுன் ஆசிரியர் கவிதையின் கருத்தினை, அதில் வரும் சில கடின சொற்களின் பொருள்களை, அறிந்துகொண்டு வருதல் மட்டிலும் பாட ஆயத்தம் என்று கருதுவது தவறு. உச்சரிப்பு, ஒலிநயம், அழுத்தம் கொடுக்கவேண்டிய இடம், கவிதைக்கேற்ற இசையில் படித்தல்—போன்ற பல கூறுகளிலும் கவனம் செலுத்தி, ஒத்திகை நடத்திக் கொண்டு வருதலும் பாடஆயத்தத்தில் அடங்கும் என்பதை இளம் ஆசிரியர்கள் உணரவேண்டும். மேம்போக்காகக் கருதினால் இவை பாடத்தின் புறக் கூறுகளாகத் தென்படலாம்; ஆழ்ந்து சிந்தித்தால் இவைதான் பாடவெற்றிக்குப்பெருந்துணை செய்பவை.

இதந்தரு மனையின் நீங்கி
    இடர்மிகு சிறைப்பட் டாலும்
பதந்திரு இரண்டும் மாறிப்
    பழிமிகுந் திழிவுற் றாலும்
விதந்தரு கோடி இன்னல்
    விளைந்தெனை அழித்திட் டாலும்
சுதந்திர தேவி! நின்னைத்
    தொழுதிடல் மறக்கி லேனே.[4]

என்ற பாட்டை வகுப்பில் படிக்க வேண்டிய வாய்ப்பு வருகின்றதாகக் கருதுவோம். இந்தப் பாடலில் திரும்பத் திரும்ப வரும் ஒலியமைப்பு, அதனால் நமக்கு ஏற்படும் மகிழ்ச்சி, பாட்டில் வரும் உணர்ச்சி சிதறாமல் காக்கப்பெறும் முறை ஆகியவற்றை ஆசிரியர் முன்னதாகவே நன்கு உணர்ந்திருந்தால்தான் அதனை வகுப்பில் நன்கு படிக்கமுடியும். எளிய பாடல்தானே என்று 'கைவீசிக் கொண்டு' வகுப்பில் நுழைந்தால் படித்தலில் வெற்றி காண முடியாது.

4. பாரதியார் கவிதைகள்-சுதந்திர தேவியின் துதி-1

**மாணாக்கர்கட்குப் பயிற்சி:** ஆசிரியருக்கே இவ்வளவு ஆயத்தம் வேண்டும்பொழுது, மாணாக்கர்கட்குப் பாடல்களைப் படிப்பதில் எவ்வளவு பயிற்சி வேண்டும் என்று சொல்லத் தேவையில்லை. மாணாக்கர்களின் பேச்சுப் பழக்கத்தில் கவனம் செலுத்துதல் வேண்டும்; அது திறம்பட அமைவதற்குரிய கூறுகள் அனைத்திலும் நன்கு பயிற்சி தருதல் வேண்டும். இஃது ஒரே கவிதைப் பாடத்தில் முடியக் கூடியதன்று; ஓராண்டு முழுவதும் தரும் பயிற்சியாலும் எய்தக் கூடியதன்று. பள்ளி வாழ்க்கை முழுவதிலும் மாணாக்கர்கள் இப்பயிற்சியைப் பெறுதல் வேண்டும். பாடலைப் பயிற்றும்பொழுது சொல் திருத்தத்திலும் ஒலிநயத் திருத்தத்திலும் அதிகக் கவனம் செலுத்துதல் வேண்டும். கவிதை சரியாகப் படிக்கப்பெறுகின்றதா என்பதற்கு ஒரு சோதனை உண்டு. "கவிஞன் இதை இப்படித்தான் சொல்வானா?" என்ற வினாவிற்கு ஏற்ற விடை கண்டுவிட்டால், கவிதையைப் படிப்பதில் வெற்றி கண்டதாகக் கொள்ளலாம். படிக்கும்பொழுதே பாடலின் பொருள், அதிலுள்ள உணர்ச்சி கட்டவிழ்த்துக் கொண்டு வெளிவர வேண்டும். ஓர் எடுத்துக்காட்டைக் காண்போம். துச்சாதனன் திரௌபதியை மன்றுக்கு இழுத்து வருகின்றான்; அவள் ஆடையைக் களைய முனைகின்றான். இந்தப் 'பீடையை' நோக்கும் வீமனிடம் வெஞ்சினம் கிளர்ந்து எழுகின்றது. அவன் தருமனை நோக்கிக் கூறும் சொற்களையும் அதற்குப் பார்த்தன் கூறுவதையும் பாரதியார் எங்ஙனம் காட்டுகின்றார்? என்பதைக் காண்போம்,

**வீமன் சொல்வது**

'சூதர் மனைகளிலே—அண்ணே!
தொண்டு மகளிருண்டு.
சூதிற் பணயமென்றே—அங்கோர்
தொண்டச்சி போவதில்லை.

'ஏது கருதிவைத்தாய்?—அண்ணே
யாரைப் பணயம் வைத்தாய்?
மாதர் குலவிளக்கை—அன்பே
வாய்ந்த வடிவழகை;'

'பூமி யரசரெல்லாங்—கண்டே
போற்ற விளங்குகிறான்
சாமி, புகழினுக்கே—வெம்போர்ச்
சண்டனப் பாஞ்சாலன்;'

'அவன் சுடர்மகளை—அண்ணே
அடி யிழந்துவிட்டாய்.
தவறு செய்துவிட்டாய்—அண்ணே
தருமங் கொன்றுவிட்டாய்;'

'சோரத்திற் கொண்டதில்லை;—அண்ணே!
சூதிற் படைத்ததில்லை.
வீரத்தி னாற்படைத்தோம்;—வெம்போர்
வெற்றியி னாற்படைத்தோம்;'

'சக்கர வர்த்தியென்றே—மேலாந்
தன்மை படைத்திருந்தோம்;
பொக்கென ஓர்கணத்தே—எல்லாம்
போகத் தொலைத்துவிட்டாய்.'

'நாட்டையெல் லாந்தொலைத்தாய்;—அண்ணே
நாங்கள் பொறுத்திருந்தோம்;
மீட்டும் எமையடிமை—செய்தாய்.
மேலும் பொறுத்திருந்தோம்;'

'துருப தன்மகளைத்—திட்டத்
துய்மன் உடற்பிறப்பை,
இருப கடைஎன்றாய்,—ஐயோ!
இவர்க் கடிமையென்றாய்!'

'இதுபொ றுப்பதில்லை,—தம்பி!
எரிதழல் கொண்டு வா.
கதிரை வைத்திழந்தான்—அண்ணன்
கையை எரித்திடு வோம்'

### பார்த்தன் சொன்னது

எனவீமன் சகதேவ னிடத்தே சொன்னான்;
இதைக்கேட்டு வில்விசயன் எதிர்த்துச் சொல்வான்;
'மனமாரச் சொன்னாயோ? வீமா! என்ன
வார்த்தை சொன்னாய்? எங்குசொன்னாய்யாவர் முன்னே?
கனமாருந் துருபதனார் மகளைச் சூதுக்
களியிலே இழந்திடுதல் குற்ற மென்றாய்;
சினமான தீஅறிவைப் புகைத்த லாலே
திரிலோக நாயகனைச் சினந்து சொன்னாய்,

"'தருமத்தின் வாழ்வதனைச் சூது கவ்வும்;
தருமமறு படிவெல்லும்" எனும்இயற்கை
மருமத்தை நம்மாலே உலகங் கற்கும்
வழிதேடி விதிஇந்தச் செய்கை செய்தான்.
கருமத்தை மேன்மேலுங் காண்போம். இன்று
கட்டுண்டோம்; பொறுத்திருப்போம்; காலம்மாறும்;
தருமத்தை அப்போது வெல்லக் காண்போம்;
தனுஉண்டு காண்டீபம் அதன்பேர்' என்றான்.[5]

வீமன் சொல்வதிலும் அர்ச்சுனன் சொல்வதிலும் உணர்ச்சி வேறுபாடு உண்டு; அதற்கேற்றவாறு கவிதையின் யாப்புகளிலும் வேறுபாடு அமைந்துள்ளது. முதலாவதில் சின உணர்ச்சி பொங்கி வழிகின்றது; இரண்டாவதில் அடக்கமும் பொறுமையும் நிறைந்துள்ளன; ஆனால், சினக் குறிப்பும் அதில் நிழலிடுகின்றது. பாடல்களைப் படிக்கும்பொழுது மாணாக்கன் தன்னை வீமனாகவும் அர்ச்சுனனாகவும் நினைத்துக்கொண்டு படிக்க வேண்டும்; அவர்கள் உணர்ச்சி கவிதைகளில் வெளிப் படுதல் வேண்டும். கவிஞன் தன்னை அவ்வாறு நினைத்துதானே அப்பாடல்களைப் பாடியிருப்பான்? வகுப்பில் ஒருவர் படித்ததை ஏனையோர் 'திறனாய்தல்' வேண்டும். மாணாக்கன் படித்ததை ஆசிரியரும் உற்சாகம் ஊட்டிப் புகழ்தல் வேண்டும்; பாராட்டுதலும் வேண்டும். நாளடைவில், படிப்படியாக, மாணாக்கர்கள் பாடல்களை நன்கு படிப்பர்; அவற்றின் பொருளும் தெளிவாகும்: உணர்ச்சியும் அழகும் நன்கு புலப் படும். அடிக்கடிக் கவிதைகளைப் படித்துக் குறைநிறைகளைக் காணும் வாய்ப்புகளை மாணாக்கர்கட்குத் தந்தால், அவர் கள் நிறைந்த பயனை எய்துவர். பள்ளியை விட்டபிறகு கவிதை களை நன்கு படிக்கும் வாய்ப்பும் கிடைப்பது அரிது. எனவே, மாணாக்கர்கள் விரும்பும் பாடல்களை மட்டிலுமாவது நன்கு படிக்கும் பழக்கமும் அவற்றைக் கேட்டு மகிழும் இன்பமும் பள்ளியில் கிடைக்கச் செய்தல் மிகவும் இன்றியமையாதது.

**கவிதையை படித்தலே முக்கியம்:** கவிதை கற்பித்தலைப் பற்றி முன்னரே கூறியுள்ளோம். கவிதை கற்பிக்கும்பொழுது கவிதையைப் படித்தலே மிகவும் முக்கியம் என்றும் வற்புறுத்தி னோம். அதையே ஈண்டு மீண்டும் வற்புறுத்துகின்றோம். எந்தக் கவிதையைக் கற்பிக்க நேர்ந்தாலும் அதைக் கிட்டத் தட்ட ஆறு தடவையாவது படித்துக் காட்டவேண்டும். இன்றைய

5. பாரதி: பாஞ்சாலி பதம் - பாடல்கள் [278-288]

பாடத்திட்டத்தில் உயர்நிலைப் பள்ளியில் அதிகமாகக் கவிதை களைக் கற்பிக்க வாய்ப்புகள் இல்லை. என்றாலும், கவிதை களைக் குழந்தைகட்குப் படித்துக் காட்டுவதற்குக் காலம் ஒதுக் கத்தான் வேண்டும். படிக்கவேண்டிய முறையில் கவிதையைப் படித்தால், நாம் சொல்லுவதைவிடக் கவிஞன் மிக அருமை யாகச் சொல்லுவான். நாம் ஏதாவது ஒரு கவிதையை ஒரு வகுப் பிற்குப் படித்துக் காட்டினால், ஒரு சிலருக்கு அக்கவிதை சிறிதும் பொருந்தாதிருக்கக்கூடும்; அஃது அவர்கள் மனத்தைச் சிறிதும் கவர்வதில்லை. ஆனால், எல்லோரும் கவிதையை உணர்ந்து படிக்கவேண்டும் என்பது நம் நோக்கமாக இருத்தல் வேண்டும். இந்நோக்கம் நிறைவேற வேண்டுமாயின், பல்வேறு கவிதை வகைளை வகுப்பில் படிக்கவேண்டும். இதனால் சில கவிதை களாவது ஒவ்வொரு குழந்தையின் உள்ளத்தைத்தொடும்; அதனுடைய கற்பனையைக் கிளர்ந்தெழச் செய்யும். எனவே, இயன்றவரை ஆசிரியர் பல்வேறு முறைகளில் கவிதை குழந் தைக்கு முறையீடு செய்யும் வாய்ப்புகளை நல்கவேண்டும். நாம் ஒரு கவிதையைக் கற்பிக்காவிடினும், நாம் அதைப்பற்றி ஒன்றுமே சொல்லக்கூடாது என்பது பொருளன்று. ஒருசில கடின சொற்களுக்குப் பொருள் கூறலாம்; ஒரு சிலவற்றின் நயத்தைச் சுட்டலாம். இதற்கு அதிகக் காலமும் ஆகாது. இது கவிதையைப் புரிந்துகொள்வதற்கும் துணை புரியக்கூடும். ஆனால், கவிஞன்தான் மாணாக்கர்களுடன் அதிக நேரம் பேச வேண்டும். ஒரு பாடவேளையைப் பாரதியாருடன் கழிக்கலாம்; ஒரு பாடவேளையைக் கவிமணியுடன் போக்கலாம்; ஒரு பாடவேளையைப் பாரதிதாசனுக்கு தரலாம்; ஒரு பாட வேளையைக் கட்டபொம்பன் கதை, அல்லி அரசாணிமாலை, பவளக்கொடி மாலை, தேசிங்குராசன்கதை போன்ற கதை பொதி பாடல்களில் செலவழிக்கலாம். இங்ஙனமே ஒரு பாடவேளையை மாணாக்கர்களின் கவிதைத் தொகுப்பிலும், ஒரு பாட வேளையைத் தற்காலக் கவிதைகளின் தொகுப்பிலும், ஒரு பாட வேளையைத் தனிப்பாடல் திரட்டிலும் போக்கலாம். ஒவ்வொரு கவிதையையும் இரண்டு தடவையாவது படித்தல் வேண்டும்; குழந்தைகளே கவிதைகளைப்பற்றிய கருத்தினை அடைவதற்குச் சிறிது காலமாவது தருதல் வேண்டும். திறனாய்வதற்கு வாய்ப்பு கள் தந்து அதில் அவர்கட்குப் பயிற்சியும் அளித்தல் வேண்டும், கவிதைக்குரிய பாடவேளை இயன்றவரை களிப்பூட்டும் பாட வேளையாக, புதிய அழகான பொருள்களைக் காணும்நேரமாக. அமைதல் சாலப் பயன்தரும்; ஏற்கெனவே அவர்கள் அறிந்த கவிதைகளைப்பற்றிச் சிந்திக்கும் பாடவேளையாகவும் அமைய

லாம்; அதனாலும் நிறைந்த பயனை எதிர்பார்க்கலாம். மனப் பாடம் செய்வதற்குரிய பாடல்களை அவர்களாகவே தேர்ந் தெடுத்தல் வேண்டும்; ஒவ்வொருவரும் அவரவர் விரும்புவன வற்றைத்தான் தேர்ந்தெடுத்தல் வேண்டும். இம்முறையினால் தான் கவிதைச் சுவையை வளர்க்க முடியும்; இதனால் பல்வேறு அழகான ஒலிவகைகளுக்கு அவர்களது காதினைப்பயிற்றமுடியும். இம்முறையால் மட்டிலுந்தான் கவிதைச் செல்வத்தைப் பற்றிய கருத்தினை அவர்கள் பெறுவர். கவிதையைப் படிப்பவர்களை, கவிதையை அநுபவிப்பவர்களை ஆக்க வேண்டுமேயன்றி கவிதையை ஆராய்பவர்களை உண்டாக்குவது நம் நோக்க மன்று என்பதை நினைவில் வைத்தல் வேண்டும். ஒரு சிலர் கவிதை ஆய்வாளர்களாக ஆதல் கூடும். நாம் அவர்களைக் காண நேரிட்டால், அவர்கட்கு அதிகப்படியாகத் துணை செய்தல் வேண்டும். ஆனால், பெரும்பாலோர் கவிதையை ஆராய்வதில்லை. எனினும், அவர்களைத் தாமாகவே கவிதை படிப்பதில் கொண்டு செலுத்தலாம். அவர்கள் தேவையான அளவு கவிதையைப் படிக்கக் கேட்டால், அவர்கள் அதன் வடிவத்திலும் ஒலியிலும் பழக்கம் அடைவர். அவர்கள் கவிதை படிப்பதை மகிழ்ச்சியடைவதுடன் இணைத்துக் கொள்வதில் வாய்ப்புகள் பெற்றால், அல்லது கவிதையைப் படிப்பதால் முரு குணர்ச்சியையும் வாழ்க்கையின் அழகான பொருள்களையும் இயற்கையின் அழகையும் பெறுவார்களாயின், அல்லது கவிதை அவர்கட்கு என்றும் ஓர் அழகுப் பொருளாக அமையுமாயின், அஃது என்றும் அவர்களிடம் நிலைத்து நிற்கும் பொருளாக வும் அமைந்துவிடும். இந்நோக்கம் நிறைவேறாவிடின், பாடத் திட்டத்தில் கவிதை இடம் பெற்றதால் யாதொரு பயனும் இல்லை. அது மாணாக்கர்களிடம் முருகுணர்ச்சியை எழுப்பா விடில், அஃது ஆசிரியர்களின் கற்பிக்கும் திறனின்மையை காட்டுகின்றது. இதற்குமேல் ஒன்றும் அதிகம் கூறுவதற் கில்லை.

**இன்றைய கேடான நிலை:** மேற்கூறியவற்றால் ஆழ்ந்த படிப்பு அகன்ற படிப்பு ஆகிய இரண்டுக்கும் எவ்வளவு நேரத்தை எந்த அளவில் பிரித்து வழங்குவது என்ற முடிவற்ற பிரச்சினை எழு கின்றது. நாம் பள்ளியில் பயிலும் சிறுவர்களையும் சிறுமி களையும் வாழ்க்கைக்கு ஆயத்தம் செய்வதே முக்கிய நோக்கமாக இருக்க வேண்டும் என்று பல கல்வி வல்லுநர்கள் வற்புறுத்தி வருகின்றனர். நாளடைவில் அவர்கள் ஒரு குறிப்பிட்ட தொழிலில் புகுந்து விடுவர். இளமையில் அவர்கட்கு விரிந்த தொரு கல்வியை நல்குதல்வேண்டும். நம்முடைய கல்வி நிலையங்

களில் பயில்வோர்களை எழுத்தர் வேலைக்கும், பொறியியல் வல்லுநர் தொழிலுக்கும், உழவுத் தொழிலுக்கும் ஆயத்தம் செய்கின்றோம் என்ற குறுகிய நோக்கத்திற்கே இடந்தரலாகாது; அத்தகைய குறுகிய கருத்தினை எதிர்த்துப் போராடவேண்டும். இது பரந்ததொரு கல்விமுறையால்தான் சாத்தியப்படும்.

கவிதை பயிலுவதுபற்றிய இன்றைய நிலைமை மிகவும் வருந்தத்தக்கதாக உள்ளது. கவிதையைத் தவிர வேறு எல்லாவற்றையும் மாணாக்கர்கள் பயிலுகின்றனர். பெரும்பாலான மொழியாசிரியர்கள் கவிதைப் பாடத்தில் கவனத்தைச் செலுத்தி முறைப்படி நடத்துவதில்லை. கவிதைகளின் கருத்துகளையும் வேண்டாத இலக்கணக் குறிப்புகளையும் தருகின்றனரேயன்றி, கவிஞன் உள்ளத்தை அவர்கட்குக் காட்டுவதில்லை. தேர்வு கவிஞன் நோக்கத்தை உணர்த்துவது மில்லை. தேர்வு முகைளும் எரிகின்ற நெருப்பில் எண்ணெய் ஊற்றியது போல இந்நிலையைப் பின்னும் கேடாக்கி விடுகின்றன. எங்கும் ''உரைநூல்'' மயமாகக் காட்சி அளிக்கின்றது, வினா–விடை நூல்கள் பல்கிப் பெருகிப்பெருகின்றன. வாமன அவதாரம்போல் காணும் பாட நூல் 'உரைநூல்' வடிவத்தில் திரி விக்கிரமாவதாரம்போல் வடிவு எடுக்கின்றன! பாட நூல்களிலுள்ள கவிதைகளைப் பற்றியே மாணாக்கள் கவலைப்படுவதில்லை. கவிதையைப் படித்துச் சுவைக்க வேண்டும் என்ற நெறியையும் ஆசிரியர்கள் காட்டுவதில்லை. சில ஆசிரியர்கள் உரைநூல்களை வாங்கும் படியும் தூண்டுகின்றனர். தாமும் ஓர் உரைநூலை 'மறைநூல்' போல் வைத்துப் போற்றுவது பின்னும் நம் வருத்தத்தை மிகுவிக்கின்றது. இக்கொடுமையிலிருந்து மாணாக்கர்கள் உய்ந்து கவிதைகளைச் சுவைக்கும் நாள் எந்நாளோ? இதற்கு ஆண்டவன்தான் வழிகாட்ட வேண்டும்.

இவ்விடத்தில் டாக்டர் ஜான்சன் என்ற ஆங்கில மேதை தன்னுடைய செகப்பிரியரின் நாடகப் பதிப்பின் 'நூல் முகத்தில்'[6] கூறியிருக்கும் கருத்துகள் கம்பனையோ, இளங்கோவையோ சேக்கிழாரையோ, திருத்தக்க தேவரையோ படிக்கும நம் மாணாக்கர்கட்கும் முற்றிலும் பொருந்தும். அவர் கூறுவார்:

''குறிப்புகள் தேவையே! ஆனால், அவை தேவையான கொடுமைகள்.[7] செகப்பிரியரின் ஆற்றல்களைப்பற்றி அறியாத மாணாக்கன்—ஆனால் அந்த நாடகம் நல்கக்கூடிய உயர்ந்த இன்

6. நூல்முகம் - Preface 7. கொடுமை - Evil

பத்தைப் பெற விரும்பினால்-உரையாசிரியர்களையோ திறனாய்வாளர்களையோ கடைப்பிடிக்காமல் ஒவ்வொரு நாடகத்தையும் முதற் காட்சியிலிருந்து இறுதிக் காட்சிவரை படிப்பானாக, அவனுடைய கற்பனை, சிறகு பெற்றுப் பறக்கத் தொடங்கிவிட்டால், அதன் திருத்தத்திற்கோ விளக்கத்திற்கோ இடந்தரலாகாது. அவனுடைய கவனம் உரமாக ஈடுபட்டிருக்கும் பொழுது, தியபால்டு[8], போப்[9] போன்ற பெயர்களையே புரட்டுவதற்கு வெறுப்பு ஏற்படட்டும். அவன் விளக்கம் பெற்றும், பெறாதும் படிக்கட்டும்; நேர்மையான பகுதியையும் நேர்மையற்ற பகுதியையும் படிக்கட்டும். அவன் உரையாடலின் (Dialogue) பொருளுணர்ச்சியையும், கதையிலுள்ள கவர்ச்சியையும் காக்கட்டும். புதுமையில் கண்ட மகிழ்ச்சி குறையத் தொடங்கியதும். அவன் சரியான உரைக்குப் போகலாம். உரையாசிரியர்களையும் படிக்கலாம்.''

''ஒரு குறிப்பிட்ட பகுதிகள் குறிப்புகளால் விளக்கம் அடையத்தான் செய்கின்றன. ஆனால், நூலைப் படிப்பதாலுண்டாகும் பொதுப்பயன் தளர்ச்சியடைகின்றது. அடிக்கடிக் குறுக்கீடு நிகழ்வதால் மனம் உறைந்து விடுகின்றது! முதல்நிலைப் பொருள்களிலிருந்து எண்ணங்கள் சிதறிப் போகின்றன; படிப்போருக்குச் சோர்வும் ஏற்படுகின்றது; அதற்குரிய காரணமும் அவருக்குப் புலப்படுவதில்லை; இறுதியாக அவர் விடாமுயற்சியுடன் படித்த நூலை விட்டெறிந்து விடுகின்றார்.''

''நூல் முழுவதையும் பார்ப்பதற்கு முன்னர், பகுதிகளை ஆராய்தல் கூடாது; எந்தப் பெரிய நூலையும் அதன் முழு அமைப்பையும்பற்றிச் சரியான முறையில் பொருளுணர வேண்டுமாயின், நம் அறிவு நிலை ஒரு விதத் தொடர்புமின்றி இருத்தல் இன்றியமையாதது; நெருங்கி அணுகுவதால் சிறு நுட்பங்கள் புலனாகின்றன என்பது உண்மைதான்; ஆனால் முழுமையின் அழகு நமக்குச் சரியாகப் புலனாவதில்லை.

கல்வி நிலையங்களில் நடைபெறுபவை: கம்பராமாயணத்தையோ, சீவக சிந்தாமணியையோ, சிலப்பதிகாரத்தையோ படிக்க விரும்பினால், நாம் முதலில் மூல நூலைப் படிக்கவேண்டும்; அக்காவியங்களை இயற்றிய கவிஞர்களே முதலில் நம்முடன் பேசுதல் வேண்டும்: அப்பொழுதுதான் அக்காவியத்தை இயற்றிய கவிஞர்களின் உள்ளங்களை அறிதல் இயலும். அதன் பிறகுதான் திறனாய்வு நூல்களுக்குப் போகவேண்டும். அக்

8 தியபால்டு - Theobald 9 போப் - Pope

காவியங்களைப்பற்றி நமக்கென்று ஒரு கருத்து ஏற்பட்ட பிறகு திறனாய்வாளர்களின் நூல்களைப் படித்தால் நாம் அவற்றை நன்கு சுவைக்க முடியும். எனவே, பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் முதலில் மூல நூல்களைப் படித்துச் சுவைக்கும் பயிற்சியை வற்புறுத்துதல் வேண்டும்; அதற்கேற்ற வாய்ப்புகளையும் நல்க வேண்டும். மூலத்தைப் படிக்க மலைப்பு தட்டினால் அதன் சுருக்கத்தையாவது முதலில் படிக்க வேண்டும். எடுத்துக்காட்டாகச் 'சீவகசிந்தாமணியை'ப் படிக்க முடியாவிட்டால் 'சீவகசிந்தாமணிச் சுருக்கத்தை'யாவது முதலில் படிக்கவேண்டும். அதன் பிறகுதான் 'சிந்தாமணி ஆராய்ச்சி'க்குள் புகவேண்டும்; அதை எடுத்துப் படிக்கவேண்டும். ஆனால், பெரும்பாலும் இன்றைய பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் நடைபெற்று வரும் கற்பிக்கும் முறைகள் மிகவும் வருத்தத்தை விளைவிப்பனவாக்வுள்ளன. முழுவதையும் கற்பிக்கக் காலம் போதவில்லையென்று எத்தனையோ விதமான குறுக்கு வழிகளை மேற்கொள்ளுகின்றனர் ஆசிரியர்கள். மூல நூல்களைச் சரியான முறையில் கற்பிக்க நேரம் போதவில்லையென்றால், அவற்றைத் தவறான முறைகளில் மட்டிலும் கற்பிப்பதற்குக் காலம் எப்படிக் கிடைக்கிறது? என்பதுதான் தெரியவில்லை. மூல நூலை விட 'மூல நூலைப் பற்றிய' நூல்தான் மிகவும் முக்கியமா? எட்டுத்தொகை நூல்களில் உள்ள பாடல்களைப் படித்து நன்கு சுவைத்த பிறகுதான் அவைபற்றிய 'சொற்பொழிவு நூல்'களுக்குப் போக வேண்டும். தமிழ் எம். ஏ. போன்ற தேர்வுகளுக்குப் பயிலும் மாணாக்கர்கள் பாடப்பகுதியாகவுள்ள பாடல்களைப் பயிலாமலேயே சொற்பொழிவு நூல்களைக் கொண்டே 'காலம் தள்ளுகின்றனர்'. சிலர் மூல நூல்களைத் தேர்வுக்காலம் முழுவதிலும் ஒரு தடவைகூடப் படிப்பதில்லை. படிக்க வேண்டும் என்ற கவலையும் இல்லை; அக்கறையும் இல்லை. கவிதைச் சுவையை அறியாமலேயே தேர்வுகள் எழுதி அவற்றில் 'முதல்தரமான' வெற்றியும் அடைந்து விடுகின்றனர்! தேர்வுக்காலத்தில் கூட அவர்கள் மூல நூல்களைப் படிக்காவிடில் அவர்கள் வாழ்நாளில் என்றுதான் அவற்றைப் படிக்கப் போகின்றார்களோ? யாம் அறியோம்.

கல்லூரிகளில்தான் மேற்கூறியபடி நடைபெறுகின்றது என்றால், உயர்நிலைப் பள்ளிகளின் நிலைதான் என்ன? அங்கும் இதே அவல நிலைதான். குகப்படலமோ அங்கதன் தூதுப்படலமோ பாடமாக வந்திருந்தால் மாணாக்கர்கள் அப்பகுதியிலுள்ள பாடல்களை நன்கு படித்துச் சுவைத்து அநுபவிப்பதில்லை. மூல பாடல்களைவிட அவற்றின் சுருக்கங்களையும். வினா விடை

களையும், பிறவற்றையுமே அதிகம் கற்கின்றனர்; வேண்டாதன வற்றைக் கற்பதில்தான் அதிக நேரம் செலவிடுகின்றனர். புதிய செகண்டரிக் கல்வித் திட்டப்படி முதல் மூன்று யாண்டுகளை நீக்கிவிட்டால் குறைந்தது எட்டு யாண்டுகள் மாணாக்கர்கள் கவிதைப் பாடங்களைப் பயிலுகின்றனர். இந்தக் காலத்தில் அவர்கள் சிறுகாப்பியங்கள், பெருங்காப்பியங்கள், தனிப்பாடல்கள், பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள், சில்லறைப் பிரபந்தங்கள், சீட்டுக் கவி போன்றவைகள் ஆகியவற்றின் பெரும் பகுதிகளைக் கற்கலாம். தாமே, தாம் சுவைத்த கவிதைகளைத் திரட்டத்தொடங்கினால், எத்தகைய அழகான கவிதைக் கருவூலத்தைத் தொகுத்து வைக்க முடியும்! கவிதையைப் படித்துச் சுவைப்பது எத்தகைய இன்பத்தை நல்கவல்லது என்பதையும், அங்ஙனம் சுவைக்கும் பொழுது கவிதையில் அழகை அநுபவிப்பதுடன் உண்மையையும் எந்த அளவுக்கு உணர முடிகின்றது என்பதையும் ஓரளவு நன்கு அறிகின்றோம். இன்று பெரும்பாலான உயர் நிலை, மேல் நிலைப் பள்ளி மாணாக்கர்கள்—குறிப்பாக, பள்ளியிறுதித் தேர்வு வகுப்புகளில் படிப்போர்—தமக்குப் பாடமாக வந்துள்ள கவிதைகளைப் படிக்காமல் 'உரை நூல்களையும்' வினா-விடை நூல்களையுமே அதிக நேரம் 'கட்டி அழுகின்றனர்' என்பது கண்கூடு. பாடநூலை வாங்குவதற்குமுன் உரைநூல்களையே வாங்குகின்றனர்! அவற்றில்தான் தம்முடைய முதல் நாட்டத்தைச் செலுத்துகின்றனர்.

மேற்கூறியவற்றிலிருந்து நாம் அறிந்துகொள்ள வேண்டிய முக்கியமானதொன்று யாதெனில், மாணாக்கர்கள் தம் கற்பனையைப் பறக்கவிட்டுக் கவிதைகளைக் கேட்பதில் நல்ல பயிற்சியடைய வேண்டும் என்பது. ஒரு முறை படித்தவுடன் மாணாக்கர்கள் எவ்வளவு பலன் அடைந்துள்ளனர் என்பதைக் காண்பதற்குப் பல முறைகள் உள்ளன. கவிதைப் பாடங்களில் தேர்வு உள்ளது என்பதை மாணாக்கர்கள் உணராவிட்டால் அவர்கள் அவற்றில் போதுமான அளவு கவனம் செலுத்தார் என்று சிலர் வற்புறுத்துகின்றனர். இந்நூலாசிரியரைபொறுத்த மட்டிலும் அங்ஙனம் கருதுவது தவறு. தேர்வுபற்றிய எண்ணம் மாணாக்கர்களிடம் இருந்தால், அவர்கள் சரியானமுறையில் கவிதையைக் கவனித்துக்கேட்கார். தேர்வுக்காகப் படிக்கும் மாணாக்கர்களைக் கவனித்தால் இவ்வுண்மை தெளிவாகப் புலனாகும். கவிதையைச் சுவைக்கும் பழக்கமே—கவிதை அநுபவமே—அவர்களிடம் அமைவதில்லை. ஒரோவழி அமையினும் அது நிலைபெறுவதில்லை; இத்தகைய நிலை பள்ளியில் நிலவச் செய்வது கவிதை பயிற்றுவதன் முதலாய பயனை மறப்பதாகும். குழந்தையோ

மாணாக்கனோ கவிதையை நன்கு 'அநுபவிக்க வேண்டுமாயின், அவன் கவலையற்ற மனத்துடன் அதனைப் படிப்பதைக் கேட்கவேண்டும். நம்முடைய திறனாயும் அறிவு உறங்கிய நிலையில்தான் மனம் கற்பனையுடன் கவிதையநுபவத்தைப் பெறுவதற்கு ஆயத்தமாக இருக்கும்; சுவைப்பதற்கேற்ற சூழ்நிலையும் அமையும். விடுதலையுடன் உள்ள மனந்தான் அதிகமாக ஏற்கும் தன்மையுடையது. மனம் கவிதையை நல்ல முறையில் ஏற்றுக் கொண்டு விட்டால் சிறுவர்கள் நன்முறையில் திறனாயும் ஆற்றலையும் பெறுவர். சில ஆசிரியர்கள் இவ்வுண்மையைச் சரியாகப் புரிந்துகொள்வதே இல்லை. ஒன்று மற்றொன்றினை வளர்ப்பதற்குத் துணை செய்கின்றது என்பதை அவர்கள் சரியாக உணர்வதே இல்லை.

**விளையாட்டு முறை:** இவ்விடத்தில் கற்றலில் விளையாட்டு முறை எந்த அளவு துணைசெய்கின்றது என்பதை நினைவுகூர்தல் வேண்டும். சிறுவர்கள் மகிழ்ச்சி தரும் பொருள்களில்தான் அதிகமாகக் கவனம் செலுத்துவார்கள். பல்வேறு விளையாட்டுகள் பொழுதுபோக்குச் செயல்கள், **விருப்பச் செயல்கள்** (Hobbies) போன்றவற்றில் அவர்கள் முழுமனத்துடன் ஈடுபடுவதிலிருந்து இதனை நன்கு உணரலாம். வளர்ந்தவர்கட்கும் கிட்டதட்ட இதே நிலைதான். எதையும் விளையாட்டாகப் பாவிக்கும் மன நிலை பெற்றுவிட்டால், அனைத்தும் மகிழ்ச்சியை அளிக்கும். இந்த மனநிலையைப் பெற்ற கவிஞன்தான் உலகில் நடைபெறும் செயல்களைத்தையும் ஆண்டவன் 'அலகிலா விளையாட்டாகச்' செய்துவருகின்றான் என்ற கருத்தினையும் நமக்குத் தருகின்றான், கவிதையை அநுபவிப்பதிலும் இம்மனநிலை மாணாக்கர்கட்கு ஏற்படுதல் வேண்டும்; ஆசிரியர் அதற்கேற்ற பயிற்சி தரவேண்டும். வகுப்பறையோ பள்ளியோ இன்பம் தரும் களமாக ஆகிவிட்டால் அதில் பெருங்கேடு விளைதல் கூடும் என்றும், பள்ளி வேலைக்காக ஏற்பட்டதேயன்றி விளையாட்டுக்காக அன்று என்றும் அவர்கள் கருதுவர். பள்ளி வேலைக்காக—மாணக்கர்கள் பயில்வதற்காக ஏற்பட்டது என்பது உண்மைதான்; அதை அவர்மறுக்கவில்லை. எனினும், ஒரு மாணாக்கனிடமிருந்து நல்ல நிலையை எதிர்ப்பார்த்தால், அதில் அவன் மகிழ்ச்சியுடன் ஈடுபடக்கூடும். உளவியல் அறிஞாகள் கூறும் விளையாட்டுபற்றிய கருத்துக்களை உணர்ந்தால்தான் இதற்குத் தெளிவு பிறக்கும். எவ்விதக் கட்டாயமின்றி விளையாட்டாக ஏற்றுச் செய்தால் தான் அனைத்தும் திறனுடன் நடைபெறும். மனிதனுடைய அருஞ் செயல்கள் யாவும் விளையாட்டின் அடிப்படையில்தான் தோன்றின என்பது உலக வரலாறு நமக்குக் காட்டும் உண்மை. புதிய

கல்வி முறைகள் யாவும் விளையாட்டின் அடிப்படையில்தான் அமையும்.

ஆசிரியர் கவிதையை விரும்பிச் சுவைத்தால், அவர் கவிதையைப் படித்தலால் மாணாக்கர்களிடம் சுவை காணும் திறனை எழுப்பிவிடமுடியும்; அவர்களுடைய கற்பனை ஆற்றலைக் கிளர்ந்தெழச் செய்தலும் கூடும். மாணாக்கர்கள் தம் கற்பனையின் துணையால் கவிதை உலகில் உலவும் பழக்கத்தைப் பெற்றுவிட்டால், அவர்கள் எல்லையற்ற இன்பத்தைப் பெறுவர். ஆசிரியர் தாம் கவிதையைப் படித்தலால் இத்தகைய பழக்கத்தை மாணாக்கர்களிடம் ஏற்படுத்தி விட்டால், அஃது அவருடைய முழு வெற்றியாகும். இப்பயிற்சியைக்கொண்டே நாளடைவில் மாணாக்கர்கள் தாமாகாவே கவிதையுலகினில் புகுவதற்கு முனைவர்; தாமாகவே பல பாடல்களைப் படித்தும் சுவைப்பர். தாம் படித்துச் சுவைக்கும் பாடல்களைத் திரட்டி வைக்கும் பழக்கமும் அவர்களிடம் இயல்பாகவே அமையும்.

கவிதைபற்றிய அகன்ற படிப்பைப்பற்றி ஒன்று இவ்விடத்தில் குறிப்பிடலாம். பாடப் பகுதிகளில் உள்ள பாடல்களைத் தவிர வேறு பல நல்லபாடல்களைப் படிக்கவேண்டுமானால், 'கவிதைக் கழகம்' என்ற ஒரு கழகத்தைப் பள்ளியில் தொடங்கி அதில் இந்த அகன்ற படிப்பை மேற்கொள்ளலாம். வாரத்திற்கு ஒரு நாள் ஒரு மணி நேரம் இதற்கென ஒதுக்கி வைத்தால் போதுமானது. விடுமுறை நாட்களில்கூட மாலை நேரத்தில் இதனை மேற்கொள்ளலாம். இக் கவிதைக் கழகத்தில் ஆசிரியர் கலிங்கத்துப் பரணி, குற்றாலக் குறவஞ்சி, முக்கூடற் பள்ளு, பாரதியின் பாஞ்சாலி சபதம், பாரதிதாசனின் சில நூல்கள் போன்ற எளிய சில சுவையான நூல்களை நல்ல முறையில் படித்து மாணாக்கர்களிடம் கவிதைச் சுவையை எழுப்பலாம். மாணாக்கர்களையும் தாம் படித்த கவிதைகளைச் படிக்கச் செய்யலாம். எதற்கும் மனம் இருந்தால் வழி பிறக்கும்.

# அழகும் உண்மையும்

முன்னோர் இயலில்[1] கவிதை முருகுணர்ச்சியை நல்கு கின்றது என்றும், அந்த முருகுணர்ச்சியில் நாட்டம் செலுத்து பவர்தாம் கவிதையைக் கற்பிக்கத் தகுதியுள்ளவர் என்றும் குறிப் பிட்டோம். அந்த முருகுணர்ச்சியில்—'கைபுனைந்தியற்றாக் கவின்பெறு வனப்பில்'—ஈடுபடுகின்றவரே கவிதை கற்பிக்கத் தகுதியுடைவர் என்று சுட்டி யுரைத்தோம். இத்தகைய முருகில் தான்—அழகில்தான்—உண்மைகள்— வாழ்க்கையின் பல்வேறு உண்மைகள்—பொதிந்து கிடக்கின்றன என்றும், அதில் நம்பிக்கை கொள்பவர்களே கற்பிப்பதற்குத் தகுதிபெறுகின்றனர் என்பதையும் ஈண்டுக் குறிப்பிட விரும்புகின்றோம். பெரும் பாலும் கவிதை பயிற்றுவோரிடம் இத்தகைய ஒரு நம்பிக்கை இல்லாததன் காரணமாகவே பயிற்றுதல் துறையில் அதிகமான வெற்றி காண்பதில்லை. இத்தகைய ஒரு பிரச்சினையைக் கவிதை கற்பிக்கும் சில ஆசிரியர்கள் என்றுமே சிந்தித்துப்பார்க்காமையே இதற்குக் காரணம் என்று கூடக் கருதலாம். இதில் நம்பிக்கை யில்லாமையால் அவர்கள் அதைப்பற்றிச் சிந்திக்கவில்லை; அதனைச் சோதிக்கவில்லை; அதைப்பற்றிய ஐயமும் அவர்கள் மனத்தில் எழவில்லை. ஒரு வடிவக்கணிதத்திலுள்ள[2] தேற்றம்[3] ஒன்றையும், கவிதையொன்றினையும் கற்பிப்பதிலுள்ள வேற்று மையை எண்ணிப்பார்த்தால் இது தெளிவாகப் புலனாகும். தேற்றத்தைக் கற்பிக்கும்பொழுது ஆசிரியர் தாம் கற்பிக்கப் போகும் தேற்றத்தின் உண்மையைத் திட்டமாக அறிந்து கொண்டுள்ளார். எனவே, நம்பிக்கையுடனும் மன உறுதி யுடனும் அதனைக் கற்பிக்கும் பணியில் இறங்குகின்றார். ஆனால் கவிதை கற்பிக்கும் பெரும்பாலோருக்குத் தாம் கற்பிக்கும் கவிதை மேற்கூறிய தேற்றத்தைப்போன்று உண்மை யானதாகத் தோன்றுவதில்லை; அஃது அழகையும் இன் பத்தையும் நல்கவல்லதாக இருப்பினு , தேற்றத்தில் பொதிந் துள்ள உண்மையைப்போல், அஃது அவர்கட்குப் புலனாவ தில்லை; அவர்கள் மனத்தைக் கௌவுவதுமில்லை. ஆயின், கவிதை கூறும் உண்மைதான் என்ன? கவிதை வாழ்க்கையின்

1. இயல்: 2 பக்கம்-7

2. வடிவக் கணிதம் -Geometry

3. தேற்றம் - Theorem

உண்மைகளைக் கூறுகின்றது. "கவிதை வாழ்விலிருந்து மலர்ந்தது; வாழ்விற்கே உரியது; வாழ்விற்காகவே நிலை பெற்றுள்ளது" என்று ஹட்சன் என்ற திறனாய்வாளர் கூறுவது ஈண்டுச் சிந்தித்தற்குரியது.[4] பொருள் களின் தன்மைக்கேற்றவாறு காணச் செய்வது அறிவியல்; நடந்ததை நடந்தபடியே உணர்த்துவது வரலாறு; இஃது எப்படி யிருந்தது என்பதைக் கூறுவது. வாழ்க்கை எப்படியிருக்க வேண் டும் என்று கூறுவது கவிதை. அரிஸ்டாட்டில் கூறுவது போல, "கவிதையின் படைப்புகள் மெய்ம்மையானவை அல்ல; ஆனால், உயர்ந்த உண்மைத் தத்துவம் அமைந்தவை. எப்படி இருக்க வேண்டுமோ அவையேயன்றி எப்படி உள்ளனவோ அவை அல்ல." இதைப் புரிந்து கொண்டால் கவிதை கூறும் உண்மை ஒருவாறு புலனாகும்.

ஓர் எடுத்துக்காட்டு மேற்கூறியவற்றைத் தெளிவாக்கும். கம்பநாடனுடைய இராமாயணத்தில் கூறப்பெறும் செய்திகள் அனைத்தும் மெய்ம்மை அன்று; ஆனால் உண்மை.

> நதியின் பிழையன்று நறும்புனல் இன்மை; அற்றே
> பதியின் பிழையன்று! பயந்து நமைப்புரந்தாள்
> மதியின் பிழையன்று! மகன்பிழை அன்று! மைந்த!
> விதியின் பிழை! நீ இதற்கென்னை வெகுண்டது?
> என்றான்[5]

என்ற கவிதையிலுள்ள வாழ்க்கையின் உண்மையை உணர்ந்தால் கவிதை வாழ்க்கையைத்தான் கூறுகின்றது என்பது தெளிவாகும். வாழ்க்கையில் நாம் காணமுடியாத உண்மைகளை யெல்லாம் கவிஞன் காண்கின்றான்; அவற்றைத் தக்க முறையில் காட்டி நம்மையும் காணச் செய்கின்றான்; உணரவைத்து விடுகின்றான். நம்முடைய புலன்கட்கு எட்டாதனவற்றையும் எட்டும்படி செய்து விடுகின்றான் அவன்.

இன்னோர் எடுத்துக்காட்டைக் காண்போம். மூலபலம் இலங்கையில் வந்து திரளுகின்றது; எல்லாத் திக்குகளிலிருந்தும் எண்ணற்ற அரக்கர்கள் வந்து சேர்கின்றனர். வந்த சேனையின் அளவைக் கணக்கிட்டுக் கூறும்படி கேட்க, அதற்குத் தூதுவர். 'இச் சேனையின் அளவு ஆயிரம் வெள்ளம் என் உரைப்பர்

4 'Poetry is made out of life, belongs to life, exists for life'-- **Hudson:** *An Introduction to the Study of Literature p 92*

5 அயோ. நகர் நீங்கு -129

பித்தர்; கணித நூலிலுள்ள உச்ச எண்ணே இதனை அளவிட்டுரைத்தற்குச் சாலாது' என்று பதிலிறுக்கின்றனர். 'வெள்ளம்' என்ற அளவினை முதலில் நாம் அறிந்து கொள்ளவேண்டும். தொன்றுதொட்டு வழங்கிய தமிழெண்களையும் இடைக்காலத்தில் வந்து புகுந்த வடமொழி எண்களையும் பிங்கலந்தை என்ற நிகண்டு நூல் பின்வருமாறு வகைப்படுத்தித் தொகுத்துரைக்கும்.

"ஏகம் எண்மடங்கு கொண்டது கோடி"
"கோடி எண்மடங்கு கொண்டது சங்கம்."
"சங்கம் எண்மடங்கு கொண்டது விந்தம்"
"விந்தம் எண்மடங்கு கொண்டது குமுதம்."
"குமுதம் எண்மடங்கு கொண்டது பதுமம்."
"பதுமம் எண்மடங்கு கொண்டது நாடு."
"நாடெண் மடங்கு கொண்டது சமுத்திரம்."
"சமுத்திரம் எண்மடங்கு கொண்டது வெள்ளம்."

இம் முறைப்படி நோக்கினால் எட்டாந் தானத்தது கோடி, பதினைந்தாம் தானத்தது சங்கம், இருபத்திரண்டாந் தானத்தது விந்தம், இருபத்தொன்பதாந் தானத்தது குமுதம் (ஆம்பல்), முப்பத்தாறாந் தானத்தது பதுமம் (தாமரை), நாற்பத்து மூன்றாந் தானத்தது நாடு (குவளை), ஐம்பதாந் தானத்தது சமுத்திரம் (நெய்தல்), ஐம்பத்தேழாந் தானத்தது வெள்ளம் என்பன புலனாகும். இந்தக் கணித எண்ணை மனத்தால் அறிந்து பார்ப்பது எளிதன்று. கணித உண்மை நம் சிந்தனையை எட்டமுடியவில்லை. ஆனால், இந்தச் சேனையின் அளவைக் 'கவிதை உண்மை'யால் காண்போம். மூலபலம் முழுவதும் ஏழரை நாழிகைக்குள் இராமன் கணைகளால் அழிந்து படுகின்றது. இதனைக் கம்பநாடன்,

ஆனை ஆயிரம் தேர்பதி னாயிரம்
அடல்பரி ஒருகோடி,
சேனை காவலர் ஆயிரம் பேர்படின்,
கவந்தமொன் றெழுந்தாடும்;
தானம் ஆயிரம் கவந்தம்நின் றாடிடின்,
கவின்மணி கணில் என்னும்;
ஏனை அம்மணி ஏழரை நாழிகை
ஆடியது இனிதன்றே[6]

6. மூலபலவதைப்-செய். 215.

என்று கூறுவான். 'ஆயிரம் யானைகள், பதினாயிரம் தேர்கள், ஒரு கோடி குதிரைகள், ஆயிரம் சேனைக் காவலர்கள் இறந்து பட்டால், தலையில்லாத பேய்(கவந்தம்) ஒன்று எழுந்து ஆடுமாம். ஆயிரம் கவந்தங்கள் ஆடினால் இராமனது கோதண்டத்தில் கட்டிய அழகிய மணி ஒருமுறை 'கணீல்'என்று ஒலிக்குமாம். ஆனால், இராமனது மூலபலவதைப் போரில் அம்மணி தொடர்ந்து, தீயணைக்கும் படையினர் செல்லும் மோட்டார் வண்டியில் ஒலிக்கும் மணிபோல், ஏழரை நாழிகை ஒழித்ததாம். கவிஞன் கூறும் இந்த உண்மையைக் கொண்டு அழிந்துபட்ட மூலபலச் சேனையின் அளவினை ஓரளவு நம் மனத் திரையில் அமைத்துக் கொள்ள முடிகின்றது. மூலபலத்தின் அளவை நாம் நன்கு உணர்ந்து கொள்ளுகின்றோம். கணித உண்மையைவிடக் கவிஞன் கூறும் உண்மை இதற்கு நன்கு பயன்படுகின்றது. இதிலிருந்து கவிதை யுண்மையின் தன்மையை ஒருவாறு நாம் புரிந்துகொள்ளலாம். மெய்ம்மைகளை (Facts) அப்படியே கூறுவது கவிதையுண்மை யன்று; மெய்ம்மைகளைத் திரித்துக் கூறுவதும் அஃதன்று. மெய்ம்மைகளை அப்படியே கூறுவது அறிவியல்; அவற்றைத் திரித்துக் கூறுவது பொய்ம்மை; புனைந்துரை. ஆனால் கவிதையுண்மை என்பது மெய்ம்மைகளை உணர்ச்சியுடன் உணரச் செய்வது; அது நம் உள்ளத்தில் இன்ப உணர்ச்சியையோ, துன்ப உணர்ச்சியையோ நம்பிக்கையையோ அச்சத்தையோ, வியப்பினையோ சமய ஈடுபாட்டையோ எழுப்பவல்லது. எனவே, கவிதையுண்மை என்பது பொருள்களை இருந்தபடியே எடுத்துரைப்பதன்று; அவற்றின் அழகையும் மர்மத்தையும், அவற்றின்கவர்ச்சியையும் அவை நமக்குப் பொருள் விளக்கம் தரும் முறையினையும் எடுத்துரைப்பதாகும்[7]. சுருங்கக்கூறினால், கவிதையுண்மை என்பது கற்பனை மூலமும் உணர்ச்சிகளின் மூலமும் நம் வாழ்க்கையின் உண்மையை எடுத்துரைப்பதாகும். வாழ்க்கையிலும் மனிதப் பண்பிலும் உள்ள பொதுத்தன்மையை எடுத்துக் கூறுவதே கவிதையின் நோக்கமாகும்.

**வாழ்க்கை யுண்மைகள்:** வாழ்க்கை என்பது நிலைபேறுடையது; மனித இனம் இவ்வுலகில் உள்ளவரைத் தொடர்ந்து நடைபெறுவது. வாழ்க்கையில் இன்பங்களும் உள்ளன; துன்பங்களும் நிறைந்திருக்கின்றன; அல்லல்களும் தொல்லைகளும் காணப்பெறுகின்றன. ஆன்மாவைக் கொல்லும் பாவம் என்ற புற்றுநோய் அங்கு உண்டு; ஆழங் காணமுடியாத காதல் அங்குக் காணப்படும். வாழ்வை வளமாக்கும் நம்பிக்கை, புகழ் மணக்கச் செய்யும் துணிச்சல் போன்ற பண்புகள் அதில் இடம் பெறும். இத்

7. Hudson, W. H: *An Introduction to the Study or Literature* p 79

தனையும் பல படங்கள் போல் கவிந்துள்ள வாழ்க்கை நம்மைக் கவர்கின்றது; ஆனால், என்றுமே நமக்கு மன நிறைவினைத் தருவதில்லை. இத்தகைய வாழ்க்கையைப் பற்றிய உண்மையைத் தான் கவிதை எடுத்துரைக்கின்றது. இந்த வாழ்க்கையைப்பற்றித் தான் மாபெருங் கவிஞர்கள் பலபடக் கூறியுள்ளனர். இவர்கள் வாழ்க்கையின் கூறுகள் யாவற்றையும் ஆழ்ந்து காண வல்லவர் கள்; வாழ்க்கையின் பல்வேறு உண்மைகளை நாம் உணரும் வண்ணம் விளக்க வல்ல ஆற்றல் பெற்றவர்கள். சிலப்பதிகாரம், மணிமேகலை, சீவகசிந்தாமணி, கம்பராமாயணம், பெரிய புராணம் போன்ற காவியங்களைப் படித்தால் இவ்வுண்மை தெளிவாகப் புலனாகும். பல நூற்றாண்டுகள் கழிந்த பிறகும் அவை நமக்குப் பல வாழ்க்கை யுண்மைகளை எடுத்துரைத்துக்கொண்டே யுள்ளன. கதிரியக்கப் பொருள்களிலிருந்து கதிர்கள் வெளிவரு வதைப்போல் பல உண்மைகள் அவற்றிடமிருந்து மானிட சமூகத் திற்கு வந்து கொண்டேயுள்ளன.

"அரசியல் பிழைத்தோர்க்கு அறங்கூற்று ஆவதூம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும் என்பதூஉம்
சூழ்வினைச் சிலம்பு காரண மாகத்"[8]

தோன்றிய வாழ்க்கை உண்மைகள் மன்பதைக்குக் கிடைத்த உண்மைகள். சிலப்பதிகாரம் இவற்றை எடுத்துரைக்கின்றது. ஏனைய காவியங்களிலும் இத்தகைய பல வாழ்க்கை யுண்மை களைக் காணலாம். இவை மன்பதை என்றும் மறவாமல் நினை வில் இருத்தவேண்டிய உண்மைகள்.

காவிய மாந்தர்கள் சில உண்மைகளின் பிரதிநிதிகள்: அங்ஙனமே, காவியங்களில் காணும் காவிய மாந்தர்கள் சிலரை என்றுமே நாம் மறக்க முடியாது. 'இராமன் பின்புப் பிறந்தானும் உளன் என்னப் பிரியாத', சேவையே உருவாகக் கொண்ட இலக்குவன், 'எண்ணில் கோடி இராமர்கட்கும் ஈடு இல்லாத பரதன்', சொல்லின் செல்வனாகிய அநுமன், வாலி, அங்கதன் தாரை போன்றவர்களை நாம் என்றுமே மறக்க முடியாது. அரக்கர்களிலும் 'வில்லாளர் ஆனார்க் கெல்லாம் மேலான மேகநாதன்', கும்பகருணன், இராவணன், சூர்ப்பணகை, மாரீசன் போன்றவர்களும் நம் மனத்தை விட்டு என்றும் அகலார். பாரதத் திலும் வீடுமன், விதுரன், தருமன், அருச்சுனன், வீமன் போன்ற

8. சிலப்பதிகாரம் - பதிகம். வரி (55-58)

வர்களை நாம் மறக்கவே முடியாது. துரியோதனன், 'தீமையில் 'அண்ணனையே வென்ற' துச்சாதனன், கன்னன், அசுவத்தாமன், அபிமன்யு, கடோற்கசன் போன்றவர்களும் வாழ்க்கையின் ஒவ்வோர் உண்மைகட்கும் பிரதிநிதிகள் போன்றிருப்பவர்கள். மானிட வாழ்க்கையில் பெரு நம்பிக்கை கொண்ட கவிஞர் கள் இத்தகைய மாந்தர்களைப் படைத்து நமக்குப் பல குறிக்கோள் பொருள்களை உணரச் செய்கின்றனர். சென்ற நூற்றாண்டிலிருந்து விரைவாக ஏற்பட்ட அறிவியலின் வளர்ச்சி இந்த நம்பிக்கையைக் குலைத்து விட்டது என்று சிலர் கருது கின்றனர்; அதில் ஓரளவு உண்மை இல்லாமல் இல்லை. எனினும், ஐன்ஸ்டைன் போன்ற அறிவியல் மேதைகளிடம் இந் நம்பிக்கை இன்னும் ஆழமாகப் பதிந்து இருப்பதையும் நாம் காணாமல் இல்லை. அறிவு வேண்டுமானால் நாம் அறிவிய லறிஞர்களை நாடவேண்டும்; தத்துவ அறிஞர்களிடம் போக வேண்டும்; சமயாச்சாரியார்களை அடைதல்வேண்டும். ஆனால், வாழ்க்கையின் உண்மைகளை உணர வேண்டுமாயின், கம்பன், சேக்கிழார், திருத்தக்கதேவர், இளங்கோ போன்ற கவிஞர் களைத்தான் அணுகுதல் வேண்டும். அவர்கள் தாம் வாழ்க்கையைப் பற்றிய திரிபற்ற காட்சிகளைக் காட்டுபவர்கள்; பொய்த் தோற்றங்களை மாற்றி மெய்த் தோற்றங்களாகக் காணச் செய் பவர்கள்; அஞ்ஞானத் திரையை அகற்றி மெய்ஞ்ஞானத்தைக் காட்டுபவர்கள்.

எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.[9]

என்ற வள்ளுவத்திற் கேற்ப உண்மை நிலையை உரைப்பவர்கள்; உணரவைப்பவர்கள். எதைச் சொன்னாலும் அழகு ததும்பக் கூறுபவர்கள். இவர்கள் 'இல்லது இனியது நல்லது' என்று ஆன்றோர்களால் நாட்டப்பெற்றவற்றை மனங் கவரும் வண்ணம் செஞ் சொற்களால் எடுத்தோதுபவர்கள்.

**எது உண்மையான குறிக்கோள்:** மேற்கூறியவற்றை ஆசிரியர் நன்குணர்ந்து கவிதையை அணுகுதல் வேண்டும்; கவிதையைக் கற்பிக்கவேண்டும். பெரும்பாலும் ஆசிரியர்கள் உரைநடை உலகி லேயே வாழ்கின்றனர். தம்மைச் சிறந்த அநுபவமிக்கவர்களாகக் கருதுகின்றனர்; கவிதையில் சிறப்பொன்றுமில்லை என்று இவர் கள் எண்ணுகின்றனர். இளமையில் தாம் கவிதையின்பால்

9. குறள் - 356

கொண்ட உற்சாகத்தையும், வாழ்க்கையில் தாம் கொண்ட குறிக்கோள்களையும் மறக்கின்றனர்; நாளடைவில் அவை "பொய்யாய்ப் பழங்கதையாய் மெல்ல மெல்லப்' போய்விடு கின்றன. யாராவது இளம் ஆசிரியர்கள் கவிதையை உற்சாகத் துடன் மேற்கொண்டு கற்பித்தாலும், 'நாங்களும் இளமையில் இப்படித்தான் இருந்தோம்; எங்களிடமும் இக் குறிக்கோள்கள் இருக்கத்தான் செய்தன' என்று 'கிண்டல்' செய்யும் மனப்பான் மையை அவர்களிடம் காண்கின்றோம். இத்தகைய மனப்பான் மையைக் கொண்ட ஓர் ஆசிரியரை நாம் என்ன சொல்வது? அவர் தம்முடைய தோல்வியை வெளிப்படையாக ஒப்புக் கொள்ளு கின்றார் என்றுதான் சொல்ல வேண்டும். காலத் தேர்வுக்கு நிலைத்து நிற்காதவற்றை, எட்டுச் சுரைக்காய் போன்றவற்றை எங்ஙனம் 'குறிக்கோள்கள்' என்று உரைப்பது? அவர் குறிக் கோள்களாகக் கருதுபவை யாவும் வெறும் கானல் நீர்; பொய்த் தோற்றம். உண்மையான காதல் சோதனை அலுப்பைத் தரு கின்ற, இடுக்கண்களும் இக்கட்டுகளும் நிறைந்த, வாழ்க்கையில் தான் உள்ளது. உண்மையான ஆசிரியர் கவிதையைப் படிப்பதில் தாம் இன்பத்தை நுகர்வதைப் போலவே, தம்முடைய பல்வேறு அலுப்பைத் தருகின்ற வேலையின் விவரங்களில்தான் காண்கின் றார். மாணாக்கர்கள் எழுதும் கட்டுரைகளைப் 'பக்தி சிரத்தை' யுடன் திருத்தி அவற்றிலுள்ள பிழைகளையெல்லாம் திரட்டி, வகைப்படுத்தி, அவற்றை வகுப்பில் எடுத்துக்காட்டி அவற்றைக் களையும் முறைகளைக் காண்பதில் அவர் எல்லையற்ற மகிழ்ச்சியை அடைகின்றார்.

இவ்விடத்தில் இளம் ஆசிரியர்கள் ஒன்றை நினைவில் வைத்தல் வேண்டும். வாழ்க்கையையோ தாம் மேற்கொண்ட வேலை யையோ உற்சாகத்துடன் தொடங்குவது எளிது; ஆனால், வாழ்க் கையின் ஓட்டம் நீண்டது; மிக நீண்டது. பெரும்பாலோர் உற்சா கத்துடன்தான் தாம் மேற்கொண்ட துறையினைத் தொடங்குகின் றனர். சிலர் விரைவில் தளர்ச்சியுற்றுப் பின் தங்குகின்றனர். வேறு சிலர் சில யாண்டுகள் வரை ஒரு மாதிரியாகத் 'தள்ளிச்' செல்லு கின்றனர். ஒருசிலர் தாம் இறுதிவரையிலும் வெற்றியுடன் கொண்டு செலுத்துகின்றனர். இளம் ஆசிரியர்களின் உற்சாகத்தைக் கண்டு கிண்டல் செய்தவர்கள் வாழ்க்கையோட்டத்தில் முதலிலேயே பின் தங்கினவர்களாவர். என்றுமே உரைநடை வாழ்க்கையில் ஆழ்ந்திருப்பவர்கள், இளஞாயிறு எழுகின்ற காட்சியிலும் தண் மதியம் தவழ்ந்து ஓடும் காட்சியிலும் தம் உள்ளத்தைப் பறி கொடுக்காதவர்கள். கவிதையை யாங்ஙனம் பயிற்றல் முடியும்? ஆசிரியர் வாழ்க்கையில், கற்பித்தல் துறையில் ஒருவருடைய

குறிக்கோள் பலவிதமாகச் சோதிக்கப்பெறுகின்றது. இச் சோதனையிலிருந்து வெற்றியுடன் வெளிப்படுகின்றவர்களே உண்மையான ஆசிரியர்களாவர்; அவர்கள் குறிக்கோள் மாற லாம்; புதிய வடிவெடுக்கலாம். வாழ்க்கை என்பது மாற்றந் தானே? அது வளர்ந்து, துலக்கமடைந்து பயன் விளைவித்தால் தான் மாற்றம் அடைந்தது என்று கொள்ளுவதே சிறப்பு.

**சில ஆசிரியர்களின் தவறான முறை:** கவிதை பயிற்றும் சில ஆசிரியர்கள் கவிதையின் அழகைச் சுவைக்காமல், அதிலுள்ள உணர்ச்சியிலும் மெய்ப்பாட்டிலும் ஈடுபடாமல் அது கூறும் கருத்திலும் வடிவத்திலும், வேறு இலக்கணக் குறிப்புகளிலும் அதிகக் கவனம் செலுத்துகின்றனர். இவர்கள் கவிதைமங்கை யிடம் "உண்மைக் காதல்' செலுத்தாதவர்கள். ஓர் அழகிய மங்கையை ஒரு வழிப்பறிக்காரன் குலைத்து அவள் அணிகலன் கள், ஆடைகள் முதலியவற்றைப் பறிப்பதுபோல், பாடலைப் பலவிதமாகச் சிதைத்துப் பாடல் கூறும் பொருளைப் பிழிகின் றனர். அதிலுள்ள அணிகள், பிற நலன்கள் ஆகியவற்றைக் களைந்து இன்பங் காண்கின்றனர். ஆனால் மாணாக்கர்கள் கவி தையில் சிறிதும் இன்பம் எய்துவதில்லை. மேற்கூறிய ஆசிரியரின் செயல்களால் அவர்களிடம் இயல்பாக அரும்பிக் கிடக்கும் கவிதை யுணர்ச்சியும் ஆர்வமும் வேரிலேயே சிதைக்கப்பெறுகின்றன. ஜார்ஜ் சாம்ஸன் என்பார் பொதுவாக இலக்கியத்திற்குக் கூறும் கூற்று கவிதைக்கும் முற்றிலும் பொருந்தும், "இலக்கிய மங்கை பள்ளி ஆசிரியர்கள் கையிலும் தேர்வாளர்களின் கையிலும் சிக்குவது அவளது போதாக் காலமே; அவளது அழகையும் பொலிவையும்விட அவள் தரும் சீதனத்தையே முக்கியமாகக் கருதும் பேர்வழிகள் அவர்கள்"[10] என்று அவர் கூறுவர். இதைக் கவிதை கற்பிக்கும் ஆசிரியர்கள் நன்கு உணர்ந்து தம் குறையுள்ள முறையை மாற்றிக்கொள்ளவேண்டும். பாடலை அறியச்செய் வதைவிட அநுபவிக்கச்செய்வதே—உணரச்செய்வதே—மிகவும் விரும்பப்பெறுவது என்பதை உணரவேண்டும்.

**கல்வியின் பொருள்:** 'கல்வி' என்பதன் பொருளைச் சரியாக உணர்ந்தால், அதைப்போல் புனிதமான துறை வேறொன்றும் இல்லை என்பது தெரிய வரும். ஆண்டவன் படைப்பில் ஆற்றி வுடன் பிறக்கும் தெய்வ உருவங்கள் போன்ற சிறார்களுக்குக்

10 "It is the sorry fate of literature tc fall into the hands of school masters and examiners who care for here dowry more than for her charms'-*Literature in the Clas Room* by George Sampson.

கல்வி கற்பிப்பதைவிட—ஞானக்கண் திறந்து வைப்பதைவிட—புனிதமான செயல் வேறென்ன இருக்கமுடியும்? ஆனால், இதை நம்பிக்கையற்ற முறையில் மிக முக்கியமானதொன்றாக மேற்கொண்டால், பள்ளியில் மகிழ்ச்சி தரும் சூழ்நிலையை நிலவச் செய்ய முடியுமா? அவலநிலையான சூழ்நிலையையன்றோ உண்டாக்கிவிடும்? இதற்குக் காரணம் என்ன? உண்மையான 'சமயம்' வாழ்க்கையின் நல்ல கூறுகளில்தான் வாழும். இன்ப நிலையிலும் துன்பநிலையிலும், நகையிலும் அழுகையிலும், பெரிய விஷயங்களிலும் சிறிய விஷயங்களிலும் சமயம் இல்லையெனின், அஃது அதன் தளர்ச்சியைத்தான் காட்டுகின்றது. சிறுவர்களின் மகிழ்ச்சியான எக்களிப்பைக் குலைக்கக்கூடிய சமயமாயிருப்பின் அது கடியப்பெறக்கூடியதொன்று. அங்ஙனமே நம்முடைய கற்பித்தலும் மாணாக்கர்களின் மகிழ்ச்சியைக் குலைப்பதாயிருப்பின், அதையும் புறக்கணிக்கப்படுவதொன்றாகவே கருதவேண்டும். ஆசிரியர் தம்முடைய பணியில் ஒரு குறிக்கோளைக் கொண்டால் தாம் மேற்கொண்ட வேலையில் மகிழ்ச்சியைக் கண்டால், மாணாக்கர்களும் அதனைக் காண்பர் என்பது ஒருதலை. நல்ல மனநிலை இல்லாவிடில், சரியான மனப்போக்கு ஆசிரியரிடம் அமையாவிடில், அவர் செய்யும் பணி முழுவதும் பாழாம். கவிதை பயிற்றலிலும் இத்தகையதொரு மனப்பான்மை நிலவவேண்டுமென்பதே இந் நூலாசிரியரின் விருப்பம்; நோக்கம். உண்மையான சில தமிழாசிரியர்களிடம் இவ்வித மனப்போக்கைக் காணலாம். உண்மையான சமயப்பற்றுள்ளவர்களிடம் எங்ஙனம் உண்மையான சமயவாழ்க்கை அமைகின்றதோ, அங்ஙனமே உண்மையான தமிழாசிரியரிடம் கவிதையுண்மை நிலவுகின்றது. கவிதையுண்மையிலுள்ள நம்பிக்கை அவர்களை ஆராய்ச்சியில் உய்ப்பதில்லை; அநுபவத்தில் கொண்டு செலுத்துகின்றது. அவர்கள் கவிதையில் உண்மையையும் அழகையுமே காண்பர். கவிதையைப் படிக்கும்பொழுது எல்லையற்ற இன்பத்தை அடைவர். கவிதையைப்பற்றிய நம்முடைய நம்பிக்கையில் ஐயம் எழுமாயின், அதைப்பற்றி ஆராய்வதில் பயனில்லை. நம்முடைய நம்பிக்கை வாதத்தின்மீது கட்டப்பெற்றதன்று; அஃது அநுபவத்தின்மீது எழுந்ததாகும். அந்த நம்பிக்கைக் குலைவினைப் போக்கவேண்டுமானால், மேலும் கவிதையைப் படிக்கவேண்டும். கம்பனை நாம் விரும்பினால், நேரடியாகக் கம்பனில் நுழைந்துவிடவேண்டும்; அவன் கவிதையில் திளைக்க வேண்டும். கம்பனைப்பற்றிய ஆராய்ச்சி நூல்களைப் படிப்பதால், கவிதையை அநுபவிக்க முடியாது. செயங்கொண்டாரையோ சேக்கிழாரையோ, திருத்தக்க தேவரையோ நாம் பார்க்க வேண்டுமானால், நேரடியாக அவர்களுடைய கலைக்கோவில்களில் புகுந்துவிடவேண்டும். அவர்கள்

அமைத்த சொற்கோவில்களில்தான் பல அற்புதக் காட்சிகளைக் காணமுடியும். ஆசிரியர்களிடம் 'கவிதையநுபவம்' அமைந்தால் தான் மாணாக்கர்களிடமும் அது நன்கு அமையும். கல்வியாளர்கள் இந்த உண்மையை நன்கு உணர வேண்டும். ஒரு நாட்டின் உயர்வையும், தாழ்வையும் அந்நாட்டில் நிலவும் மொழியிலமைந்த கவிதைகளின் அளவினைக்கொண்டே அளவிடலாம் என்று ஒரு பேரறிஞர் கூறியுள்ளதை ஈண்டு நாம் சிந்தித்துப் பார்ப்போமாக

**அழகின் மூலமே உண்மையைப் பெறுதல்:** ஏனைய கலைகளைப் போலவே, கவிதையிலும் அழகின் மூலமாகவே உண்மையை நாடவேண்டும் என்று முன்னோர் இயலில் கூறினோமன்றோ[11]?, ஒரு கவிதையின் அழகை நாம் துய்க்க முடியாவிட்டால் அது காட்டும் உண்மையும் நமக்குப் புலனாகாது. எனவே குழந்தை கவிதையை இயல்பான முறையில் அணுகுவதே சரியான முறையாகும். சிறுவயதில் குழந்தை தோட்டத்தில் அழகில் நாட்டமின்றியே மலர்களைக் கொய்வதுபோலவே, அது பாடல்களைப் படித்தல் வேண்டும். நாளடைவில் சிறுகச் சிறுகக் கவிதையிலுள்ள அழகு அதற்குத் தட்டுப்படும். கவிதையின் அழகைக் குழந்தை நுகரத் தொடங்கும் நிலையில் கவிதையின் உண்மையைச் சிறிது சிறிதாகக் காணச் செய்யலாம். அழகும் உண்மையும் அநுபவத்தால்தான் பெறக்கூடியவை. ஒரு குழந்தை கனவு நிலையில்தான் கவிதையை அநுபவிக்கக் கூடும் என்றிருந்தால், அது கனவில் திளைக்கட்டும் என்று விட்டுவிடவேண்டும். அதற்கு வாய்ப்புகளும் தருதல் வேண்டும். தொடக்க நிலையில் எந்தப் புதிய பாடத்திற்கும் தனிக் கவனம் தேவை என்பதை நாம் அறிவோம்; இது எல்லோருக்கும் ஒப்ப முடிந்ததோர் உண்மை. அன்றியும், முதல் ஏற்பாடுகள் கவனத்துடனும் செய்யப்பெறுதல் வேண்டும். இல்லாவிட்டால் அவை தவறான நெறியில் கொண்டுய்ப்பதுடன், தவறாகக் கற்கும் பழக்கங்களையும் உண்டாக்கி விடுகின்றன. நற் பழக்கங்கள் அமையவேண்டுமாயின், இவை முதலில் மறக்கப்பெறல் வேண்டும். எனவே, தொடக்க நிலைப் பள்ளிகளில் குழந்தைகட்குத் தனிக்கவனம் மிகவும் இன்றியமையாதது என்றாகின்றது. இன்றைய நிலையில், குழந்தைகளை ஆட்டுமந்தையைப்போல் அடைத்துவைத்திருக்கும் நிலையில், தனிக் கவனம் எங்ஙனம் சாத்தியப்படும்? தவிர, இச் சூழ்நிலையில் 'உண்மை அழகில்தான் காணப்பெறும்' என்று சொல்வது அரிது. மேலும், அங்குப் பணியாற்றும் ஆசிரியர்களின் அறிவுநிலை

11. கவிதையநுபவம் (முதற்பதிப்பு)-பக்கம் 265.

யும், பொதுத் தகுதியும், இலக்கியப் பயிற்சியும் போதா. எனவே, உயர்நிலைப் பள்ளிகளில்தான் கவிதை யுண்மையை வற்புறுத்த வேண்டும். உயர்நிலைப் பள்ளிகளிலும் அத்தகைய சூழ்நிலை சரியாக அமைவதில்லை. சில யாண்டுகளாக அவசரமாக நிறுவப் பெற்ற பள்ளிகளில் கட்டடம், இருக்கை வசதிகள் முதலியவை இன்னும் சரியாக அமையவில்லை. அழுக்குப்படிந்த அறைகள், ஒழுக்குள்ள கூரைகள், புழுதிபடிந்த தரைகள், உடைந்த பெஞ்சுகள், இங்கொன்றும் அங்கொன்றுமாக அமைந்த வகுப்பறைகள் —இச்சூழ்நிலையில் ஆசிரியர்கள் அழகைப்பற்றி எங்ஙனம் வற்புறுத்த முடியும்? அன்றியும், நம் நாட்டில் ஏழைக் குழந்தைகள் அதிகம். அதிலும் நாட்டுப்புறங்களில் கிழிந்த ஆடையுடனும், உடைந்த கற்பலகையுடனும், எண்ணெயே காணாத தலையுடனும் பள்ளிக்குவருகின்றவர்கள் எத்தனைபேர்? பாநலம் வியத்தல் என்ற எண்ணத்தை இவர்களிடம் எங்ஙனம் வளர்ப்பது? இங்குத் தான்ஆசிரியரின் பணி சிறக்கவேண்டும். இதற்குப் 'பாதிரிமாரின்' மனப்பான்மை வேண்டும். நம் நாட்டுத் தொண்டர்களிடம் இம் மனப்பான்மை இன்னும் சரியாக அமையவில்லை. புறக்கூறுகளை மறந்துவிட்டு, இக்குழந்தைகளிடம் சரியான முறையில் கவிதைகளைக் கற்பித்தால், அவர்கள் முகம் மலர்ச்சி பெறுவதை காணலாம்! கண்களில் புத்தொளி வீசுவதைப் பார்க்கலாம். இதுவே கவிதை கற்பிக்கும் ஆசிரியரின் உண்மையான பணி; அருட்பணி. இத்தகைய பிற்போக்கான குழவிகட்குப் பல்வேறு வாய்ப்புகள் கிடைப்பதில்லை. நல்லாசிரியர் வாய்ப்பதும் இத்தகைய வாய்ப்புகளில் ஒன்று. சிறந்த ஆசிரியரின் ஆளுமையே அவர்கள் வாழ்வை வளமாக்கவேண்டும். அருட்பணி புரியும் ஆசிரியர்களை ஒரு நாளும் மறக்கவே மாட்டார்கள் அவர்கள்.

**இயற்கையில் தோய்ந்து கிடக்கும் அழகு:** இயற்கையில் அழகு தோய்ந்து கிடக்கின்றது; அது யாண்டும் நீக்கமற நிறைந்து கிடக்கின்றது. கைபுனைந் தியற்றா இயற்கையழகில் கருத்தைச் செலுத்திய ஒருவர் அதனுடன் புணரும்தோறும் புணருந்தொறும் அவருள்ளத்துள் சொலற்கரிய இன்பம் கிளர்ந்தெழுவதை அறியலாம். இந்த அழகிய உலகினை அண்ணாந்து நோக்கினால், கீழும் மேலும், சுற்றும் முற்றும், எங்கும் அழகு சொரிந்து கொண்டிருப்பதைக் காணலாம். "அழகிய நீலப்படாத்தின் விரிவில் நித்திலந் தூவினாலென வானத்தினூருஞ் செவ்விய அழகை என்னென்று வருணிப்பது? ஞாயிற்றின் ஒளியை என்னென்று நவில்வது? திங்களின் நிலவை என்னென்று செப்புவது? கோள்களின் மின்னலை

என்னென்று கூறுவது? கரியகாட்டின் காட்சியை எப்படி எடுத்துக் காட்டுவது? கைநீட்டும் அலைகடலின் கவினை எங்ஙனம் கழறுவது? என்னே அண்டத்தின் அழகு! இவையெல்லாம் சேர்ந்த ஒன்றே இயற்கையன்னையின் அழகு வடிவம். அவ் வழகே அழியா அழகு. அதுவே முருகென்னும் பேரழகு''.[12] இத்தகைய இன்பத்தில் தோய்ந்த பழந்தமிழர்களின் பாடல்களே அவர்கள் கண்ட முருகன் உறையும் கோயில்களாகும். அக்கவிதைகளைப் படித்துத் துய்ப்பதே முருகனை வழிபடுவதாகும்.

**இயற்கை அழகை வருணிக்கும் பாடல்கள்:** தமிழ்மொழியில் இயற்கை அழகினை வருணிக்கும் எண்ணற்ற பாடல்கள் உள்ளன. பாரதியாரின் பாடல்கள் சிலவற்றைக் காண்போம்.

'பாரடியோ வானத்திற் புதுமை யெல்லாம்
பண்மொழி! கணந்தோறும் மாறி மாறி
ஓரடிமற் றோரடியோ டொத்த லின்றி
உவகையுற நவநவமாத் தோன்றுங் காட்சி;
யாரடிஇங் கிவைப்போலப் புவியின் மீதே
எண்ணரிய பொருள்கொடுத்தும் இயற்ற வல்லார்!
சீரடியால் பழவேத முனிவர் போற்றும்
செழுஞ்சோதி வனப்பையெலாம் சேரக்காண்பாய்.'

'கணந்தோறும் வியப்புக்கள் புதிய தோன்றும்;
கணந்தோறும் வெவ்வேறு கனவு தோன்றும்;
கணந்தோறும் நவநவமாம் களிப்புத் தோன்றும்;
கருதிடவும் சொல்லிடவும் எளிதோ? ஆங்கே.
கணந்தோறும் ஒருபுதிய வண்ணங் காட்டிக்
காளிபரா சக்திஅவள் களிக்கும் கோலம்
கணந்தோறும் அவள்பிறப்பாள் என்று மேலோர்
கருதுவதன் விளக்கத்தை இங்குக் காண்பாய்.

அடிவானத் தேயங்கு பரிதிக் கோளம்
அளப்பரிய விரைவினொடு சுழலக் காண்பாய்;
இடிவானத் தொளிமின்னல் பத்துக் கோடி
எடுத்தவற்றை ஒன்றுபட உருக்கி வார்த்து,
முடிவான வட்டத்தைக் காளி ஆங்கே,
மொய்குழலாய், சுற்றுவதன் மொய்ம்பு காணாய்!
வடிவான தொன்றாகத் தகடி ரண்டு
வட்டமுறச் சுழலுவதை வளைந்து காண்பாய்.'[13]

12. திரு. வி. க: முருகன் அல்லது அழகு பக். 17-18
13. பாஞ்சாலி சபதம்-147, 148, 149.

இவை பார்த்தன் பாஞ்சாலிக்குப் பரிதியின் எழிலைக் காட்டுவதாக அமைந்த கவிதைகளாகும். தமிழ் எழுச்சி கரைபுரண்டோடும் இக்காலத்தில்,

வளர்பிறை போல் வளர்ந்த
　　தமிழரில் அறிஞர் தங்கள்,
உளத்தையும், உலகில் ஆர்ந்த
　　வளத்தையும் எடுத்துச் சொல்லால்,
விளக்கிடும் இயல் முதிர்ந்தும்,
　　வீறுகொள் இசை யடைந்தும்
அளப்பிலா உவகை ஆடற்
　　றமிழேநீ என்றன் ஆவி.[14]

என்று பாரதிதாசன் கூறுவதுபோல், தமிழ் மக்களுக்குத் தமிழே இன்று உயிர்போல் திகழ்கின்றது. இன்று தமிழ் இனத்தை ஒன்றுபடுத்துவதற்குத் தமிழ்மொழிபோல் வேறு சிறந்ததொரு சாதனம் இல்லை எனலாம். இன்று தமிழ்மக்கள்,

"கன்னற்
பொருள் தரும் தமிழே நீஓர்
　　பூக்காடு; நானோர் தும்பி"[15]

என்று கூறித் தமிழ்க் கவிதைகளைச் சுவைக்கத் தொடங்கியுள்ளனர். இதன் விளைவாகத் தமிழ்நாட்டில் நடைபெறும் பல்வேறு இலக்கிய நிகழ்ச்சிகளில் 'கவியரங்கம்' ஒரு முக்கிய கூறாக அமைந்திருப்பதைக் காணலாம். இந்த நிலையில் தாய்மொழி யாசிரியர்கள் கவிதையிலுள்ள அழகை எடுத்துக் காட்டி, அதன் மூலம் கவிதையிலுள்ள உண்மையினை உணரச்செய்வது எவ்வளவு இன்றியமையாதது என்பதைக் கூறவா வேண்டும்?

14. அழகின் சிரிப்பு, தமிழ்-செய். 4　　15. ஷை செய் -10

இயல்-9

# கவிதையை மனப்பாடம் செய்தல்

மனப்பாடம் செய்தல் 'நெட்டுருச் செய்தல்' என்றும் வழங்கப்பெறும். கவிதை பயிற்றலில் மனப்பாடம் செய்தல் ஒரு முக்கியக் கூறு; கருத்து வேறுபாடுள்ள ஒரு துறை. சாதாரண மாகப் பள்ளிகளில் மாணாக்கர்களைப் பாடல்களை மனப்பாடம் செய்யும்படி கட்டாயப்படுத்துவதால், அவர்கள் கவிதையைக் கற்றலில் வெறுப்புக் காட்டுவது நடைமுறையில் காணும் ஓர் உண்மையாகும். இம்முறையில் கல்வி கற்று வளர்ந்தவர்களும் இன்று கவிதைளைக் காணுங்கால் 'பாலைக்கண்ட தெனாலி ராமனின் பூனைபோல்' மிரளுவதைக் காணலாம். 'செஞ்சொற் கவியின்பத்தில்' திளைக்கமுடியாமல் மிரளும் அவர்களைக் கண்டு நாம் இரங்குவதைத் தவிர வேறு என்ன செய்யமுடியும்? இந் நிலையில் பள்ளிகளிலும் கல்லூரிகளிலும் கவிதைகளை மனப் பாடம் செய்வதை எந்த அளவில் மேற்கொள்ளலாம்? எவ்வாறு அதை நடைமுறையில் வற்புறுத்தலாம்? கவிதையை நெட்டுருச் செய்வது பற்றிய உளவியல் உண்மைகள் யாவை? எத்தகைய கவிதைகளை நெட்டுருச் செய்தல் வேண்டும்? என்பன போன்ற செய்திகளை ஓரளவு ஆய்தல் ஈண்டு இன்றியமையாததா கின்றது.

**நெட்டுருச்செய்தலின் அவசியம்:** கவிதைகளை நெட்டுருச் செய்தலின் இன்றியமையாமை குறித்துப் பல காரணங்கள் கூறப்பெறுகின்றன. பொருளுணர்ந்து மனப்பாடம் செய்யப் பெற்ற பகுதிகளிலுள்ள அழகும் அவற்றைத் துய்த்தலால் வளரும் நுண்ணறிவும் என்றும் உள்ளத்தில் நிலைத்த இடத்தைப் பெறும். அவற்றிலுள்ள அறிவுரைகளும் அறவுரைகளும் அவ் வாறே நிலைத்திருந்து நம்மை நன்னெறிக்கண் உய்க்கும். 'இளமையிற் கல்வி சிலையில் எழுத்து', என்ற முதுமொழி இதனாலன்றே எழுந்தது? பல பாடல்கள் நினைவிலிருந்தால் தான் பல நூல்களிலுள்ள ஒப்புமைப் பகுதிகளை ஒப்பிட்டுப் பார்க்கமுடியும்; அவற்றின் ஏற்றத் தாழ்வுகளை, குறைவு நிறைவுகளை ஆராய்ந்து பார்த்தல் இயலும். பல பாடல்களைக் படித்து மனத்தில் அமைந்திருந்ததால்தான் டாக்டர் உ.வே. சாமி நாதய்யர் அவர்கள் பதிப்பித்த 'குறுந்தொகை' போன்ற சங்க இலக்கியங்களில் ஒவ்வொரு பாடலின் கீழும் பிற இலக்கியங்

களிலிருந்து ஒப்புமைப் பகுதிகளை நன்கு காட்டமுடிந்தது? கவிதைகளை நெட்டுருச் செய்வதால் கவிதையின் பொருள் ஓரளவு மனத்தகத்தில் அமையினும், பின்னொருகால் அதனை நினைவு கூர்தலால் புதிய பொருள் நயங்களையும் உணர்ந்து புதிய சுவைகளைக் காணமுடிகின்றதை அநுபவத்தில் அறியலாம். இன்றும் பழைய முறைப்படி கல்வி கற்ற பெரும்புலவர்கள் தாம் கற்ற பல சுவையுள்ள பகுதிகளைக் நினைவுக்குக் கொணர்ந்து தாம் மகிழ்வதுடன் நம்மையும் மகிழ்விப்பதைப்போல் இக்காலத்தில் தேர்வு எழுதியவுடன் அனைத்தையும் மறந்து தாம் உயர்ந்த முறையில் கல்வி கற்றதாக நினைத்துக்கொண்டிருப்போர் மகிழ்விக்க முடியாத நிலையைக் காண்கின்றோமன்றோ? ஒருவருடைய அறிவும் திறனும் அவர் கற்றறிந்த பொருள் மிகுதிக்கேற்ப அமைந்து விளங்கும் என்பதை எடுத்துக்கூறத் தேவை இல்லை. 'கற்றனைத்து ஊறும் அறிவு' என்பது வள்ளுவம். அவ்வாறு கற்ற பொருள் மிகவும் சிறக்கவேண்டுமாயின், நினைக்கும்பொழுது அது மனத்திற்கு வரவேண்டும்; 'கன்னன் கற்ற வித்தைபோல், நினைவுக்கு வாராதிருந்தால் யாருக்குத்தான் என்ன பயன்? பல புதிய சொற்களையும், சொற்றொடர்களையும் அருங்கருத்துக்களையும் அறிந்துகொள்ளவும், அவற்றை மனத்தில் நிலைபெற்றிருக்கச் செய்யவும் நெட்டுருச் செய்தல் துணைசெய்கின்றது. கவிதைகளின் சந்தப்பொலிவும் ஓசை நயமும் உள்ளத்தில் பதிந்து மனக் காதில் ஒலித்துக்கொண்டிருப்பதால் அத்தகைய கவிதைகளை மேலும் கற்கவேண்டும் என்ற எண்ணம் எழும். நெட்டுருச் செய்தல் புதிய கவிதைகளை இயற்றுவார்க்குப் பெருந்துணையாக இருக்கும். கட்டளைக் கலித்துறை, வெண்பா, கலிப்பா முதலிய பலபாடல்களை நெட்டுருச்செய்தும் இசையோடு படித்தும் பழகிய ஒருவருக்கு அவற்றை இயற்றுதல் சீமைக்காரைச் சாலையில், வண்டியோட்டுவது போலாகும். அங்ஙனமின்றி 'காரிகை கற்றுக் கவி பாடத்' தொடங்கினால், 'பேரிகை கொட்டிப் பிழைப்பது மேல்' என்பது தோன்றும்; அவ்வாறு கவிதை இயற்றுவோர் நாளொன்றுக்கு ஒன்று அல்லது இரண்டு கவிதைகளை யாத்தலும் அருமையாக முடியும்.

**நடைமுறையில் நெட்டுருச்செய்தல்:** கவிதைகளை மனப்பாடம் செய்வதால் பல நன்மைகள் உண்டாகின்றன என்பதை மேலே கண்டோம். மனப்பாடம் செய்வதை நடைமுறையில்

1 தமிழ்க்கடல் ராய. சொ. அவர்கள் திரு. வி. உலக ஊழியனார் அவர்கள், வேலூர் திரு எஸ். கே. இராமராசன் அவர்கள் போன்றோர் இதற்கு எடுத்துக்காட்டுகளாவர். இவ்வாசிரியர் அறியாத இன்னும் இத்தகையோர் பலர் இருக்கலாம்.

எங்ஙனம் கொண்டு செலுத்துவது? 'கவிதைகளை நெட்டுருச் செய்யவேண்டும்' என்று மாணாக்கர்களை வற்புறுத்துவது விரும்பத்தக்கதன்று; அதுவும் நாம் தேர்ந்தெடுத்த கவிதைகளை நெட்டுருச் செய்தே தீரவேண்டும் என்று வற்புறுத்துவது மிகக் கொடுமையாகும். எனவே, மாணாக்கர்கள் தாமாகவே கவிதைகளின் பொருளுணர்ந்து, அவற்றின் அழகுணர்ந்து, விருப்பத்துடன் நெட்டுருச் செய்தலே சிறந்தது. சந்த நயமும், மோனை அழகும், பொருள் தெளிவும் உள்ள கவிதைகளை இளஞ்சிறார்கள் இயல்பாகவே விரும்புவர்; நாம் சொல்லாமல் அவர்களாகவே அவற்றை நெட்டுருச் செய்துவிடுவர். ஆகவே, மாணாக்கர் விரும்பும் பகுதிகளை மட்டிலும் நெட்டுருச் செய்தால் போதுமானது.

பள்ளி யிறுதித் தேர்விற்குரிய பகுதிகளில் நெட்டுருச் செய்வதற்கென ஒதுக்கப்பெற்றுள்ள பகுதிகளைப்போல் உயர்நிலை பள்ளிகளிலும் தொடக்கநிலைப் பள்ளிகளிலும் பயிலும் மாணாக்கர்கட்கும் சில கவிதைப் பகுதிகளைத் தேர்ந்தெடுத்து அவற்றை மனப்பாடம் செய்தல்வேண்டும் என்று வற்புறுத்துதல் சரியன்று. வெளியார் நடத்தும் தேர்வாதலின் அவ் வகுப்பிற்கு அவ்வாறு செய்யப்பெற்றுள்ளது; பள்ளிகளே நடத்தும் தேர்வுகளில் அம்மாதிரி ஆசிரியர் விரும்பும் பகுதிகளை நெட்டுருச் செய்யும்படி வற்புறுத்துதல் விரும்பத்தக்கதன்று. தேர்வுமுறைகளை மாற்றியமைத்துக்கொள்ள வேண்டுமேயன்றி, தேர்வுமுறைகளுக் கேற்றவாறு பகுதிகளைத் தேர்ந்தெடுத்தல் சிறிதும் பொருத்தம் அன்று. அது குல்லாய்க்கேற்ற தலையை அமைத்தல் போன்றது. மாணாக்கர்கள் தாம் கற்கும் கவிதைப் பகுதிகளில் நல்லனவற்றை மட்டிலும் தாம் விரும்பும் அல்லது தம் மனத்தைக் கவரும் பகுதிகளைமட்டிலும் நெட்டுருச்செய்தால் போதுமானது. ஆசிரியர் தாம் கற்பிக்கும் பகுதிகளிலுள்ள பல்வேறு சுவைகளை எடுத்துக்காட்டினால், மாணாக்கர்களே தாம் நெட்டுருச் செய்ய வேண்டிய பகுதிகளைத் தேர்ந்தெடுத்துக் கொள்வர். நமக்கு எல்லாப் பகுதிகளும் பிடிக்கின்றனவா? அதுபோலத்தானே மாணாக்கர்கட்கும் இருக்கும்? நெட்டுருச் செய்யவேண்டிய பகுதிகள் வெறுப்பும் சலிப்பும் தராமல் விருப்பும் பற்றும் ஊட்டக் கூடியனவாக இருந்தால், மாணாக்கர்களைக் கட்டாயப்படுத்தத் தேவை இல்லை; அவசியமும் இல்லை. குருட்டுத்தனமாக நெட்டுருச் செய்வதால் பயன் ஒன்றும் விளையாது; பொருள் தெளிவுடன் மனப்பாடம் செய்தால்தான் அப்பகுதிகள் மாணாக்கரின் மனத்தில் நிலைத்த இடம்பெறும். முழுப்பகுதிகளாக நெட்டுருச்

செய்தல் சிறந்தது; நீண்ட பகுதியாக இருந்தால், அதைக் கருத்து முற்றுப்பெற்ற சிறுசிறு பகுதிகளாகப் பிரித்துக்கொண்டு நெட்டுருச் செய்ய வழி காட்டலாம்.

**உளவியல் உண்மைகள்:** மனப்பாடம் செய்வதில் நினைவுச் செயல் பங்கு கொள்ளுகின்றது. கற்றலின் பயன் நிலைக்க வேண்டுமாயின், கற்றது நினைவிற்கு வரவேண்டும். முன்னர் நடந்தேறிய நிகழ்ச்சிகள்பற்றிய அநுபவத்தைப் பின்னர் வேண்டுமிடத்து அறிவதே நினைவு என்பது. நினைவின்றேல் கற்றலால் யாதொரு பயனும் இல்லை. கற்றலைத் **தூண்டலின்**[2] **துலங்கல்**[3] என்பர் உளவியலார். துலங்கல்கள் மூளையில் சுவடுகளை விடுகின்றன. இவையே நினைவின் அடிப்படை. நம் அநுபவம் ஒன்றும் மனத்தில் சுவடுகளை விடாமல் மறைவதில்லை. இதனால்தான் ஒரு முறை நிகழ்ந்ததைப் பல நாட்கள் கழித்தும் நினைவிற்குக்கொண்டு வர முடிகின்றது. நினைவுச் செயலில் **கற்றல்(அல்லதுமனனம்செய்தல்)**[4] **இருத்துதல்**[5], **நினைவு கூர்தல்,**[6] **மீட்டறிதல்**[7] என்ற நான்கு பிரிவுகள் உள்ளன. இவற்றை நன்கு அறிந்தால்தான் நினைவுச் செயலை அறிந்தவர்களாவோம். பாடல்களை மனப்பாடம் செய்வதில் இவை எங்ஙனம் பங்குபெறுகின்றன என்பதைக் காண்போம்.

**கற்றலில் ஆர்வம்:** ஒரு செய்யுளை அல்லது செய்யுட் பகுதியை மனனம் செய்வதற்கு முக்கியமாக வேண்டப்பெறுவது கற்றலில் ஆர்வம். மாணாக்கர்களிடம் பாடல்களை மனப்பாடம் செய்ய வேண்டும் என்ற ஆர்வம் எழாவிடில், மனப்பாடம் செய்தலை வெற்றியுடன் கொண்டுசெலுத்தமுடியாது. பாடல்களின் சொல் வளம், பொருள் நயம், கற்பனை நயம், ஒலி நயம், சுவை முதலிய கூறுகள் பாடல்களைப் படித்து அநுபவிப்பதற்குத் துணை செய்பவை. பாடல்களைப் பயிற்றும் ஆசிரியர் இவற்றை மாணாக்கர்கள் உணரச்செய்து கவிதை இன்பத்தில் திளைக்கச் செய்தால் பாடல்களை மனப்பாடம் செய்துகொள்ள வேண்டும் என்ற எண்ணம் தூண்டப்பெறும். பாடல்கள் நினைவில் இருந்தால் தேவையானபோது ஒலித்து மகிழலாம். பிறரையும் மகிழ்விக்கலாம் என்பதை ஆசிரியர்கள் வற்புறுத்திக் கூறினால், மாணாக்கர்களிடம் மனப்பாடம் செய்யும் ஆர்வம் எழும்.

2 தூண்டல்-**Stimulus** 3 துலங்கல்-**Response**
4 கற்றல் (அல்லது மனனம் செய்தல்)-**Learning or memorising**
5 இருத்துதல்-**Retention** 6 நினைவு கூர்தல்-**Recall**
7 மீட்டறிதல்-**Recognition**

மனம் விரும்பிக் கற்க முனைந்தால் கற்றல் விழுப்பயன் தரும். பாடல்களைத் திரும்பத் திரும்பப் படித்தால் அவை மனத்தில் நன்கு பதியும்; திரும்பத் திரும்பப் படித்தல் விருப்புடன் மேற் கொள்ளப்பெறல் வேண்டும்.

**பொருள் விளக்கம் பெற்றிருத்தல்:** பாடல்களின் பொருள் விளக்கம் பெற்றிருந்தால், மனப்பாடம் செய்தல் எளிதாக நடை பெறும். பொருளையறியாமல் மீண்டும் மீண்டும் படித்தலால் யாதொரு பயனும் விளையாது. பாடல்களின் பொருளைப்புரிந்து கொள்ளுதலை இரு முறைகளில் மேற்கொள்ளலாம்: (1) பாடல் களின் பல்வேறு பகுதிகளுக்கு இடையேயுள்ள தொடர்புகளை (எ-டு: கருத்துத் தொடர்பு, சொற்றொடர்பு போன்றவை) அறிந்துகொள்ளமுயலல்; அஃதாவது, தேவையானால் அவற்றைப் பொருட்பொலிவுள்ள புதிய ஒழுங்கில்—கோலத்தில்—அமைத்துக் கொள்ளுதல்; (2) பாடல்களின் பொருளையும் குறிப்பிடத்தக்க அவற்றின் உட்கருத்தையும் நாம் முன்னமே அறிந்தவற்றுடன் இணைக்க முயலுதல். ஒப்புமைப் பகுதிகள் ஒன்றாக இணையும். எ-டு.

எண்ட ருங்கடை சென்ற யாமம்
இயம்பு கின்றன ஏழையால்
வண்டு தங்கிய தொங்கல் மார்பன்
மயங்கி விம்மிய வாறெலாம்
கண்டு நெஞ்சு கலங்கி அஞ்சிறை
யான காமர் துணைக்கரம்
கொண்டு தம்வயி றெற்றி யெற்றி
விளிப்ப போன்றன கோழியே[8]

இராமன் முடிபுனைய வேண்டிய நாளுக்கு முதல் நாளிரவு கைகேயியின் அந்தப்புரத்தில் தசரதனுக்கும் கைகேயிக்கும் நடை பெற்ற போராட்டத்திற்குப் பிறகு, இரவு கழிந்து கோழிகூவு தலைக் கூறுவது இப் பாடல்.

தையல் துயர்க்குத் தரியாது தஞ்சிறகாம்
கையால் வயிறலைத்துக் காரிருள்வாய்—வெய்யோனை
வாவுபரித் தேரேறி வாவென் றழைப்பனபோல்
கூவினவே கோழிக் குலம்[9]

8 அயோத் - கைகேயி சூழ்வினை - செய், 47 9. நளவெண்பா-283

தமயந்தியின் பாதியாடையைக் கிழித்து உடுத்திக்கொண்டு அவளை விட்டு நளன் பிரிந்த பிறகு இரவு நீங்கி விடிந்தமையைக் கூறுகின்றது இப் பாடல். ஒத்த கருத்துள்ள இப் பாடல்களை நினைவில் வைத்துக்கொள்ளல் எளிது. பாடல்களின் பொருள் விளக்கம் பெற்றால்தான் ஒப்புமைப் பகுதிகள் இன்னவை என்பது புலனாகும். முரணான கருத்துள்ள பாடல்களும் நினைவிற்குத் துணைசெய்யும்.

நெல்லும் உயிரன்றே நீரும் உயிரன்றே
மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்.[10]

என்பது புறநானூறு. இதில் மன்னன் ஒரு நாட்டின் உயிராக உருவகப் படுத்தப்பெற்றுள்ளான்.

வையம் மன்னுயி ராகஅம் மன்னுயிர்
உய்யத் தாங்கும் உடலன்ன மன்னவன்[11]

என்பது கம்பராமாயணம். இதில் மன்னன் ஒரு நாட்டின் உடலாகக் கூறப்பெற்றுள்ளான்; மக்கள் உயிராகக் கருதப் பெற்றுள்ளனர். முரண்பட்ட கருத்துகள் அடங்கிய இந்த இரண்டு பாடற் பகுதிகளும் நினைவிலமையத் துணையாகும்.

**கால இடையீடு:** பாடல்களை ஒரு தடவைப் படித்ததற்கும் அடுத்தமுறை படிப்பதற்கும் கால இடையீடு அல்லது வேறு செயல் நிகழ்ந்தால் பாடல்கள் மனத்தில் நன்கு பதியும். ஒரே தடவையில் உட்கார்ந்து படித்து மனப்பாடம் செய்வதை 'மொத்தைப் பயிற்சி முறை' என்[12] றும், கால இடையிட்டு மனப் பாடம் செய்வதைப், பங்கிட்டுப் பயிற்சி முறை[13] என்றும் வழங்குவர் உளவியலார். பின்னைய முறையே சிறந்தது என சோதனை மூலம் அவர்கள் கண்டறிந்துள்ளனர். நடைமுறையில் வேறு சில கூறுகளையும் நாம் மனத்தில் கொள்ளவேண்டும். இரண்டு தடவை படித்தலுக்கிடையேயுள்ள கால அளவைத் தக்க முறையில் ஒழுங்கு படுத்தவேண்டும். கால இடையீடு மிகக் குறுகினாலும், அல்லது அது மிக நீண்டாலும், இம்முறையின் திறன் குறையும். மேலும், இம்முறையை மேற்கொள்வது மனப்பாடம் செய்ப

10 புறம்-186 11 அயோ, மந்தரை சூழ்- 25
12 மொத்தைப் பயிற்சி முயற்சி-Mohod of massed pratice
13 பங்கிட்டுப் பயிற்சி முறை-Mehod of distributed practice

வேண்டிய பகுதியையும் பொறுத்துள்ளது. பாடல்களின் பொருள் வெளிப்படையாகவும் மொழி நடை எளிதாகவும் இருந்தால் முதல் முறை சிறந்தது என்றும், பாடல்களின் பொருளும் மொழி நடையும் சற்றுக் கடினமாக இருந்தால் இரண்டாவது முறை சிறந்தது என்றும் சோதனைகள் காட்டுகின்றன. இதற்கு உள வியலார்காரணங்களும் விளக்கங்களும் தருகின்றனர். அவற்றை உளவியல் நூல்களில் கண்டு தெளிக[14] மேலும், உண்மையாகக் கற்றலில் 'மொத்தைப் பயிற்சி முறை' அவ்வளவாக நற்பயன் விளைப்பதில்லை. தேர்விற்காகத் தொடர்ந்து படிக்கும் செய்திகள் உடனே மறக்கப்பெறுதலே இதற்கு எடுத்துக்காட்டாகும்.

**சில ஆராய்ச்சிகளின் முடிவுகள்:** ஒரு பாடலை அல்லது பல பாடல்கள் அடங்கிய ஒரு பாடப்பகுதியை அப்படியே படித்து மனப்பாடம் செய்தல் எளிதா, அன்றி அதனைச் சிறுசிறு பகுதிகளாகப் பிரித்துப் பாடம் செய்தல் எளிதா என்று ஆராய்ந்தும் முடிவு கண்டுள்ளனர். பொதுவாக, ஒரு பாடலை அல்லது பாடப் பகுதியை மொத்தமாக அப்படியே படித்தல்தான் சிறந்தது. ஒரு குறிப்பிட்ட எடுத்துக்காட்டில் இம்முறையின் பயன் மனப்பாடம் செய்வோரின் மனவளர்ச்சியையும், பாடப்பகுதியின் அளவையும் பொறுத்தது. பாடப்பகுதி மிக நீளமாக இராதிருந்தால் அதனை மொத்தமாக அப்படியே படித்தல்தான் சிறந்தது. பாடல்களில் சில அடிகள் கடினமாக இருப்பினும், பாடப்பகுதி மிக நீளமாக இருப்பினும் அல்லது சற்று கடினம்ாக இருப்பினும், அவற்றைப் பொருள் தொடர்பு கெடாத சிறுசிறு 'முழுப் பகுதிகளாக'ப் பிரித்துக்கொண்டு மனப்பாடம் செய்தல் சிறந்தது. கடினமாகவுள்ள பகுதிகளை மட்டிலும் ஏனையவற்றைவிட அதிகத் தடவைகள் திரும்பத்திரும்பப்படித்தால் போதுமானது. ஆனால், எப்படி பிரித்துக் கொண்டாலும் முதலில் சில தடவைகளும், இறுதியில் சில தடவைகளும் பாடல் முழுவதையும் அல்லது பாடப்பகுதி முழுவதையும் திரும்பத் திரும்பப் படித்தல் மிகவும் இன்றியமையாதது. அன்றியும், பாடலை அல்லது பாடப்பகுதியை முழுப் பகுதியாக மனப்பாடம் செய்தலால் இன்னொரு நன்மையும் உண்டு. ஒரு பாடலை அல்லது பாடப்பகுதியைப் படித்த சிறுவன் கால இடையீட்டால் மறந்துவிட்டால், மீண்டும் அதனைப் படித்து மனப்பாடம் செய்துவிடலாம். இவ்வாறு இரண்டாம் முறை மனப்பாடம் செய்வதில்; மொத்தைப் பயிற்சி முறையால் மனப்பாடம் செய்த கவிதைளைப் பங்கீட்டுப் பயிற்சி முறையால் மனப்பாடம் செய்த கவிதைகளைவிடக் குறைந்த தடவைகள்

14. Boaz G D: *Educatinal Psyehology p d-168-169*

திரும்பத் திரும்பப் படித்தல் போதும் என்றும் சோதனைகள் மூலம் கண்டறிந்துள்ளனர்.

**இருத்துதலின் தத்துவம்:** மனனம் செய்வதற்கென மேலே உரைத்த நிபந்தனைகள் யாவும் மனனம் செய்தவற்றை நினைவில் இருத்துதலுக்கு[15] மிகவும் முக்கியமானவை. இருத்துதல் மனிதருக்கு மனிதர் மாறுபடுகின்றது. ஒரு பாடலை மனத்தில் இருத்தும் திறன் அது மூளையில் விடும் துலங்கல் சுவடுகளைப் பொறுத்தது. மனத்தில் இருத்தப்பெறும் கவிதைகள் அங்கு மன நாட்டங்களாகப்[16] படிந்துள்ளன. இளமையில் நிகழ்ந்தவற்றை இப்பொழுது நினைவுகூர்வதிலிருந்து அவ்வநுபவங்கள் மனத்தில் இருத்தப் பெற்றுள்ளன என்பது திண்ணம். நாம் வழிபாட்டுப் பாடல்களைப் பல நாட்கள் சொல்லாவிடில் அவை மறைந்து போனவையாகத் தோன்றலாம். ஆனால், அவற்றை மூன்று அல்லது நான்கு முறை சொன்னவுடன் அவை மீட்டும் பாடமாகி விடுகின்றன; அவற்றை முன்மாதிரிப் பல தடவைகள் சொல்ல வேண்டியதில்லை. இதிலிருந்து முன்னநுபவங்கள் மனத்தில் ஒருவாறு இருத்தப்பெறுகின்றன என்பது தெரிகின்றது. அநுபவங்களும் எண்ணங்களும் இயைபுற்று ஒன்றையொன்று நினைவூட்டுகின்றன. இத்தொடர்பு காலத்தையோ இடத்தையோ, காரண காரியத் தொடர்பையோ பொறுத்திருக்கலாம். புலன் உணர்ச்சியின் பயனாக மனத்தில் ஏற்படும் பல படிமங்களும்—நினைவுச் படிமங்களும்[17]—நினைவூட்டத் துணை செய்கின்றன. படித்தவை எவ்வாறு இருத்தப்பெறுகின்றன என்பதுபற்றி உளவியலார் இன்னும் தெளிவுபடுத்தவில்லை; இன்றைய உளவியலாராய்ச்சி அதற்குப் போதுமானதன்று. ஆனால், ஒன்று தெளிவாகி உள்ளது. நாம் நினைவுகூர்வதைவிட அதிகமாகவே மனத்தில் இருத்தியுள்ளோம். மனத்தில் இருத்தும் திறனும் நினைவுகூரும் திறனும் அளவில் வேறுபடுவதால், சிலர் மனத்தில் செய்திகள் இருந்தும் நினைவுகூர முடிவதில்லை.

**நினைவு கூர்தல்:** நினைவுச் செயலின் மூன்றாவது கூறு நினைவு கூர்தல்[18] அல்லது மீட்டும் வருவித்தல் ஆகும். நினைவு கூர்தலும் மீட்டறிதலும்[19] நினைவு வைத்தலின்[20] இரு வழிகளாகும். நினைவுகூர்தல் என்பது, பொருள் புலன்களுக்கு முன்

15. இருத்துதல் - Retention 16. மன நாட்டம் - Disposition
17. நினைவுச் படிமங்கள்- Memory images-
18. நினைவு கூர்தல் - Recall, 19. மீட்டறிதல் - Recognition
20. நினைவில் வைத்தல் - Remembering

இல்லாத பொழுது நினைவில் வைத்தல்; மீட்டறிதல் என்பது, பொருள் புலன்களுக்கு முன் இருக்கும்பொழுது நினைவில் வைத்தல். மனத்தில் இருத்துதல் இன்றேல் நினைவுகூர்தல் சாத்தியமில்லை. மனத்தில் இருப்பவற்றை நினைவுகூர முடியாத நிலையை நினைவுகூர் மறவி'[21] என்றும், நினைவில் இருத்துதலிலேயே குறையிருப்பின் அது 'நினைவிலிருத்தல் மறவி'[22] என்றும் உளவியலார் வழங்குவர்.

**குறுக்கீடு நினைவின் தடை:** நினைவுகூர்தல் செயல் நடைபெறும்பொழுது ஏதாவது குறுக்கீடு ஏற்பட்டுத் தடை நிகழ்கின்றது. இந்தக் குறுக்கீடு அச்சம், கவலை, தன் உணர்ச்சி போன்ற உள்ளக் கிளர்ச்சிபற்றியவைகளால்தான் நிகழும். அவைக்கூச்சம் பலரிடம் இருப்பதை நாம் அறிவோம்; இதன் காரணமாக நாம் தெரிந்தவற்றையே நினைவுகூர முடிகின்றதில்லை யன்றோ? நினைவுகூரத் தவறுவதற்கு வேறொரு காரணமும் உண்டு. இதைத் 'தொடர்புள்ள குறுக்கீடு'[23] என வழங்குவர் உளவியலார். ஒரு வினா விடுக்கப்பெறுங்கால் கடந்த கால அநுபவத்தில் வேறொன்றும் கிளர்ந்தெழுதல் கூடும். இதற்கும் சரியான விடைக்கும் இடையே ஒரு போராட்டம் எழுவதால் நினைவுகூர்தலில் தடை நிகழ்கின்றது; இயலாததாகவும் ஆகின்றது. என்னதான் முயன்றாலும் நினைவு கூரவே முடிகின்றதில்லை. மேலும், நினைவுகூர்தல் அப்போதைய நம் மன நிலையையும் பொறுத்துள்ளது. எனவே, நினைவுகூர வேண்டும் என்ற மனவுறுதி மிகவும் முக்கியமானது. செய்யுட்களிலுள்ள அந்தாதித்தொடை, எதுகை, மோனை, ஒலிநயம் முதலியவை நினைவுகூர்வதற்குரிய நினைவுக் குறிப்புகளாக[24] உதவுகின்றன. நாலாயிரத்திவ்விய பிரபந்தத்தில் பதிகங்கள் தோறும் காணப்பெறும் அடிவரவு ஒரு வகையான நினைவுக் குறிப்புகளாகும்.

**நெட்டுருச் செய்யவேண்டிய கவிதைகள்:** மாணாக்கர்கள் நெட்டுருச் செய்யவேண்டிய கவிதைகள் அவர்களுடைய ஒழுக்கம், உளப்பண்பு, கற்பனையாற்றல், கருத்துவளம், முருகுணர்ச்சி முதலியவற்றை வளர்க்கத் தக்கனவாக இருத்தல்வேண்டும். மலை, கடல், நாடு, வளநகர் பருவம், இருசுடர் தோற்றம் முதலியவற்றை வருணித்துக் கூறும் பகுதிகள், சொல்நயம்,

21. நினைவுகூர் மறவி-Recall amnesia
22. நினைவில் இருத்தல் மறவி - Rentetionamnesia
23. தொடர்புள்ள குறுக்கீடு - Associative interference
24. நினைவுக் குறிப்பு - Cue

பொருள்நயம் செறிந்த செய்யுட்கள், மொழியின் சிறப்பு, நாட்டு வாழ்த்து கடவுள் வாழ்த்து, ஆகியவற்றைக் கூறும் இன்னோசையும் பொருட் செறிவும் உளக்கனிவும் பொதிந்த கவிதைகள், நல்லணிகள் செறிந்து விளங்கும்பாடல்கள் முதலியவற்றை மாணாக்கர்கள் இளம் பருவத்தில் நெட்டுருச் செய்வதற்காகத் தேர்ந்தெடுக்கலாம். கீழ்க்கண்டவற்றை ஒரு சில எடுத்துக்காட்டுகளாகக் கொள்ளலாம்:

நீலவான் ஆடைக்குள் உடல்ம றைத்து
நிலாஎன்று காட்டுகின்றாய் ஒளிமு கத்தைக்
கோல முழுதுங் காட்டிவிட்டால் காதல்
கொள்ளையிலே இவ்வுலகம் சாமோ? வானச்
சோலையிலே பூத்ததனிப் பூவோ நீதான்!
சொக்கவெள்ளிப் பாற்குடமோ? அமுத ஊற்றோ?
காலைவந்த செம்பரிதிக் கடலில் மூழ்கிக்
கனல்மாறிக் குளிரடைந்த ஒளிப்பி ழம்போ![25]

நாடிப் புலங்கள் உழுவார்
கரமும் நயவுரைகள்
தேடிக் கொழிக்குங் கவிவாணர்
நாவும் செழுங்கருணை
ஓடிப் பெருகும் அறிவாளர்
நெஞ்சும் உவந்துநடம்
ஆடிக் களிக்கும் மயிலே!
உன்பாதம் அடைக்கலமே.[26]

யாமறிந்த புலவரிலே கம்பனைப்போல்
வள்ளுவர்போல், இளங்கோவைபோல்,
பூமிதனில் யாங்கணுமே பிறந்ததில்லை;
உண்மை, வெறும் புகழ்ச்சி இல்லை;
ஊமையராய்ச் செவிடர்களாய்க் குருடர்களாய்
வாழ்கின்றோம்; ஒருசொற் கேளீர்!
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்![27]

தெளிவுறவே அறிந்திடுதல், தெளிவுதர
மொழிந்திடுதல், சிந்திப் பார்க்கே
களிவளர உள்ளத்தில் ஆநந்தக்
கனவுபல காட்டல், கண்ணீர்த்

25. பாரதிதாசன்--புரட்சிக்கவி
26. தேசிக விநாயகம் பிள்ளை: 'மலரும் மாலையும்' செய். 1.
27. பாரதியார்-தமிழ், செய். 1.

துளிவரஉள் ளுருக்குதல், இங்கிவையெல்லாம்
நீயருளும் தொழில்க ளன்றோ?
ஒளிவளரும் தமிழ்வாணீ! அடியனேற்
கிவையனைத்தும் உதவு வாயே.[28]

வம்புலாங் கூந்தல் மனைவியைத் துறந்து
பிறர்பொருள் தாரம்என்று இவற்றை,
நம்பினார் இறந்தால் நமன்தமர் பற்றி,
ஏற்றிவைத்து எரிஎழு கின்ற
செம்பினால் இயன்ற பாவையைப் ''பாவி!
தழுவு'' என மொழிவதற்கு அஞ்சி
நம்பனே வந்துன் திருவடி அடைந்தேன்,
நைமிசா ரணியத்துள் எந்தாய்.[29]

சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்றன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையு மம்மலர்க்கே யாக்கி வாக்குள்
மணிவார்த்தைக் காக்கியைம் புலன்க ளார
வந்தனையாட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.[30]

புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
அறிவழிந்திட் டைம்மேலுந்தி
அலமந்த போதாக அஞ்சேலென்
றருள்செய்வான் அமருங்கோயில்
வலம்வந்த மடவார்கள் நடமாட
முழவதிர மழையென்றஞ்சிச்
சிலமந்தி அலமந்து மரமேறி
முகில்பார்க்கும் திருவையாறே[31].

மும்மைசால் உலகுக்கு எல்லாம்
மூலமந் திரத்தை, முற்றும்
தம்மையே தமர்க்கு நல்கும்
தனிப்பெரும் பதத்தை, தானே

28. பாரதியார்-பாஞ்சாலி சபதம், செய். 154.
29. நாலாயிரம். பெரியதிருமொழி, 1.6:4 30. திருவாசகம் - செய். 3
31. தேவாரம்-அடங்கல்முறை, செய். 1394.

இம்மையே, எழுமை நோய்க்கும்
மருந்தினை, 'இராமன்' என்னும்
செம்மைசேர் நாமம் தன்னை,
கண்களில் தெரியக் கண்டான்.[32]

விரிவஞ்சி இத்துடன் நிறுத்துகின்றோம். சங்க இலக்கியங்கள், காவியங்கள், புராணங்கள், பிள்ளைத்தமிழ் நூல்கள், சில்லறைப் பிரபந்தங்கள் போன்ற நூல்களிலிருந்துபல பாடல்களை எடுத்துக் காட்டலாம். பாடல்களைத் தொகுத்து வைக்கும் முறையைப் பற்றி இந்நூலில் பல இடங்களில் வற்புறுத்தியுள்ளோம். இத்தகைய பழக்கத்தை மாணாக்கர்களிடம் வளர்த்துவிட்டால், அவர்கள் தம் பாடநூலில் வருவனவற்றையும் பிற இலக்கியங்கள், பருவ இதழ்கள், நாளிதழ்கள் முதலியவற்றில் காணப்பெறுபவைகளுள் தம் மனத்தை ஈர்க்கக் கூடியவற்றையும் தொகுத்து வைத்துக் கொள்வர். இவ்வாறு செய்யாது தேர்வைக் கருதி எல்லோரையும் ஒரு குறிப்பிட்ட பகுதியை நெட்டுருச் செய்யும்படி வற்புறுத்துவது நன்றன்று; தேர்வினால் பாநயக்கும் பண்பினை அளந்தறிய எண்ணுவதும் சரியன்று; அஃது இயலாததுமாகும். அங்ஙனம் தேர்வால் அளந்தரிய விரும்பினால் தேர்வு முறையை மாற்றியமைத்துக் கொள்ளவேண்டுமேயன்றி, முறையை வகுத்துக் கொண்டு அதற்கேற்றவாறு பாடல்களை நெட்டுருச்செய்யவேண்டுமென்று வற்புறுத்துவது மிகக் கொடுமை; அது கவிதைச் சுவையைக் கொல்வது போலாகும். மனப்பாடம் செய்தலை இளமையிலிருந்தே தக்க முறையில் வளர்த்தால் சிறுவர்களிடம் மொழிவளம் பெருகும். இலக்கியத்தில் ஆர்வமும் கிளர்ந்தெழும். சிறுவர்களின் இயல்பறிந்து ஆசிரியர்கள் அதனை திறம்பட வளர்க்க வேண்டும்.

32. கிட்கிந் வாலிவதை, 77.

# நான்கு யோசனைகள்

கவிதைகளைப் படித்துத் துய்க்க விரும்புபவர்கட்கும், குறிப்பாக மாணாக்கர்கட்கும் சில யோசனைகளைக் கூற விரும்புகின்றோம். இவை கவிதை பயிற்றும் ஆசிரியர்கட்கும் பெருந்துணையாக இருக்கும். அவற்றை ஈண்டு ஒவ்வொன்றாகக் கூறுவோம்.

*1.* **செய்யுளிலக்கணம்**[1]: செய்யுளின் அமைப்பைக் கூறும் யாப்பிலக்கணத்தைநன்குதெரிந்துகொண்டால்தான் கவிதையை நன்கு அநுபவிக்கலாம் என்பதில்லை. ஆற்றல் இருப்பவர்கள் தெரிந்துகொள்ளலாம். தெரிந்துகொண்டுதான் ஆகவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. கவிதையை அநுபவிப்பதற்குத் தேமாவும் புளிமாவும், தேமாங்காயும் புளிமாங்காயும் எந்த அளவுக்குத் துணைபுரிதல் கூடும் என்பது இந்த ஆசிரியருக்குத் தெரியவில்லை; எதுகையும். மோனையும், திரும்பத் திரும்ப வரும் ஒலியமைப்பு முறையும் கவிதையை இசையூட்டிப் படிப்பவர்கட்கு இன்பம் பயக்கின்றன என்பது உண்மைதான். அவை மகிழ்ச்சியூட்டுகின்றன என்பதற்கும் தடையில்லை. ஆனால், இவற்றின் இலக்கணம் எத்துணை அதற்குப் பயன்படும் என்பது தான் நம்முடைய வினா.

கீழ் வகுப்பு மாணாக்கர்களும், கவிதையைத் துய்ப்பதில் தொடக்க நிலையிலுள்ளவர்களும் கவிதையின்ஒவ்வொரு வரியின் ஒலிப்பையும் நன்கு அறிதல் வேண்டும். அவர்களது கவனத்தை இந்தக் கூறுக்கு ஈர்த்தால் அதுவே போதுமானது.

காலமாம் வனத்திலண்டக் கோலமா மரத்தின்மீது
    காளிசக்தி யென்றபெயர் கொண்டு—ரீங்
    காரமிட் டுலவுமொரு வண்டு—தழல்
காலும்விழி நீலவன்ன மூலஅத்து வாக்களெனும்
    கால்களா றுடையதெனக் கண்டு—மறை
    காணுமுனி வோருரைத்தார் பண்டு.[2]

1. செய்யுளிலக்கணம்-Prosody.
2. பாரதியார் கவிதைகள்-மகா காளியின் புகழ். 1.

என்ற மகாகாளியின் புகழைப் பாடும்[3] காவடிச்சிந்தில் கொண்டு, வண்டு, கண்டு, பண்டு என்ற அடியின் ஒலிப்பை மாணாக்கர்கள் நன்கு அறிந்துகொண்டால் போதுமானது. அந்த ஒலிப்பிலேயே அவர்கள் எல்லையற்ற இன்பம் அடைவர். அடிகளின் இறுதியிலேயன்றி இடையிலும் இந்த ஒலியமைப்புத் திரும்பத் திரும்ப அமையும் பாடல்களும் உண்டு.

பாருக்குள்ளே நல்ல நாடு—எங்கள்
பாரத நாடு.

ஞானத்தி லேபர மோனத்திலே—உயர்
மானத்தி லேஅன்ன தானத்திலே
கானத்தி லேஅமு தாக நிறைந்த
கவிதையி லேஉயர் நாடு—இந்தப் (பாருக்)

தீரத்தி லேபடை வீரத்திலே—நெஞ்சில்
ஈரத்தி லேஉப காரத்திலே
சாரத்தி லேமிகு சாத்திரங் கண்டு
தருவதி லேஉயர் நாடு—இந்தப் (பாருக்)

என்ற பாரதியாரின் பாட்டில் ஒவ்வொரு வரியிலும் 'லே' என்ற ஒலி, நயமாக அமைந்திருப்பதைக் கேட்டு மகிழலாம். சிறுவர்கள் இத்தகைய பாடல்களைக் குரல்விட்டுப் பாடும்பொழுது மிக்கக் களிப்படைவர். இத்தகைய எளிய சந்தம் மிக்க பாடல்களைச் சிறுவர்கள் படித்து அநுபவிப்பதற்கு ஆசிரியர்கள் அதிக வாய்ப்புகள் தருதல் வேண்டும்.

நடுநிலைப் பள்ளியில் படிப்போரும், உயர்நிலைப் பள்ளியில் படிப்போரும் மேற்கூறிய பாடல்களைப் போன்ற பாடல்களைப் படித்து மகிழலாம். மேலும், அவர்கள் வெண்பா, ஆசிரியப்பா, அறுசீர்விருத்தம், கலிவிருத்தம், கட்டளைக் கலித்துறை போன்ற செய்யுள் வகைகளைப் படிக்கும் அநுபவம் பெற்றிருப்பர். ஆசிரியர் நன்முறையில் கவிதைகளைப் பயிற்றியிருப்பாராயின் அவர்கள் செப்பலோசை, அகவலோசை போன்ற ஓசை வேறுபாடுகளை நன்கு அறிவர். வெண்பாவைச் சங்கராபரண இராகத்திலும் விருத்தத்தைக் காம்போதி, கல்யாணி, மத்யாமவதி என்ற இராகங்களிலும், பிள்ளைத்தமிழ்ப் பாடல்களைக் கேதாரக் கௌளத்திலும் பாடும்பொழுது அந்தந்த இராகங்களைப்பற்றி

3. பாரதியார் கவிதைகள் - பாரத நாடு-1. 2.

இலக்கணம் தெரியாமலே அவற்றின் இசையின்பத்தில் திளைப்பர். மேல் வகுப்பிற்குப் போகப்போக, கவிதைகளைப் படித்துத் துய்க்கும் அநுபவம் பெருகப்பெருக, கவிதையின்பமும் வளரும்.

'கவிப்பா அமுதம் இசையின் கறியொடு
கண்ணன் உண்ணக்
குவிப்பான்.'[4]

என்று கம்பநாடன் கூறுவதைப்போல், மாணாக்கர்கள் கவிப்பா இன்ப அமிழ்தமாவதையும், அஃது இசையுடன் சேர்த்து உண்ணப் பெறும்பொழுது தெவிட்டாத தெள்ளமுதமாவதையும் அறிவர். இந்த நிலையில் அவர்கட்குச் செய்யுட்களை அலகிட்டு அசை, சீர், தளை, அடி முதலியவற்றை அறியவும், அவற்றின் வாய்பாடுகளைத் தெரிந்துகொள்ளவும் ஓரளவு பயிற்சி அளிக்கலாம். இயல்பாக வந்த ஒலிவாய்பாடு திரும்பத் திரும்ப வருதலே பாட்டாகும் என்ற உண்மையை அவர்கள் உணரச் செய்யலாம். இந்நிலையை அவர்கள் நன்கு அறியச் செய்துவிட்டால்[5], வந்த சொற்களே திரும்பத் திரும்ப வரும் செயற்கை நிலையேற்பட்டு யாக்கப்பெறும் பாடல்கள் பாட்டு[5] எனும் தகுதியை இழந்து வெறுஞ் செய்யுளாக[6] நிற்கும் நிலையை நன்கு வேறுபடுத்தி உணரும் அறிவினைப் பெறுவர். செய்யுட்களை அலகிட்டுக் காணும் பயிற்சிகளைச் சிறுவர்கள் மிக நன்கு விரும்புவர். செய்யுட்களை வாய்பாடுகளாக அமைக்கும் முறை அவர்கட்குப் பெரிதும் இன்பம் அளிக்கும். பல்வேறுவகைப் பாடல்களின் யாப்பு முறை பல்வேறுவிதமாக அமைந்திருப்பதைக் கண்டு மகிழ்வர். இதனால் ஒலியை நுணுகி அநுபவிக்கும் பழக்கமும் அவர்கள் காது பெற்று விடும். நாளடைவில் பாக்களின் உயிர்நிலையை அறிந்து படித்து மகிழும் பழக்கம் அவர்களிடம் இயல்பாகவே அமைந்துவிடும்.

மேற்கூறிய பயிற்சி அவர்கட்கு வேறுவிதத்திலும் துணை செய்யும். ஆசிரியரோ பிறரோ பாடல்களை இசையூட்டிப் படிக்கும்பொழுது, அவர்கள் மனம் அந்த இசையில் நன்கு ஈடுபடும். என்றாலும், பாடல்களை அவர்களாகவே இசையேற்றிப் படிக்கும் பொழுதுதான் மாணாக்கர்கள் உண்மையான கவிதைச் சுவையில் ஈடுபடுவர். எனவே, மாணாக்கர்கள் கவிதைகளைப்

4. சடகோபந்தாதி-எ.
5. பாட்டு-Poetry 6. செய்யுள்-Verse

படிக்கத் தொடங்கும்பொழுதே அவற்றின் இசையை முதலில் பற்றிக்கொள்ளுதல் மிகவும் இன்றியமையாதது என்பது பெறப் படும். இதனால் கவிதையைப் படிப்பது எளிதாக இருப்பதுடன், முதல்தடவை படிக்கும்பொழுதே கவிதை அவர்கட்குக் கவர்ச்சி யாக அமைந்துவிடும்.

மாகந்தமும் மகரந்தமும்
　　அளகந்தர மதியின்
பாகந்தரும் நுதலாளொடு
　　பவளந்தரும் இதழான்
மேகந்தனி வருகின்றது
　　மின்னோடென மிளிர்பூண்
நாகம்தனி வருகின்றது
　　பிடியோடென நடவா.[7]

இராம - இலக்குமணர்களையும் சீதையையும் சுமந்திரன் காட்டில் விட்டுச்சென்ற பிறகு, இராமனும் சீதையும் நடந்து சென்றதைக் காட்டும் இந்தப் பாடலின் பெருமிதத்தை இசை யுடன் படித்தால்தான் உணரலாம்; உணரமுடியும். மாணாக்கர் கள் முதல் தடவையிலேயே இசையுடன் படிக்கத்தொடங்கினால் அதன் கம்பீர நடையில் மிகவும் ஈடுபாட்டுடன் தோய்ந்துவிடு வர். தாய்மொழியாசிரியர்கள் இதை நினைவில்வைத்து மாணாக் கர்களிடம் கவிதையை இசையுடன் படிக்கும் பழக்கத்தைத் தொடக்கத்திலிருந்தே ஏற்படுத்தி விடுதல்வேண்டும்.

2. **கவிஞர்களின் வரலாறு:** கவிதையைப் பயில்வோருக்குக் கவிஞர்களின் வரலாற்றை அறிந்துகொள்ளத் தேவையில்லை என்பது இந்நூலாசிரியரின் கருத்து. சில மேனாட்டுத் திறனாய் வாளர்களும் இக்கருத்தினையே கொண்டுள்ளனர். சில கவிதை களைப் புரிந்துகொள்ள வேண்டுமாயின் ஒரு சில நிகழ்ச்சிகளைக் கட்டாயம் தெரிந்துகொள்ளத்தான் வேண்டும் என்றிருந்தால், அவற்றை மட்டிலும் தெரிந்துகொண்டால் போதுமானது. பள்ளி மாணாக்கர்களுக்கென்று கவிதை நூல்களைத் தொகுப்போர் இதை என்றும் நினைவில் வைத்துக்கொள்ளவேண்டும். நாம் தொகுக்கும் பாடல்களின் பொருள் விளக்கத்திற்குப் புறம்பாக வுள்ள கவிஞர்களின் வரலாற்றுக் குறிப்புகளைத் தம் நூல்களில் தரவேண்டிய அவசியமே இல்லை என்பதை உணர்தல்வேண்டும். காளமேகத்தின் சில பாடல்களை (குறிப்பாக ஆசு கவிகளை) நன்

7. அயோ. கங்கைப். செ. 4.

முறையில் தெளிவாக உணரவேண்டுமானால் அவர் 'எமகண்டம்' பாடிய வரலாற்றை (அவை புனைந்துரையாயினும்) அறிந்து கொள்வது அவசியமாகும்; அவருக்கும் அதிமதுர கவிக்கும் உள்ள பகைமையையும் பொறாமையையும்பற்றிய குறிப்புகளை தெரிந்து கொள்வது இன்றியமையாதது. அங்ஙனமே, இரட்டைப் புலவர்களின் வரலாற்றுக் குறிப்புகளும் அவர்களுடைய பாடல்களை நன்கு புரிந்துகொள்ளுவதற்குத் துணையாக இருக்கும். அப்பாடல்கள் எழுந்த சூழ்நிலையை அறிந்தால் அவற்றின் உயிர்நிலைக் கருத்தைத் தெளிவாக அறிதல் இயலும்,

ஆசு கவியால் அகிலவுல கெங்கும்
வீசு புகழ்க்காள மேகமே—பூசுரா
விண்கொண்ட செந்தழலில் வேகுதே ஐயையோ
மண் தின்ற பாணம்என்ற வாய்.[8]

என்பது ஒரு கையறுநிலைச் செய்யுள். இதை மாணாக்கர்கட்குக் கற்பிக்கும் வாய்ப்பு நேரிட்டால். அப்பாடல் எழுந்த சந்தர்ப்பத்தையும்சூழ்நிலையையும் அவர்கள் நன்கறியச் செய்தல்வேண்டும். அப்பொழுதுதான் 'மண்தின்ற பாணம் என்ற வாய்' என்ற தொடரில் அடங்கியுள்ள உணர்ச்சி வேகத்தை, இதயத்துடிப்பை, நன்கு உணரமுடியும். கீழ்க்கண்ட குறிப்புகளை மட்டிலும் அவர்கள் அறிந்துகொண்டால் போதுமானது.

"இச் செய்யுளைப் பாடியவர்கள் இரட்டையர். இவர்களில் ஒருவர் குருடர்; மற்றவர் நொண்டி. இருவரும் கவிதை பாடும் ஆற்றல் பெற்றவர்கள். பெரும்பாலும் இவர்களுடைய பாட்டுகளில் முதலிரண்டடிகளை ஒருவரும், மற்ற இரண்டு அடிகளை இன்னொருவரும் பாடுதல் வழக்கம். குருடர் நொண்டியைத் தூக்கிக்கொண்டு, நொண்டி வழிகாட்ட, இருவரும் ஊர்ஊராகச் சென்று இறைவழிபாடு செய்வது வழக்கம். ஒருநாள் இவர்கள் திருவாரூர்க்குச் சென்று சிவதரிசனம் செய்து மண்டபத்தில் வந்து தங்கியிருந்தனர். இவருள் ஒருவர்,

நாண்என்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்
பாணந்தான்—

என்னும் அளவு பாடிவிட, மற்றவருக்கு அவர் விட்ட இடந் தொடங்கி ஏனைய அடிகளை நிறைவு செய்யத் தோன்றவில்லை.

8. தனிப்பாடல் தி ட்டு - முதற்பகுதி (இரட்டையர் பாடல் - 11).

இப்பாடற் பகுதியை அவர்கள் அம் மண்டபச் சுவரில் எழுதி வைத்து மற்றும் சில திருப்பதிகள் சென்று வணங்கி மீண்டும் அவ்வூருக்கு வந்தனர். அவர்கள் வந்தபொழுது வெண்பா முற்றுப் பெற்றும், அடியில் 'காளமேகம்' என்று கையெழுத்திட்டிருப்ப தையும் கண்டனர். அவர்கள் எல்லையற்ற வியப்பெய்தினர். முற்றுப்பெற்ற வெண்பா,

நாண்என்றால் நஞ்சிருக்கும் நற்சாபம் கற்சாபம்
பாணந்தான் மண்தின்ற பாணமே—தாணுவே
சீரா ரூர்மேவும் சிவனேநீ எப்படியோ
நேரார் புரமெரித்த நேர்.

என்று அமைந்திருந்தது. 'மண் தின்ற பாணம்' என்று சொன்ன புலவரைக் கண்டு அவருடன் அளவளாவ வேண்டும் என்ற ஆர்வத்துடன் அங்குள்ளவரைக் காளமேகத்தின் இருப்பிடத்தை வினவினர். அவர்கள் அன்றுதான் காளமேகம் இயற்கை எய்தினார் என்றும், அவரது உடல் சுடுகாட்டில் வெந்துகொண் டுள்ளது என்றும் அறிவித்தனர். அதைக்கேட்ட இரட்டையர் சுடுகாட்டிற்கு விரைந்து சென்றனர்; அப்பொழுதுதான் காள மேகத்தின் வாய்ப்பக்கம் தீப்பற்றி நன்றாகக் கொழுந்துவிட்டு எரிந்துகொண்டிருந்தது. உடனே அவர்களின் சோகவுணர்ச்சி மேற்கண்ட 'ஆசுகவியால்' என்ற பாடலாக வடிவெடுத்தது. இந்த முகவுரைக்குப் பிறகு பாடலைச் செப்பலோசையுடன் படித்தால் மாணாக்கர் பாட்டிலுள்ள அவலச் சுவையை அறிவர்; 'மண் தின்ற பாணம் என்ற வாய்' என்ற தொடரின் சிறப்பையும் உணர்வர்; அதில் அடங்கியுள்ள உணர்ச்சியின் கொடுமுடி அவர் கட்குத் தென்படும்.''[9]

இவ்விடத்தில் நாம் ஒன்றை நினைவில் வைத்தல் வேண்டும். நாம் கற்பிக்கவேண்டியது பாடலேயன்றி, பாடலைப் பாடிய கவிஞனின் வரலாறு அன்று. வேறு சந்தர்ப்பத்தில் வரலாற்றைக் கூற நினைத்தால், மாணாக்கர்களே தாம் படித்த கவிஞர்களை பற்றிய நூல்களிலிருந்து சுவையான கதையினை எடுத்துக் கூறு வர். ஆனால் சில ஆசிரியர்கள் கவிதையைப் பாடிய கவிஞனின் வாழ்க்கை வரலாற்றை அறிந்து கொள்வது மிகவும் இன்றியமையாதது என்று கருதுவர். கவிதையைப் பற்றிய ஒரு திட்டமான உணர்ச்சியைப் பெறுதலே அதனைவிட மிகவும் முக்கியமானது. உண்மையாக நாம் கவிஞனை விரும்பி

9. சுப்புரெட்டியார், ந: தமிழ் பயிற்றும் முறை (மூன்றாம் பதிப்பு) - பக். (373 4)

னால் அவனைப்பற்றிய குறிப்புகளைத் திரட்டும் பொறுப்பை மாணாக்கர்கட்கே விட்டுவிடுதல் நன்று; நூலகத்தி லுள்ள சில நூல்களைக் குறிப்பிட்டுக் காட்டிவிட்டால் போதுமானது.[10] இவ்விடத்தில் நாம் ஒன்றினை வலியுறுத்த வேண்டும். கவிஞர்களே தம்மைப்பற்றி மறைத்து வைக்க விரும்பும் குறிப்புகளை மாணாக்கர்முன் கொண்டு வருதலே கூடாது. கவிஞர்களின் சொந்த வாழ்க்கையைப்பற்றி மாணாக்கர்கள் அறிந்துகொள்ள வேண்டிய அவசியமே இல்லை. அவ்வாறு அறிந்துகொள்ள முயல்வது நாகரிகமே இல்லை என்பது இந்நூலாசிரியரின் கருத்து. வாழ்க்கை வரலாறு கூறுவோர் ஒன்றையும் மறைக்காது கூறவேண்டும் என்று சிலர் கூறுவது பொருத்தமன்று; பண்பாடும் அன்று. என்னதான் ஆராய்ந்து முயன்றாலும், வாழ்க்கையில் நடந்தவை அனைத்தையும் திரட்டுதல் என்பது குதிரைக்கொம்பே. ஆனால் கவிஞர்களிடம் உள்ள சில குறைகளை 'அகழ்ந்து எடுத்துக்' காட்டிவிடலாம்! அவற்றால் கவிஞர்கள் எவ்வளவு 'மட்டமானவர்கள்' என்றும் உரைத்துவிடலாம். ஆனால் என்ன? கவிஞனைப்பற்றி நாம் ஒரு துணிவினைக் கொள்ளவேண்டுமாயின், நாம் அனைத்தையும் தெரிந்துகொண்டதாகத்தான் வேண்டும் என்ற ஒரு 'போலி நோக்கத்துடன்' மிக்கமகிழ்ச்சியாகவே ஒவ்வொன்றையும் துருவித் துருவி ஆராயவும் கூடும். கவிஞர்கள் தவறுகள் இழைத்திருப்பார்களாயின், அவற்றை நாமும் இழைத்தல் எளிது; ஒருசிலரைப்போல் கீழான நிலைக்கு இறங்குதலும் கூடும். ஆனால், இவர்களைப் போல் உயர்வதுதான் அரிது. இவர்கள் கொண்ட உயர் கருத்துகளைச்—ஆழ்ந்த கருத்துகளைச் — சிறந்த கற்பனைகளை நாம் அடைவது கடினம். இவ்வாறு ஆராய்வதால் ''நம்மையே காட்டிக்'' கொள்கின்றோம். கவிஞர்களின் வாழ்க்கையில் நம்முடைய வாழ்க்கையைத்தான் காண்கின்றோம்; நம்முடைய குறைகளையும் நிறைவுகளையுமே இவர்களுடைய வாழ்க்கையிலும் காண்கின்றோம். அதற்குமேல் நம்மாலும் எட்டமுடிவதில்லை. 'கவிஞர்களும் நம்மைப்போல் மனிதர்களே' என்ற எண்ணத்தை மாணாக்கர்களிடம் நிலவச் செய்யவேண்டும் என்று நாம் விரும்பினால், அதற்காகக் குறைகளைக் காண்பதில் அரும்பாடு பட வேண்டியதில்லை. கவிஞனைத் துணிவதற்கு நாம் யார்? கவிஞர்கள் படைப்புகளின் அழகுணர்ச்சி, அவர்கள் கூறும் வாழ்க்கையுண்மைகள் ஆகியவற்றின்முன் நாம் நிற்கமுடியுமா? இளங்கோவடிகள் போன்றவர்கள் கூறும்,

10. நூலக வசதிகள் பள்ளியில் இருக்கவேண்டும் என்பது சொல்லாமலே பேர தரும்.

அரசியல் பிழைத்தோர்க்கு அறம்கூற் றாவதூஉம்
உரைசால் பத்தினிக்கு உயர்ந்தோர் ஏத்தலும்
ஊழ்வினை உருத்துவந்து ஊட்டும்என்பதூஉம்[11]

போன்ற நிலையான உண்மைகளின்முன் நாம் தலை வணங்கு வதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? இவை மட்டிலும் சிறந்தவை என்பதில்லை. அவர்கள் எத்தனையோ உயர்ந்த கருத்துகளை எண்ணியிருந்திருக்கலாம். ஒன்றிரண்டு மட்டிலும் தான் சொல் வடிவம் பெற்று வெளிபட்டிருக்கலாம். ஷெல்லி என்ற ஆங்கிலக் கவிஞர் கூறியது ஈண்டு சிந்திக்கற்பாலது: "கவிஞனின் படைப்பு எழுத்து வடிவம் பெறும்பொழுது, அகத் தெழுச்சி (Inspiration) ஏற்கெனவே தாழ்ந்து விடுகின்றது; இவ்வுலகத்திற்குக் கிடைக்கும் மிகச் சிறந்த கதையும் கவிஞனின் புதுப்போக்குடைய கருத்துகளின் வலியிழந்த நிலையாகும்."[12] எனவே, கவிஞனை அவனுடைய பாடல்களிலேயே காணும் வாய்ப்புகளை நாம் சிறுவர்கட்கு நல்குதல் வேண்டும்.

3. திறனாய்தல்: நாம் எதைப் படித்தாலும் அதனைத் திறனாய்ந்தே உணர்கின்றோம். இத்தகைய திறனாய்தல் திறன் மாணாக்கர்களிடமும் வளரவேண்டும்; ஆசிரியர்கள் அதற்கேற்ற வாய்ப்புகளை நல்குதல் வேண்டும். சாதாரணமாகத் 'திறனாய்தல்' என்பது தவறாகவே உணரப்பெறுகின்றது; தொடக்கத்திலிருந்தே ஆசிரியர் மாணாக்கர்களிடம் கவிதை களைத் திறனாய்பவரின் உண்மையான செயல், அவற்றில் அழகையும் உண்மையையும் காண்பதேயாகும் என்பதைத் தெளி வாக்கி விடுதல் வேண்டும். கவிதையாயினும் வாழ்க்கையாயினும் திறனாய்வாளனுக்கு ஒரே ஒரு கடமை—ஒரு குறிக்கோள்— உண்டு; அதில் அழகையும் உண்மையையும் காண்பதே அது. மாணாக்கரோ ஆசிரியரோ இதை உணர்வதைவிட வேறு என்ன சிறந்த படிப்பினையைப் பெறுதல் கூடும்? சில சமயம் திறனாய் வாளன், குறைகளையும் சுட்டிக்காட்ட வேண்டிய நிலைமையும் ஏற்படலாம்; ஆனால், அவ்வாறு செய்வது குறைகாண்பதில்தான் கொண்டுள்ள காதலால் அன்று என்றும், உண்மையின்மீது தான் கொண்டுள்ள காதல் காரணமாகவே அவ்வாறு செய்வதாகவும் நாம் உணரவேண்டும். அழகின் நடுவே காணப்பெறும் உண்மை தான் பொலிவுடன் திகழும்என்பதை நாம் வற்புறுத்த வேண்டிய தில்லை. குறை காண்பதையே நோக்கமாகக் கொண்டுள்ளவர்,

11. சிலப்பதிகாரம்; பதிகம்-வரி 55-57.
12. Shelley: *Defence of Poetry*.

பிறருடைய குறைகளைச் சுட்டிக்காட்டுவதிலேயே மகிழ்ச்சியடை கின்றவர், நம்முடைய சிறுமையைத்தான் காட்டிக் கொள் கின்றார் என்பது வெளிப்படை. அவரால் பொருள்களின் உயிர் நாடியை—இதயத்தை—ஒருநாளும் நன்கு உணரமுடியாது. அவர் பெருங்கவிஞர்களின் நட்பை எப்பொழுதும் பெறவே இயலாது. கவிஞர்களும் தம்மைபோல மனிதர்களே என்று காட்டும் ஒன்றில் மட்டிலுமே அவருடைய அக்கறை செல்லும். சுருங்கக் கூறினால் தம்மையே அவர்களிடம் காண்கின்றனர்; தம் குறைகளையே அவர்களிடமும் காண்கின்றனர். இத்தகைய திறனாய்வாளர் வடையை உண்ணும் செயலை விட்டு அதன் துளையை எண்ணிக் கொண்டே நேரங்கழிக்கும் பேர்வழிகளைப் போன்றவர்கள்.

உண்மையான திறனாய்வாளர் கவிதைகளைத் துய்க்கும் ஆற்றல் பெற்றவர்; அவர் கவிதைகளில் உண்மையும் அழகையுமே காணமுனைவார்; தாம் காணும் ஒரு சில குறைகளை ஒரு பக்கம் ஒதுக்கிதள்ளிவிட்டுக் கவிதைகளைப் பாடிய கவிஞர்களின் அருகில் வாழ விரும்புவார்; அவர்களுடைய பெருமையில் தம்மையும் வைத்துக் காண விழைவார். இவ்வாறு ஆராயும் திறன் எளிதில் கைவரப்பெறுவது அன்று. இதற்குப் பயிற்சியும் வேண்டும்; ஒழுங் கும், கட்டுப்பாடும் வேண்டும். பலகாலம் ஒழுங்காய்க் கட்டுப் பட்டுப் பயின்ற இலக்கியப் பயிற்சியுடையவர்க்கே இத்திறன் வாய்க்கப்பெறும். குறைகளைக் காண்பது மிகவும் எளிது; கம்பன், இளங்கோ போன்ற மேதையரிடமும் குறைகளைக் கண்டுவிட லாம். ஆனால், அவர்களைப்போல் உன்னத நிலையிலிருந்து கொண்டு மானிட வாழ்க்கையைப் பரந்துகாணும் திறனையாவர் பெறமுடியும்? கவிதைகளில் பொருள்களின் தன்மையைவிட அக் கவிதைகளைப் பாடிய கவிஞர்களின் உணர்ச்சிகளே சிறப்பிடம் பெறுகின்றன; அவர்கள் காணும் அழகும் வாழ்க்கை உண்மை களுமே நம் உள்ளத்தைக் கொள்ளைக் கொள்ளுகின்றன.

கவிஞர்கள் அவ்வப்போதைய மனநிலைக்கேற்ப, அவ்வக் காலத்துச் சூழ்நிலைக்கேற்பப் பல்வேறுபட்ட உணர்ச்சிகளை யுடையவராயிருப்பர். இத்தகைய வேறுப்பட்ட உணர்ச்சிகளைக் கொண்டு தாம்மேற்கொண்ட பொருள்களின் அழகைக் கற்பனை செய்து பாடுவதனால்தான், அக்கவிதையில் புதுப்புதுக் காட்சி களைக் காணமுடிகின்றது; நாமும் அக்காட்சியில் அழகில் ஈடு பட்டு அநுபவிக்கின்றோம். இடையிடையே காணும் வாழ்க்கை யைப்பற்றிய உண்மைகள் நம்மை வியப்புக் கடலில் ஆழ்த்துகின் றன பழைய பாஞ்சாலி சபதத்தையே பாரதி புதுமெருகு கொடுத் துப் பாடியுள்ளமை இதற்கு எடுத்துக்காட்டாகக் கொள்ளலாம்.

யாப்பமைதி, சுவை வேறுபாடு முதலியவற்றை இக் காலத்திற் கேற்றவாறு அமைத்திருப்பதால் அது பொதுமக்கள் 'சுவைக்கும் காப்பியமாகத் திகழ்கின்றது. காவியத்தில் காணப்பெறும் சில அபூர்வக் கற்பனைகள், கனிந்தநாடகத் தன்மை, இடத்திற்கேற்ற யாப்பு அமைதி முதலிய கூறுகள் கல்விச் செருக்குடைய புலவர் களையும் களிப்பிக்குமாறு அமைந்துள்ளன. கவிதை பயிற்றும் ஆசிரியர் இத்தகையவற்றைக் காணும் திறனைத் தம் மாணாக்கர் களிடம் வளர்க்கவேண்டும். பாரதியின் 'கண்ணன் பாட்டு' போன்ற பாடல்களில் உள்ளம் குழைந்து அநுபவிக்கும் பழக் கத்தை உண்டாக்க வேண்டும். இக்காலக் கவிஞர்கள் பாடிய பாடல்களைக் கொண்டு மாணாக்கர்களிடம் நல்ல கவிதையநு பவத்தை வளர்த்து இடைக்கால, முற்காலக் கவிதைகளைத் துய்க்கும் பழக்கத்திற்குக் கொண்டு செலுத்தலாம். மாணாக்கர் களின் பெருமையெல்லாம் அவர்கள் வாழ்க்கையில் காணும் உண்மையின் அளவையும், கவிதைகளில் அவர்கள் காணும் அவர்களுடைய கவிதைத் திறன் அளவையும் பொறுத்தது என் பதை அடிக்கடி வற்புறுத்தவேண்டும்.

ஆசிரியரின் அன்றாடப் பள்ளி வாழ்க்கையிலிருந்தே இதற்கு ஓர் எடுத்துக்காட்டு தரலாம். மாணாக்கர்கள் எழுதும் கட்டுரைப் பயிற்சிகளைத் திருத்தும் ஆசிரியர்கள் அவர்கள் செய்த பிழை களையெல்லாம் சிவப்புக் கோடுகளால் சுட்டிக்காட்டித் திருத்து வதை நாம் அறிவோம். கட்டுரைத் திருத்தும் வேலை ஆசிரியரின் வாழ்க்கையின் ஒரு சுவையற்ற பகுதி என்பதும் நமக்குத் தெரியும் திருத்தப்பெற்ற தாம் எழுதிய கட்டுரையையே திரும்பப் பார்ப்ப தென்பது மாணாக்கரின் பள்ளி வாழ்க்கையின் ஒரு சுவையற்ற பகுதியாகும்; நம்முடைய மாணாக்கர் வாழ்க்கையைப் பின்னோக் கிப் பார்த்தால் இவ்வுண்மை நன்கு விளங்கும். இதற்குக் காரணம் என்ன? குறை காணும் மனப்பான்மையே இந்நிலைமையை உண்டாக்குகின்றது. இதனால் இளம் எழுத்தாளர்களை ஊக்கு விக்க வேண்டும் என்ற தம் முக்கிய நோக்கத்தைக் ஆசிரியர் மறந்துவிடுகின்றார். அவர்களை உற்சாகபடுத்தவேண்டும் என்ற எண்ணமே ஆசிரியரிடம் எழாமல் போகின்றது. ஆசிரியர் கட்டு ரையில் உள்ள குறைகளை எடுத்துகாட்டுவதற்குப் பதிலாக மாணாக்கர் எழுதிய கட்டுரையின் நல்ல கூறுகளையும் மட்டிலும் எடுத்துக்காட்டினால், மாணாக்கர்களும் தம் குறைகளைத் திருத்திக்கொள்வதில் ஆர்வங் காட்டுவர், ஒரு சில எழுத்துப் பிழைகள், சந்திப் பிழைகள், வாக்கியப் பிழைகள், கருத்துக் குழப்பம் ஆகியவை இல்லாவிட்டால், அவர்கள் கட்டுரை மிகச் சிறப்பாக அமைந்திருக்கும் என்று வற்புறுத்தினால், மாணாக்கர்

கள் தம் எழுத்து வேலையில் அதிக ஆர்வங்காட்டுவர்: சிறந்த படைப்புகளையும் உண்டாக்க முயலுவர், தம்மைவிட ஆசிரியர் தாம் கருதியவற்றை நன்றாக அனுகும் திறனுள்ளவர் என்பதை மாணாக்கர்கள் நன்கு புரிந்து கொண்டால், அவர்கள் நற்படைப்பை விரைவில் அணுகுவர். இந்த மனப்பான்மை மாணாக்கர்களிடம் உண்டாக்குவது ஆசிரியரின் திறனைப் பொறுத்தது. எனவே, கட்டுரை திருத்தும் வேலை மாணாக்கர் எழுத்து வேலையைப் பரிவுடன் அணுகும் அடிப்படையில் அமைந்தால், அஃது உண்மையான திறனாய்வாகின்றது; ஆசிரியரும் உண்மையான திறனாய்வாள ராகின்றார். இத்தகைய ஒருமுறையையே கவிதை பயிற்றலிலும் மேற்கொள்ள வேண்டும்.

தொடக்கத்திலிருந்தே மாணாக்கர்கள் கவிதைகளில் அழகையும், அவ்வழகினூடே கவிதை உண்மையையும் காணும் பழக்கத்தையும் ஆசிரியர்கள் வளர்க்க வேண்டும்.

ஏட்டைத் துடைப்பது கையாலே—மன
வீட்டைத் துடைப்பது மெய்யாலே
வேட்டை அடிப்பது வில்லாலே—அன்புக்
கோட்டை பிடிப்பது சொல்லாலே.[13]

என்ற பாட்டில் வந்த ஒலியே திரும்பத் திரும்ப வருவதைத் தொடக்கநிலைப் பள்ளி மாணாக்கர்கள் நன்கு சுவைப்பர். பாட்டின் ஒலிநயமே அவர்கள் காதுக்கு இன்பம் அளிக்கும்; கருத்தும் அவர்கள் நிலைக்கேற்றவாறு அமைந்துள்ளது. கவிதையைப் படித்து அநுபவிக்கும் பழக்கம் சிறிது வளர்ந்ததும், கீழ்கண்ட பாடல்களைப் போன்றவை அவர்கள் மனத்தைக் கவரும்.

வாய்முத்தம் தாராமல்
 மழலையுரை யாடாமல்
சேய்கிடத்தல் கண்டெனக்குச்
 சிந்தைதடு மாறுதையா;

முகம்பார்த்துப் பேசாமல்
 முலைப்பாலும் உண்ணாமல்
மகள்கிடக்கும் கிடைகண்டு
 மனம்பொறுக்கு தில்லைஐயா

நீடும் மதியினைப்போல்
 நிலவெரிக்கும் செல்வமுகம்
வாடிநிறம் மாறியதென்
 வயிற்றில்எரி மூட்டுதையா

13. பாரதியார்: அம்மாக்கண்ணு பாட்டு.

'பின்னி முடிச்சிடம்மா
பிச்சிப்பூச் சூட்டிடம்மா'
என்னும் மொழிகள் இனி
எக்காலம் கேட்பன் ஐயா

நெஞ்சில் கவலையெல்லாம்
நிற்காமல் ஓட்டும் அந்தப்
புன்சிரிப்பைக் காணாது
புத்திதடு மாறுதையா[14]

என்று மகன் இழந்த தாய் புத்தரிடம் முறையிடுவதாகக் **கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை** பாடியுள்ள பாட்டுகளை அவர்கள் சுவைப்பர். பாட்டின் துயர உணர்ச்சி அவர்கள் உள்ளத்தைக் கவரும். பாட்டின் வடிவமும் ஒலியமைப்பு முறையும் எளிமையாக இருப்பதால் மாணாக்கர்கள் அவற்றை விரும்பிப் படிப்பர்.

கீழ் வகுப்புகளில் மேற்கூறிய பாடல்களைப் போன்ற எளிமையான பாடல்களை அதிகமாகப் படித்துப் பழக்கம் ஏற்பட்டால், திறனாய்தல் பழக்கம் தானாக அமைந்துவிடும். ஏராளமான பாடல்களைப் படித்துச். சுவைத்து அநுபவித்த பிறகு 'திறனாய்வு' தானாக முகிழ்க்கும். மகிழ்ந்து அநுபவித்தால்தான் எது மகிழ்ச்சி தருகின்றது என்பதைக் காணல்கூடும். அப்பொழுது தான் திறனாய்தல் உறுதியாக, அவர்கள் தரும் விளக்கமாக, அவர்களின் அநுபவமாக, வெளிப்படும். இதுவே கவிதைகள் அவர்கள் உள்ளத்தைத் தொட்டதற்குத் தகுந்த அறிகுறியாகும். இப்போதுதான் அவர்கள் கவிதையின் உண்மையை உணர்வர்; அதன். முருகுணர்ச்சியில் ஈடுபடும் திறனும் அவர்களிடம் ஏற்படும். இத்தகைய ஒரு நிலை மாணாக்கர்களிடம் எப்பொழுது ஏற்படும்? அஃது ஆசிரியர் அவர்கட்குக் கவிதை பயிற்றுவதைப் பொறுத்தது; சிறப்பாக அவர் பயிற்றுதலில் மேற்கொள்ளும் முறைகளையும் பொறுத்தது.

**4. தொகை நூல்கள்:** தாய்மொழியைக் கற்பிக்கும் ஆசிரியர்கள் சிறுவர்களிடம் கவிதைச் சுவையை வளர்ப்பதற்கு மேற்கொள்ளும் முறைகளுள் ஒன்று அவர்களிடம் 'தொகைநூல்களை'[15]த் தொகுக்கும் பழக்கத்தை உண்டாக்குவதாகும். இன்று கீழ் வகுப்பு மாணாக்கர்களும் படிப்பதற்கேற்றவாறு பெரும்பாலும் எல்லாப் பருவ வெளியீடுகளிலும் **''சிறுவர் பகுதி''**

14. கவிமணி; ஆசியஜோதி
15, தொகைநூல்-Anthloogy

தனியாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. அதில் கதைகள், கவிதைகள் கட்டுரைகள், விடுகதைகள் முதலியவை காணப்பெறுகின்றன. தவிர, குழந்தைகட்கென்றும் சிறுவர்கட்கென்றும் பல சிறு கவிதை நூல்களும் வெளிவருகின்றன. இவற்றை படிக்கும் இளம் மாணாக்களிடம் அவர்கள் மிக விரும்பிச் சுவைத்த கவிதைகளைத் தொகுத்து வைக்கும் பழக்கத்தை உண்டாக்கலாம். வாரத்திற்கு ஒரு கவிதை விதம் தொகுக்க வேண்டும் என்ற திட்டம் செயற் படச் செய்தால் ஆண்டொன்றுக்கு 52 கவிதைகள் சேர்ந்துவிடும். இஃது ஒரு சுமையான வேலையும் அன்று. வகுப்பில் கற்பிக்கும் கவிதைகளைத் தவிர இவை மிகையாகச் சேர்க்கப் பெற வேண்டியவை. நான்காம் வகுப்பிலிருந்து இப்பழக்கத்தை ஏற் படுத்திவிட்டால் பதினொன்றாம் வகுப்பு முடியும் பொழுது கிட்டத்தட்ட 500 கவிதைளை மாணாக்கர்கள் புதிதாகத் தெரிந்து கொண்டு விடுவர். சுவைக்கும் பழக்கமும் அவர்களிடம் நன்முறையில் அமைந்துவிடும்.

இம்மாதிரித் தொகுக்கும் கவிதைகளை ஒரு குறிப்பேட்டில் எழுதுவதைவிட ஒரே அளவுள்ள தனித்தனித் தாளில் எழுதுவது சிறந்தது; அதுவும் ஒரே பக்கத்தில்தான் எழுதவேண்டும் என்ற முறையையும் மேற்கொண்டால் பின்னும் அது சிறக்கும். இவ் வாறு எழுதப்பெற்ற தாள்களை இரு தொளையிட்டு இரண்டு அட்டைகளுக்கிடையில் கோத்து வைத்துக்கொள்ள வேண்டும். கவிதை எங்கிருந்து எடுக்கப்பெற்றதோ அதுபற்றிய குறிப்பையும், கவிதையின் பொருள்பற்றிய தலைப்பையும் குறிக்கவேண்டும். கவிதையைத் தொகுத்த தேதியும் இருந்தால், 'தொகை நூல்' வளரும் விவத்தைக் காண்பதற்குத் தெளிவாக இருக்கும். தாய் மொழியாசிரியர்களும் இத்தகைய பழக்கத்தை மேற்கொள்ள லாம். இவர்கள் தாம் கற்பிக்கும் வகுப்புகட்கேற்றவாறு பல்வேறு நூல்களிலிருந்து பல்வேறு பொருள்கள் பற்றியும், சுவைகள்பற்றி யும் கவிதைகளைத் தொகுத்துவைத்தல் சாலப் பயன்தரும். ஆனால், மாணாக்கர்களிடம் இத்தகைய 'தொகை நூல்' வளர் வதை ஆசிரியர் கண்ணுங் கருத்துமாகக் கவனிக்கவேண்டும்.

மேற்குறிப்பிட்ட பழக்கத்தின் இன்றியமையாமையைச் சிறு வர்களின் சொற்களஞ்சியத்தைக்கொண்டு விளக்கலாம். தமிழ் அகராதியில் இலட்சக்கணக்கான சொற்கள் உள்ளன. அவற்றுள் ஒரு குறிப்பிட்ட எண்ணிக்கையுள்ள சொற்களை மட்டிலுந்தான் ஒரு மாணாக்கன் அறிவான் என்பது அவனுக்குத் தெரியும் அதிலும் அவன் கையாளும் சொற்கள் இன்னும் குறைந்த எண்ணிக்கையில்தான் இருக்கும். இங்ஙனம் மொழியின் ஒரு

பகுதியே அவனிடம் "வாழ்கின்றது"; அவனுக்குப் பயன்படவும் செய்கின்றது. அவன் கல்வி வளரவளர, கருத்துகளை வெளியிடும் தேவையும் வளர்கின்றது: ஆனால், ஒருவருக்குத் தெரிந்த சொற்களில் குறைந்த அளவுள்ள சொற்களே அவர் கையாளுவனவாக இருக்கும்; இது மொத்தச் சொற்களஞ்சியத்தில் மிகச் சிறு பகுதியே. இவ்வாறு ஒரு மாணாக்கர்களிடம் வாழும் இந்த மொழிப்பகுதியை நாம் அவனுடைய "சொற்களஞ்சியம்" என்று குறிப்பிடுவோம். மொழிப்பாடத்தில் இந்தச் சொற்களஞ்சியத்தைப் பெருக்குவதே மொழியாசிரியரின் நோக்கமாக இருக்கும். இதனால் கருத்துகளைத் தெளிவாகவும் எளிதாகவும் வெளியிடும் திறன் மாணாக்கனிடம் வளரும்.

மேற்கூறிய சொற்களஞ்சிய வளர்ச்சி முறையையே கவிதையிலும் கொண்டுசெலுத்தலாம். மாணாக்கன் ஏராளமான கவிதைகளைப் படித்திருக்கலாம். இம்முறையினாலும் அவனுக்குப் பல கவிதைகளைத் தெரியும் வாய்ப்பு நேரிடும். ஆனால், சரியான முறையில் அவன் அறியும் கவிதைகள், அஃதாவது அவன் அடிக்கடிப் படித்துப் படித்துச் சுவைக்கும் கவிதைகள் மிகக் குறைந்த எண்ணிக்கையாகவே இருக்கும். ஒரு சில கவிதைகளே அவன் அன்றாடத் தேவைக்குப் பயன்பட்டு அவனிடம் 'வாழும்''. இந்தக் குறை எண்ணிக்கைக் கவிதைகளே அவனுடைய கவிதைத் தொகுப்பாகும்; இவை அடங்கிய தொகுப்பையே நாம் மேலே 'தொகை நூல்' என்று குறிப்பிட்டோம். மாணாக்கனுடைய கல்வியின் தரத்திற்கேற்றவாறு இத்தொகுப்பு நூலின் தரமும் அமையும். கவிதைப் பாடத்தில் தேர்வு வைப்பதைவிட இம்முறையில் கவனம் செலுத்துவது நிறைந்த பயன் அளிக்கும். கவிதைப்பாடத்தில் மேற்கொள்ளப்பெறும் தேர்வு முறையில் இம்மாதிரியான தொகை நூலுக்கு மதிப்புத் தருவதில்லை. மாணாக்கர்கள் ஆழ்ந்து சுவைத்த கவிதைகளைபற்றிச் சிறிதும் கவனம் செலுத்தாது, மேம்போக்காகத் தெரிந்தவற்றிற்கே மதிப்பெண்கள் வழங்கப்பெறுகின்றன. முதல் வகுப்பில் தேர்ச்சி பெற்ற பட்டதாரிகளிடங்கூட 'கவிதையநுபவமே' இருப்பதில்லை. கவிதைச் சுவை என்றால் 'கிலோ எவ்வளவு?' என்று கேட்கக் கூடிய பலரை நாம் காணத்தான் செய்கின்றோம்.

கீழ் வகுப்புகளிலிருந்தே 'தொகை நூலை' வைத்துக் கொள்ளும் பழக்கத்தை வளர்த்துவிட்டால், கவிதைச்சுவை அவர்களிடம் நிலையாகவே அமைந்துவிடும். கவிதையநுபவம் நம்

நாட்டின் பண்பாட்டிற்கு இன்றியமையாதது என்பதை நாம் உண்மையாகவே கருதினால், சிறுவர்களிடம் 'தொகை நூல்' வளர்க்கும் பழக்கத்தில் மொழியாசிரியர்கள் அதிகக் கவனம் செலுத்தவேண்டும். கவிதைச் சுவையில் ஈடுபடும் பழக்கம் மாணாக்கர்களிடம் நன்கு அமைந்துவிட்டால் அவர்கள் வாழ்க்கைத் துறையில் நுழைந்த பிறகும், வேலையிலிருந்து நீங்கி ஓய்வுபெறும் காலத்திலும், முதுமை காரணமாக அவலக் கவலையாலும் தளர்ச்சியாலும் துன்பப்படும் காலத்திலும் இக்கவிதைச் சுவை அவர்களிடம் இளமையுணர்ச்சியையூட்டுவதுடன் மட்டில்லாத மகிழ்ச்சியையும் அளிக்கும். அன்றியும், இவ்வுலக வாழ்வில் வயிற்றுப் பிழைப்புக்காகப் பல துறைகளில் கிடந்துழன்று உழைத்து அலுத்துப்போகும்போது தோன்றக் கூடிய வெறுப்பை இக்கவிதை இன்பம் போக்கிவிடும்; அன்றாட வாழ்க்கையில் நேரிடக் கூடிய ஏமாற்றங்களையும் இடர்ப்பாடுகளையும் இன்பமாக ஏற்றுக்கொள்ளவேண்டும் என்ற உண்மையை இக் கவிதைகள் நமக்கு அடிக்கடி நினைவூட்டும்.

> நன்றாங்கால் நல்லவாக் காண்பவர் அன்றாங்கால்
> அல்லற் படுவது எவன்?[16]

என்பன போன்ற பொன்மொழிகள் மன அமைதிக்குச் சிறந்த மருந்துபோல் உதவும்.

மொழியாசிரியர்கள் மனம் வைத்தால் முடியாதது ஒன்றும் இல்லை. கல்வி முடிந்து மாணாக்கர்கள் மொழியாசிரிடமிருந்து விடை பெறுங்கால் ஒவ்வொவரிடமும் உயர் கவிதைகள் அடங்கிய 'தொகைநூல்' ஒவ்வொன்று இருக்கும்; இந்நூல் அவர்களிடம் என்றும் நிலைத்து வாழும்; அதிலுள்ள கவிதைகள் அவர்களின் அன்றாடத் தேவைக்குப் பெரிதும் உதவும். இக் கவிதைகளைப் புரட்டும்பொழுதெல்லாம் அவர்கட்குத் தம்முடைய ஆசிரியரின் நினைவு எழும். அக் கவிதைகளைப் படித்துச் சுவைக்கும்பொழுதெல்லாம் அக்கவிதைகளினியிடையே தமக்குத் தோன்றாத் துணையாக இருந்த ஆசிரியரின் குரலும்ஒலிக்கும். வறுமையாலும் பிற தொல்லைகளாலும் துன்புறும் ஆசிரியருக்கு இதைத் தவிர ஆறுதல் அளிக்கக்கூடியது வேறு என்ன உள்ளது?

16 குறள்-379.

பொருப்பிலே பிறந்து, தென்னன்
புகழிலே கிடந்து, சங்கத்து
இருப்பிலே இருந்து, வையை
ஏட்டிலே தவழ்ந்த பேதை
நெருப்பிலே நின்று, கற்றோர்
நினைவிலே நடந்துஓர் ஏன
மருப்பிலே பயின்ற பாவை
மருங்கிலே வளரு கின்றாள்.[17]

கவிதை பயிற்றும் முறை முற்றும்.

17, வில்லிபாரதம்-சிறப்புப் பாயிரம்-செய், 1

பின்னிணைப்பு–1

# பயன்பட்ட நூல்கள்

## (அ) ஆங்கில நூல்கள்


Alexander Haddow : On the Teaching of Poetry.
Ballard, P. B. : Thought and Language.
Boaz, G. D. : Elements of Psychology
,, : Educational Psychology
,, : General Psychology
Bossing, Nalson L. : Progressive Methods of Teaching in Secondary Schools.
Gardiner Murphey : An Introduction to Psychology
George Sampson : English for the English (Cambridge University Press).
,, : Literaturein the Class Room
Guilford, J. P. : General Psychology
Hudson, W. H. : An Introduction to the Study of Literature.
Hughes and Hughes : Learning and Teaching
Lewis, M. M. : Language in Schools.
Munn, Norman, L. ; Psychology-The Fundamentals of Human Adjustment.
Nancy Catty : A First Book on Teaching.
Murray, G. : The Interpretation of Ancient Greek Literature.
Prichard, F. H. : Training Literary Appreciation
Ross, James, S. : A Groundwork of Educational Psychology.
Skinner, Charles, E. : Educational Psychology.
Valentine, C. W. : Psychology and Its Bearing on Education.
Woodworth, Roberts and Marques, Donald, S. : Psychology
Sholley : Defence of Poetry.

## (ஆ) தமிழ் நூல்கள்

| | |
|---|---|
| ஆழ்வார்கள் | : நாலாயிரத் திவ்வியப் பிரபந்தங் |
| இராமலிங்க அடிகள் | : திருவருட்பா (1—6) திருமுறைகள். |
| இராஜேசுவரி ஈ. த. | : குழவி உள்ளம் |
| இளங்கோ அடிகள் | : சிலப்பதிகாரம் |
| எட்டுத் தொகை | : அகநானூறு |
| ,, | : ஐங்குறுநூறு |
| ,, | : குறுந்தொகை |
| ,, | : நற்றிணை |
| ,, | : புறநானூறு |
| கம்பர் | : கம்பராமாயணம் |
| ,, | : சடகோபர் அந்தாதி |
| கலைக் களஞ்சியம் | : தொகுதி —(2) |
| கல்யாண சுந்தர முதலியார் திரு. வி. | : முருகன் அல்லது அழகு |
| கவிமணி தே. வி | : ஆசிய ஜோதி |
| ,, | : மலரும் மாலையும் |
| குமரகுருபர அடிகள் | : பிரபந்தத் திரட்டு |
| சிவஞான முனிவர் | : காஞ்சி புராணம் |
| சுப்பிரமணிய சாஸ்திரி வி. எச். | : நவ ரசங்கள் |
| சுப்புரெட்டியார், ந | : தமிழ் பயிற்றும் முறை (மூன்றாம் பதிப்பு) |
| ,, | : கலிங்கத்துப்பரணி ஆராய்ச்சி |
| ,, | : பரணிப் பொழிவுகள் |
| ,, | : கல்வி உளவியல் |
| ,, | : காலமும் கவிஞர்களும் |
| ,, | : கவிதையநுபவம் (இரண்டாம் பதிப்பு) |
| ,, | : மானிட உடல் |
| சேக்கிழார் | : பெரிய புராணம் |
| திருத்தக்கதேவர் | : சீவக சிந்தாமணி |

| | | |
|---|---|---|
| திருவள்ளுவர் | : | திருக்குறள் (பரிமேலழகர் உரை). |
| தேவாரம் அடங்கன் முறை | : | 1—7 திருமுறைகள் |
| தொல்காப்பியர் | : | பொருளதிகாரம் (இளம்பூரணம், நச்சினார்க்கினியம், பேராசிரியம்) |
| பகழிக் கூத்தர் | : | திருச்செந்தூர் பிள்ளைத்தமிழ். |
| | : | பத்துப்பாட்டு |
| பாரதிதாசன் | : | அழகின் சிரிப்பு |
| ,, | : | பாரதிதாசன் கவிதைகள்-முதல்தொகுதி. |
| பாரதியார் | : | பாரதியார் கவிதைகள் |
| புகழேந்தி | : | நளவெண்பா |
| மாணிக்கவாசகர் | : | திருவாசகம் |
| ,, | : | தனிப்பாடல்திரட்டு |
| வில்லிபுத்தூராழ்வார் | : | வில்லி பாரதம் |
| வெள்ளை வாரணனார் | : | தமிழ் இலக்கிய வரலாறு-தொல்காப்பியம் |

## பின்னிணைப்பு-2

# கலைச்சொல் அகராதி

### A

Ability-ஆற்றல்
Abstraction-பொதுமைப் படுத்துதல்
Accent-உச்சரிப்பழுத்தம்
Action-செயல்
Adjustment-பொருத்தப்பாடு
Adult period-முதிர்ந்த பருவம்
Affection-உணர்வு நிலை
Age-வயது
  Mental-மனவயது
  Physical-உடல் வயது
Alligory-உள்ளுறை உவமம்
Alliteration-மோனை
Amnesia-மறவி
  Recall-மீள்நோக்கு மறவி
  Retention-இருத்துதல் மறவி
Ampivert-இருமுகர்
Appeal-முறையீடு
Appetite-விடாய், பசி
Arbitrary-ஒருதலை முடிவான
Architecture-சிற்பக் கலை
Aspect-கூறு
  Feeling-உணர்ச்சிக் கூறு
  Knowing-அறிவுக் கூறு
  Willing-முயற்சிக் கூறு
Attitude-மனப்பான்மை
Autobiography-தன்-வரலாறு

### B

Balance-சமனிலை
Base-அடித்தளம்
Beauty-அழகு, முருகு
Behaviour-நடத்தை
Biography-வாழ்க்கை வரலாறு

### C

Chairman-தலைவர்
Character-சால்பு
Characteristics-சிறப்பியல்புகள்
Cognition-அறிவு நிலை
College-கல்லூரி
Colour-வண்ணம், நிறம்
Conation-முயற்சி நிலை
Concept-பொதுமைக் கருத்து
Conclusion-முடிவு, முடிவுரை
Conflict-முரண்பாடு
Consciousness-நனவு நிலை
Convulsion-வலிப்பு
Courting-இணை பயிலுதல்
Critic-திறனாய்வாளர்
Cue-நினைவுக் குறிப்பு
Curriculum-கல்வி ஏற்பாடு

### D

Daydream- பகற் கனவு
Development-துலக்கமுறுதல்
Diagram-விளக்கப்படம்
Diction-சொல்வளம்
Didactism-அறங்கூறும் தன்மை
Disposition-மனநிலை
Doctrine-கோட்பாடு
Drive-உந்தல்
Duct-தூம்பு, நாளம்
Duplicate-இருமடியாக்கு

### E

Ease-தளர்வு, ஓய்வு
Ecstasy-கழிபேருவகை
Education-கல்வி
Eidetic-மீத்தெளிவான
Emotion-உள்ளக் கிளர்ச்சி
Empathy-ஒட்ட உணர்தல்
Environment-சூழ்நிலை
Epic-பெருங்காப்பியம்
Essence-சாறு, பிழிவு
Evil-கொடுமை
Excitement-இயல்பிகந்த கிளர்ச்சி
Experience-அநுபவம்
Explanation-விளக்கம்
Extract-சாரம்
Extrovert-புறமுகர்

### F

Faculty-புலம், மனவன்மை
Feeling-உணர்ச்சி
Feeling tone-உணர்ச்சி வேகம்
Figures of speech-அணிகள்
Findings-ஆராய்ச்சி முடிவுகள்
Forgetting-மறவி, மறத்தல்

### G

Gastric juice-அகட்டுநீர்
Generalisation-பொதுவிதி காண்டல்
Geometry-வடிவ கணிதம்

Gland–சுரப்பி
Adrenal-மாங்காய்ச்சுரப்பி
Ductless-தூம்பிலா (நாளமிலா)ச் சுரப்பி

**H**

Heart-குருதி ஈரல், இதயம்
Heredity–குடிவழி
Hyperbole-உயர்வு நவிற்சி
Hypothalamus-மேற்பூத்தண்டு
Hypothesis-கருதுகோள்

**I**

Idea-கருத்து
Ideal level-குறிக்கோள் நிலை
Ideation-கருத்து நிலை
Ideational activity-கருத்து நிலைச்செயல்
Idetic image–மீத்தெளிப் படிமம்
Image-படிமம், உருக்காட்சி
Imitative-போலச் செய்யும்
Impulse-உள் தூண்டல்
Individual-தனியாள்
Inhibition-உள் தடை
Initiative-தான் தொடங்காற்றல்
Insight-உள் காட்சி
Inspiration-அகத்தெழுச்சி
Intellect-அறிவாற்றல்
Intelligence–அறிதிறன்
Intelligent-அறிவுக் கூர்மையான
Intention-உள் நோக்கம்
Interference-குறுக்கீடு, தலையீடு
Interaction-இடைவினை
Introduction-அறிமுகம்
Introspection-அகக்காட்சி
Introvert-அகமுகர்
Irony-வஞ்சப் புகழ்ச்சி
Irrational–அறிவு சாராத

**J**

Journal-ஆராய்ச்சி வெளியீடு
Journey-பயணம்

**K**

Knowing–அறிதல்
Knowledge-அறிவு

**L**

Learning-கற்றல்
Local–உள்ளூர் சார்ந்த
Lungs–நுரையீரல்கள்

**M**

Meaning-பொருள், சொற்பொருள்
Means-வழிவகைகள்
Mechanism–பொறிநுட்பம்
Memory-நினைவு
Committing to memory-நெட்டுருச் செய்தல்
Memorization-மனப்பாடம் செய்தல்
Metaphor-உருவகம்
Metanomy-ஆகுபெயர்
Method-முறை
Biographical-வாழ்க்கை வரலாறு கூறும் முறை
Creating the atmosphere–சூழ்நிலை காட்டும் முறை
Explanatory-விளக்க முறை
Synthetic-தொகுத்தறி முறை
Metre-யாப்பு
Mood-உட்பாட்டு நிலை
Motive-ஊக்கி

**N**

Notes–உரை நூல்கள்

**O**

Onomatopoeic–ஒலிக்குறிப்புள்ள
Orbit-அயனப் பாதை
Organ–உறுப்பு
Organicsensations–உடலுணர்ச்சிகள்
Organic state உடல் நிலை
Organic states-உடல் நிலை மாறுபாடுகள்
Organism-உயிரி
Outer meaning-வெளிப்பொருள்
Overactive-அளவு மீறிச்செயற்படு
Oxygen-உயிரியம்

**P**

Pattern–கோலம்
Pause-இடைநிறுத்தம்
Perception-புலன்காட்சி
Personality-ஆளுமை
Personality trait-ஆளுமைக் கோலம்
Philosopher- மெய்விளக்கஅறிஞர்
Phonetic power-ஓசையாற்றல்

Phrase-சொற்றொடர்
Planet-கோள்
Poem-பாட்டு
Poetic sympathy-கவிப்பரிவு
Poetic value-கவிதை மதிப்பு
Poetry-கவிதை
 Didactic-அறங்கூறும்கவிதை
 Objective-புறப்பொருள் கவிதை
 Subjective-அகப்பொருள் கவிதை
Posture-உடற்கோலம்
Power-ஆற்றல்
 Phonetic-ஓசையாற்றல்
 Semantic-பொருளாற்றல்
Practice-பயிற்சி
Present-அவ்வப்பொழுதுள்ள
President-தலைவர்
Problem-பிரச்சினை, சிக்கல்
Profound-ஆழ்ந்த அறிவுள்ள
Pronuniation-உச்சரிப்பு
Prosody-யாப்பிலக்கணம்
Prose-உரை நடை
Prose poetry-வசனகவிதை
Pulse-நாடித் துடிப்பு

R

Reaction-எதிர்வினை
Reading-படித்தல்
 Oral-வாய்விட்டுப் படித்தல்
 Silent-வாய்க்குள் படித்தல்
Recall-மீள் நோக்கு
Recognition-மீட்டறிதல்
Relation-தொடர்புகள்
Relatively-ஒப்புமை சார்ந்த
Rebialility-நம்பகம்
Remembering-நினைவில் வைத்தல்
Research-ஆராய்ச்சி
Response-துலங்கல்
Rhyme, Rime-எதுகை
Rhythm-ஒலிநயம்

S

Selection-தேர்தல்
Semantic power-பொருளாற்றல்
Seminar-கருத்தரங்கு
Sensation-புலன்உணர்வு
Sense-கருத்து
Sentiment-பற்று, சுவை, ரஸம்
Sign-அடையாளம்
Simile-உவமை
Stanza-பாசுரம், செய்யுள் பத்தி
Stimulus-தூண்டல்
Stress-அழுத்தம்
Subject-பொருள்(அல்லதுபாடம்)
Subjective-அகவயமான
Suggestion-கருத்தேற்றம், இறைச்சி
Symbol-குறியீடு
Sympathy-ஒத்துணர்ச்சி

T

Teaching-கற்பித்தல், பயிற்றல்
Technique-துறைநுட்பம்
Tendency-உளப்போக்கு
Temperament-மீப்பண்பு, மனப்பான்மை
Tests-சோதனைகள்
Thalamus-பூத்தண்டு
Theorem-தேற்றம்
Theory-கொள்கை
Thinking-சிந்தனை
Thought-எண்ணம்
Tone-தொனி
Truth-உண்மை

U

Understanding-புரிந்துகொள்ளுதல்

V

Value-மதிப்பு
 Poetic-கவிதை மதிப்பு
Verse-செய்யுள்
Vicious cricle-பொல்லாங்கான வட்டம்

W

Will-மனஉறுதி
Word-சொல்

X

X-ray-புதிர்க்கதிர்கள்

## பின்னிணைப்பு-3

# பொருட்குறிப்பு அகராதி

(எண், பக்கஎண்)


**அ**

அகம்—38
அகலிகைப்படலம்—38
அகன்றபடிப்பு—72
அங்கதன்-83
அங்கதன் தூதுப்படலம்-75
அசுவத்தாமா-84
அச்சுக்கலை-41
அஞ்சொல்முனி புரோகிதன்-53
அடியார்க்கு நல்லார்-24
அணிநயம்-34
அதியமான்-32
அபிமன்யு-84
அமல நாரணன்-12
அம்பிகாபதி-45
அம்மாக் கண்ணுபாட்டு-114
அயோத்தியா காண்டம்-107
அரிஸ்டாட்டில்-80
அருணகிரிநாதர்-63
அருணாசலக் கவிராயரின் நாடகக் கீர்த்தனை-47
அர்ச்சுனன்-70,83
அலெக்ஸாந்தர் ஹேடோ-48
அல்லி அரசாணிமாலை-71
அவலக்கவலை-13
அவ்வையார்-32
அழகப்பா ஆசிரியர் பயிற்சிக் கல்லூரி-50
அழகின் சிரிப்பு-87,91
அழகின் மூலமே உண்மையைப் பெறுதல்-319
அழியா அழகு-90
அறங்கூறும் பண்பு-21
அறிதிறன் ஆய்வுகள்-21
அறிவியல்-80
அநுமன்-83

**ஆ**

ஆசியஜோதி-114
ஆசிரியக்கூறு-15
ஆசிரியத் துறையின் சிறப்பு-11
ஆசிரியரே வழிகாட்டி-66
ஆசிரியரின் பொறுப்பு-15
ஆசிரியரின் விளக்கம்-34
ஆசிரியர் அடையும் மகிழ்ச்சி-13
ஆசிரியரிடம்கவிதையநுபவம்-88
ஆசிரியர் சமூகம்-11
ஆசிரியர் பயிற்சிக்கல்லூரி-26
ஆசிரியர் பெறும் மகிழ்ச்சி-11
ஆட்டப்பாடல்கள்-19,20
ஆம்பல்-81
ஆழ்ந்த படிப்பு-72
ஆளுடைய அடிகள் அருள் மாலை-44
ஆனாயர்-17
ஆன்மாவைக் கொல்லும் பாவம்-82

**இ**

இசைப் பயிற்சி உள்ளவர்கள்-47
இசையும் பொருள் விளக்கமும்-46
இந்துமாதாபிமான சங்கம் காரைக்குடி-10
இயற்கையன்னை-90
இயற்கையன்னையின் கோரத்தாண்டவம்-41
இயற்கையில் தோய்ந்து கிடக்கும் அழகு-89
இரட்டைப் புலவர்கள்-108
இராசசூய யாகம் வேட்ட தருமன்-52
இராம—இலக்குமணர்கள்-107
இராமராசன் எஸ்.கே,-93
இராமலிங்கஅடிகள் -43
இராமன் -81,83
இராவணன்-8,45,83
இருத்துதலின் தத்துவம்-99
இருத்துதல்-95
இலக்குவன்-83
இல்லாளின் தொண்டு-13
இளங்கோ-22, 36, 84, 112
இளங்கோவடிகள்-110
இன்றியமையாத பழக்கம்-22
இன்றைய அவலநிலை-23

**உ**

உணர்ச்சியின் கொடுமுடி-45
உணர்ச்சியைப் பெறுதல்-49
உண்மை-80
'உண்மைக்காதல்'-86
'உண்மைநிலை'-23

உரை நூல்கள்'-24,76,
'உரை நூல்'-73,
உலக ஊழியனார்,வீ,-93
உலூகன்-51
உளவியல் உண்மைகள்-95
உள்ளூர்ப்பிரமுகர்-35

ஊ

ஊழிக்கூத்து-41
ஊழ்வலி-57

எ

எட்டுத் தொகை-19
எது உண்மையான குறிக்கோள்-84
'எந்நாட்கண்ணி'-81
எமகண்டம்'-108

ஏ

ஏற்றப்பாட்டுகள்-46

ஐ

ஐன்ஸ்டைன்-89

ஒ

ஒலிநயத்தின்சிறப்பு-43

க

கங்கைப் படலம்-107
கங்கை வேடன்-29
கடோற்கசன்-84
கட்டபொம்மன் கதை-71
கணிதம்-16
கண்ணன்-44, 51, 54,
கண்ணழித்தல்-49
'கண்ணன் பாட்டு'-113
கணியன் பூங்குன்றனார்-57
கதைப் பாடல்கள்-20
கம்பநாடன்-29,38,45,81,100,11
கம்ப ராமாயணம்-15,29,37,45 81,74,75
கம்பன்-8,22,27,29.84,87,
கருத்தரங்கு-50
கன்னன்-357
கலிங்கத்துப் பரணி-78
'கல்வி'-86
கல்வியின் பொருள்-86
கவந்தம்-82
கவிஞர்களின் வரலாறு-107
கவிஞர் வரலாறு கூறும் முறை-31
கவிஞன் குரல்-20
கவிதை அறிமுகம்-29
கவிதைச் சுவையின் கொடுமுடி-49
கவிதைத் தொகுப்புகள்-20
கவிதைப்பாடம்'-50
கவிதையின் உண்மை-25
கவிதைக் கழகம்-78
கவிதை
இயற்றலின்நோக்கம்-3
உணரும் நிலை-9
படித்தல்-63
முருகுணர்திறன்-4
கவிதையைப் படித்தலே முக்கியம்-70
'கவியரங்கம்'-91
கவிமணி-66
கற்பனை நயம்-34
'கற்பிக்கும் சடங்கு'-24
கற்பிக்கும் தொழில்-48
கற்பிக்கும் முறை-36
கற்பிப்பவர் தகுதி-9
கற்றலில் ஆர்வம்-95
கன்னன்-11,44

கா

காதல் புரிதல்-48
காரைக்குடி-50
கால இடையீடு-97
காவடிச் சிந்து-43,66
'காவடிச் சிந்து'-64
காவியங்கள்-103
காவியமாந்தர்கள்... பிரதிநிதிகள்-83
கவிதையநுபவம்-65
கவிதையின் சூழ்நிலை-52, 57
கவிதையின் சூழ்நிலையை உண்டாக்கல்-59
கவிதையைத் தேர்ந்தெடுத்தல்-19
கவிதைகளை வாய்விட்டுப் படித்தல்-63
'காளமேகம்'-109
கானல் நீர்-85

கி

கிட்கிந்தா காண்டம்-103
கிண்டல் செய்யும் மனப் பான்மை-85
கிருட்டிணன் தூதுச் சருக்கம்-51

கிளிக் கண்ணி-64
கீ
கீதாச்சாரியன்-15
கு
குகப் படலம்-15
குஞ்சர ராசன்-15
குடும்ப விளக்குகள்-13
குமுதம்-81
கும்மிப் பாட்டு-66
குயில் பாட்டு-35
குரு நாடு-54
குவளை-81
'குளோப் ஜாமுன்'-25
குறள்-15,38,84, 118
குறிக்கோள்கள்-38
குற்றாலக் குறவஞ்சி-78
கை
கைகேயி-29
கைகேயி குழ்வினைப் படலம்-96
கோ
கோசலை-29
கோடி-81
கோபாலகிருஷ்ணபாரதியின் நந்தனார் சரித்திரம்-47
ச
சங்க இலக்கியங்கள்-103
சங்ககாலப்பாடல்கள்-21
சங்கப்பாடல்கள்-33
சங்கம்-81
சஞ்சயன்-50,52
சடகோபரந்தாதி-106
சமுத்திரம்-81
சா
சாமிநாதய்யர், உ. வே. டாக்டர்-92
சி
சிந்தாமணி-22, 24, 97
சிலப்பதிகாரம்-27, 49,74,83,1
சிலரது தவறான முறை-42
சிலேடைச் செய்யுட்கள்-33
சில்லறைப் பிரபந்தங்கள்-76
சிறந்த மாணாக்கர்கள்-27
சிறுகாப்பியங்கள்-76
சீ
சீட்டுக்கவி-76
சீதை களங்காண்படலம்-8
சீவக சிந்தாமணி-74,83
சீவகன்-24
சிவான்மா-55
சு
சுதந்திர தேவியின் துதி-67
சுப்புரெட்டியார் ந-59
சுமித்திரை-29
சுர அடையாளங்கள்-63
சுவைக்கும் பழக்கம்-
சூ
சூளாமணிப்படலம்-29
சூர்ப்பணகை-83
செ
செயங்கொண்டார்-22
செயங்கொண்டான்-87
செய்யுளிலக்கணம்-104
செவிலிப் பாடல்கள்-19
சே
சேக்கிழாரின் ஓவியம்-17
சேக்கிழார்-22,84,87
சொ
செகப்பிரியர்-73
சொற்களஞ்சியம்-117
சொற்சுவை-50
சோ
சோதிடம்-16
டி
டி. கே. சி, ரசிகமணி-9
த
தசரதன்-96
தண்டியலங்காரம்-62
தமயந்தி-97
தமிழறிஞர்-23
தமிழ் பயிற்றும் முறை-59, 109
தருமன்-83
தனிச் செய்யுள் சிந்தாமணி-19
தனிப்பாடல்கள்-76
தனிப்பாடல் திரட்டு-19
தா
தாமரை-81
தி
தியபால்டு-74
திரட்டு நூல்-19
திரிவிக்கிரமாவதாரம்-73
திருச்செந்தூர் பிள்ளைத் தமிழ்-14
திருதராட்டிரன்-52
திருத்தக்க தேவர்-84, 87

திருப்புகழ்-47
திருமால்-12
திருவாசகம்-40,102
திருவாசகப் பாக்கள்-43
திரு. வி. க-4,47
திருவிளையாடற்புராணம்-15
திரௌபதி-68
திறனாய்தல்-111
திறனாய்வாளர்களின் குறிப்புகள்-24
'திறனாய்வு'-115

து

துச்சாதனன்-84
துரியோதனன்-84
துரியோதனாதியர்-52,54
தெனாலிராமன் பூனை-92

தே

தேசிகவிநாயகம் பிள்ளை-66
தேசிங்குராசன் கதை-71
தேர்வுக்காய்ச்சல்-24
தேர்வுமுறை-23
தேவாரம்-47
தேவாரம் அடங்கன் முறை-102

தொ

தொகுத்தறி முறை-36
'தொகை நூல்'-116
தொடர்புள்ள குறுக்கீடு-100
தொடை நயம்-34, 50
தொண்டைமான்-32
தொல்காப்பியம்-38

ந

நகர் நீங்கு படலம்-80
நச்சினார்க்கினியர்-25
நளவெண்பா-96
நளன்-97
நன்னூல்-7

நா

நாடு-8
நாலாயிரம்-102

நி

நினைவு கூர்தல்-95
நினைவு கூர் மறவி-100
'நெட்டுருச் செய்தல்'-92
அவசியம்-92
உளவியல் உண்மைகள்-92
கற்றலில் ஆர்வம்-95
நடைமுறையில்-93
பொருள்விளக்கம் பெற்றிருத்தல்-96
நெட்டுருச் செய்யவேண்டிய கவிதைகள்-100

நொ

'நொண்டிச்சிந்து'-64

நோ

'நோக்கு'-38

டி

பட்டம்மாள் டி. கே.-63

ப

பங்கீட்டுப் பயிற்சி முறை-97
பண்கள்-47
பதினெண் கீழ்க் கணக்கு-19
பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள்-76
பதுமம்-81
பத்துப்பாட்டு-19
பயிற்சிக் கல்லூரிகள்-15
பயிற்சிக் கல்லூரியின் பணி-26
பரதன்-81
பரமான்மா-55
பல்வேறு தவறுகள்-1
பல்வேறு நிலை மாணாக்கர்கள்-9
பவளக் கொடி மாலை-71
பழைய பாஞ்சாலி சபதம்-111

பா

பாஞ்சாலி சபதம்-70, 78,
பாடத்திட்டங்கள்-20
பாடத்திலும் குறிக்கோள் நிலை-2
பாட்டின் உயிர் நிலைக் கருத்து-49
பாட்டின் புதிய அழகுகள்-27
பாண்டவர்கள்-59
பாதிரிமாரின் மனப்பான்மை-89
'பாநலம் வியத்தல்'-89
பாநலம் வியக்கும் ஆற்றல்-26
பாரதப்போர்-11
பாரதம்-49
பாரதி-70
பாரதிதாசன்-15,36,91
பாரதிதாசன் கவிதைகள்-20
பாரதியார் கவிதைகள்-20, 104
பாரதியின் குயில் பாட்டு-34

பாரதியார் 35,41,67,68,102
பார்த்தன்-68,69

பி

பிச்சைக்காரரர் கும்மாளம்-66
பிள்ளைத் தமிழ்ப் பாட்டுகள்-33
பிள்ளைத் தமிழ் நூல்கள்-103
'பின்தூங்கி முன்னெழும் பேதையர்-31

பீ

பீமன்-83

பு

புத்திர சோகம்-45
புராணங்கள்-103
புறத்திரட்டு-19
புறப்பாடல்கள்-33
புறநானூறு-97
புறம்-32,57,97

பெ

பெரியபுராணம்-17,83

பே

பேராசிரியம்-38
பேராசிரியர்-38

பொ

பொய்த்தோற்றம்-85
பொருட்சுவை-50

போ

போப்-74

ம

மகாகாளியின்புகழ்-105
மணிமேகலை-49,83
மந்தரை சூழ்ச்சிப்படலம்-97
மருத்துவம்-16
மலரும் மாலையும்-20,66,110
மனப்பாடம் செய்த நிலையில் கவிதை-60
மனனம் செய்தல்-95

மா

மாணாக்கர்கட்குப்பயிற்சி-58
மாணாக்கர் மறக்க முடியாத அநுபவம்-16
மாரீசன்-83
மாறனலங்காரம்-62

மி

மிதிலைக்காட்சிப்படலம்-37
மிதிலைச் செல்வி-8

மீ

மீட்டறிதல்-95

மு

முக் கூடற்பள்ளு-78
முடியரசன் கவிதைகள்-20
'முடிவுத்தேர்வு'-61
முத்தொள்ளாயிரம்-22
முருகன் அல்லது அழகு-4,90
முருகுணர்ச்சி-5

முருகுணர் திறன்-4
முர்ரே-82

மூ

மூலபலவதைப் படலம்-81

மெ

மெய்ம்மை-353
மேகநாதன்-8,45

மொ

மொழிப்பாடத்தில் கவிதை-1
மொத்தைப் பயிற்சி முறை-97

யு

யுத்த காண்டம்-6, 45

ர

ரசிகமணி டி.கே.சி-9

ரா

ராய. சொ, தமிழ்கடல்-93,10,93

வ

வழிப்பறிக்காரன்-86
வள்ளுவப் பெருந்தகை-37
வள்ளுவம்-27
வள்ளுவம் வாக்கு-16
வள்ளுவன்-36

வா

வாமன அவதாரம்-73
வாயினால் 'உபதேசம்'-65
வாய்விட்டுப் படிப்பதால் பெறும் அநுபவம்-64
வாய்விட்டுப் படித்தல்-63
வாலிவதைப் படலம்-103
வாழ்க்கை உண்மைகள்-82
வாழ்க்கையின் உண்மை-82
வான நூல்-16
வான்மீக முனிவர்-30

வி

விதுரன்-83

'விரத மொழி'-56
விருப்பச் செயல்கள்-77
விரிவுப் பணித்துறை-50
வில்லி-44
வில்லிபுத்தூரார்-44
வில்லிபுத்தூரார் பாரதம்-15
வில்லிபாரதம்-12, 44,51,119
விளையாட்டு முறை-77

வீ

வீடுமன்-83
வீமன்-52, 68, 83,
வீரவழிபாடு-13

வெ

வெள்ளம்-81

வடமொழி

ஜார்ச்சாம்ஸன்-86
ஜான்ஸன் டாக்டர்-73
ஷெல்லி-111
ஹட்சன்-80

# பிழை - திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 10 | 4 | டி. கேசி. | டி. கேசி. |
| 12 | 6 | அமல நாரணைத் | அமலநாரணனைத் |
| 19 | 27 | எடடுத் தொகை | எட்டுத்தொகை |
| 23 | 5 | வேணடுமாயின் | வேண்டுமாயின் |
| 24 | 9 | சடகினைங் | சடங்கினை |
| 25 | 3 | நச்சினார்க்கினியர்ரின் | நச்சினார்க்கினியரின் |
| 30 | 30 | நடைமுரையிலுள்ள | நடைமுறையிலுள்ள |
| 34 | 10 | கொள்ன | கொள்ள |
| 36 | 6 | பேக்சுகளைக் | பேச்சுகளைக் |
| 41 | 18 | கவிதையிலுள்ள | கவிதையிலுள்ள |
| 55 | 8 | தெருபினால் | நெருப்பினால் |
| 71 | 25 | பாரதிதாசனுக்கு | பாரதிதாசனுக்குத் |
| 73 | 14 | முகைகளும் | முறைகளும் |
| 73 | 19 | எடுக்கின்றன | எடுக்கின்றது |
| 79 | 28 | இருப்பினு | இருப்பினும் |
| 83 | 35 | வீடுவன் | வீடுமன் |
| 84 | 15 | சமயாச்சாரியார்கனள | சமயாச்சாரியார்களை |
| 86 | 36 | here | her |
| 92 | 8 | கவிதைளைத் | கவிதைகளைத் |
| 92 | 27 | இதனாலன்றே | இதனாலன்றோ |
| 97 | 32 | மொத்தைப் பயிற்சி முயற்சி | மொத்தைப்பயிற்சி முறை |
| 113 | 31 | உற்சாகபடுத்த வேண்டும் | உற்சாகப்படுத்த வேண்டும் |
| 118 | 23 | ஓவ்வொவரிடமும் | ஓவ்வொருவரிடமும் |




**First Paper:** *என்ன ஆச்சரியம்?* **"Enna Aacharyam !" [1949]**

# ஓர் அறிமுகம்

**பேராசிரியர்**

# ந சுப்பு ரெட்டியார்




Books Published : **135 + 1**
Papers Published : **200** [Tamil 173 + English 27]
Endowments established: **10**
Endowment Lectures : **12**
Awards received: **8**
Prizes won : **14**
Titles conferred : **8**

## Masterpieces:

1) **Tamil Payitrum Murai [1957]**
2) **Religion & Philosophy of Naalayira Divyap-pirabhandham with special reference to Nammalwar [English][His PhD thesis ] [1977]**
3) **Kalvi Ulaviyal Kotpaadukal [1989]**
4) **Vainava Selvam [1995]**

## Financial Aid for publishing the Books:

a ) Tirumala Tirupathi Devasthanams - 21

b) Directorate of Tamil Development
Government of Tamil Nadu - 6

***Research on Professor's Books***

a) University of Madras - 1993 (leading to PhD)
b) Madurai Kamaraj University - 2017 (leading to PhD)



பேராசிரியரின் 135 நூல்களில், தெரிவு செய்யப்பெற்ற
100 நூல்கள் (முழுமையாக)
**http://tinyurl.com/nsr100collections**
எனும் இணையதளத்தில் உள்ளன. [freely downloadable]



# India Book of Records

# CERTIFICATE

## CENTENARY CELEBRATIONS OF PROF DR. N SUBBU REDDIAR

**Prof Dr S Ramalingam (born on 13 Oct 1949) Organizing Secretary, Na Subbu Reddiar 100 Educational Trust, Chennai, Tamil Nadu, has conceived, designed and meticulously executed 108 Centenary Events throughout Tamil Nadu during the Centenary Year (2015-2016) of Prof. Dr. N Subbu Reddiar who served the cause of education for 65 years andwritten 135 books in various fields (100 books after retirement).**





**Biswaroop Roy Chowdhury**
Chief Editor
**India Book of Records**

**Date: March 19, 2018**



**ISBN: 978-81-936450-6-2**





வேறொருவரை திருமணம்
செய்திருக்கலாம்,
என்ற எண்ணம் ஒருமுறைக் கூட
வராத திருமண வாழ்க்கை தான்..
காதல் நிறைந்த வாழ்க்கை..